# கு ம ர கு ரு

பொறியியற் கல்லூரி | வணிக மேலாண்மைப் பள்ளி | வேளாண்மைக் கல்லூரி
பன்முகக் கலை அறிவியல் கல்லூரி | சக்தி மேம்பாட்டுக் கல்வி மையம்

**ஒழுக்கமே வாழ்வு**



*"கல்வியைப் போலவே தொழில்களும் கடவுளுக்குச் சமமானவை. படிக்கும் காலத்திலேயே தொழிலுக்கான பயிற்சியை மாணவர்கள் பெறவேண்டும்."*

**அருட்செல்வர் டாக்டர்.நா.மகாலிங்கம்**






## குமரகுரு பன்முக கலை அறிவியல் கல்லூரி

அடிப்படை அறிவியலிலிருந்து சமூக அறிவியல் வரையும், இலக்கியத்திலிருந்து நுண்கலைவரையும் அனைத்தையும் வழங்கி, சமூக முன்னேற்றத்திற்கான ஆய்வுகளை முன்னெடுத்து, வாழ்நாள் முழுதும் கற்றலில் ஆர்வம் கொண்டு, உலகியலின் போக்கில் தாக்கத்தை ஏற்படுத்தும் தனியாத ஆர்வம் கொண்ட இளைஞர்களை உருவாக்கும் கல்வி நிறுவனம்.




## குமரகுரு தொழில்நுட்பக் கல்லூரி

150 ஏக்கர் வளாகத்தில் 6000 மாணவர்களுடனும் 400 பேராசிரியர்களுடனும் 34 ஆண்டுகளாக 'ஒழுக்கமே வாழ்வு' எனும் உயர் குறிக்கோளுடன், ஆராய்ச்சியையும் தொழில் இணைவையும் அடிப்படையாகக் கொண்டு தேசிய தர வரிசையில் முதல் நூறு நிறுவனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.




## கே.சி.டி. வணிக மேலாண்மைப் பள்ளி

தொழிலகங்கள் மற்றும் சமூகத்தின் முன்னேற்றத்தில் முனைப்புடன் செயல்படும் இளைய தலைமுறைக்கான தலைவர்களை உருவாக்கும் இந்தியாவின் முதல் 100 நிறுவனங்களில் ஒன்றாகும் கல்வி, மனித வளம், மாணவர்கள் சேவை, ஐ.டி. தொழில்நுட்பம், தொழிலினைவு, சமூக பங்களிப்பு போன்றவைகளில் மிகுந்த ஈடுபாட்டுடன் செயல்படும் இணையற்ற நிறுவனம்.




## குமரகுரு வேளாண்மைக் கல்லூரி

தொழில்நுட்பம் மூலமாக வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கி, வேளாண்மையைத் தற்சார்புத் தொழிலாக மாற்றுவதற்குரிய வேளாண்மைக் கல்வியை, கிராமப்புற மாணவர்களுக்கு வழங்குவதை நோக்கமாகக் கொண்ட நிறுவனம்.

## ஆராய்ச்சி அமைப்புக்கள்

**மாணவர் ஆராய்ச்சிகள்**




GARAGE




**தொழிலக ஆராய்ச்சிகள்**












## போர்ஜ்

கே.சி.டி.யின் ஓர் அங்கமான 'போர்ஜ்' வளர்ந்து வரும் நவீனத் தொழில்நுட்பத்தையும், கணினி அறிவியலையும் இணைத்து ரோபோட் தானியங்கிஇயந்திரங்களையும் செயற்கை அறிவூட்டல் கருவிகளையும், டிஜிட்டல் வணிகத்தையும் வளர்த்தெடுத்துப் பல்வேறு தொழில் துறைகளிலும் இந்த நுண்ணறிவுப் பயன்பாட்டைக் கொண்டுசெல்லும் நோக்கில் செயல்படுகிறது.

குமரகுரு கல்வி வளாகம்
சரவணம்பட்டி
கோயம்புத்தூர்
**0422 2661100**
**kct.ac.in**
**kctbs.ac.in**
**kclas.ac.in**
**kia.ac.in**



# சுரங்கம்

# கட்சிக் கொடிகளைக் காட்சிக்கு வைக்கலாமா?



டாக்டர் நா. மகாலிங்கம்

*கட்சிகளுக்குக் கொள்கைகள்தான் முதலானவையே தவிர, கொடிகள் அல்ல. பிரிட்டிஷாரிடமிருந்து விடுதலை பெற, தேசிய இயக்கமான காங் கிரசுக்குக் கொள்கையும் தேவைப்பட்டது, கொடியும் தேவைப்பட்டது.*

*இப்போதைய இந்தியா சுதந்திர ஜனநாயக இந்தியா. இதில் மக்களுக்கு நலத் திட்டங்களைத் தருவதில் கட்சிகள் போட்டி போட்டுக் கொண்டு செயல்படக் கொடிகள் எதற்கு?*

*கட்சிக் கொடிகளைக் கைவிட்டுத் தேசியக் கொடிக்கு மரியாதை செலுத்தினால், தேசபக்தியை வளர்க்கலாம். 22 ஆண்டுகளுக்கு முன்பே (1997) இதைப் பற்றிச் சிந்தித்து எழுதிய அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களின் கட்டுரையை இம்மாதச் 'சுரங்கம்' பகுதியில் வாசகர்களின் சிந்தனைக்கு வழங்குகிறோம்.*

*– இ.ஆர்.*

இந்திய தேசம் 1947–இல் பாகிஸ்தான் பிரிவினைக்குப் பிறகு இந்த 50 ஆண்டுகளில் இரண்டாவது பிரிவினையைச் சந்திக்கவில்லை. பிரிவினைக்கான காரணங்களைப் பிரச்சாரம் செய்தவர்கள் எல்லாம், ஒவ்வொருவராகத் தேசிய நீரோட்டத்தில் கலந்து, மாநில அரசியலிலிருந்து தேசிய அரசியலிலும் புகுந்து மகத்தான பணி செய்யவும் தொடங்கிவிட்டனர்.

அதனால்தான் இந்தியா இரண்டாவது பிரி வினையைச் சந்திக்கவில்லை. ஆனால், பாகிஸ் தானிலிருந்து பங்களாதேசம் பிரிந்தது. பாகிஸ் தானிலேயே இன்னொரு பிரிவினை ஏற்பட் டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

பாகிஸ்தானில் உருது மொழி பேசும் இஸ்லாமியர் உயர்ந்தவர்களாகவும், உருது மொழி பேசாத இஸ்லாமியர்கள் தாழ்த்தப்பட்டவர்களாகவும் இருக்கின் றனர். மேலும், ஸன்னி – ஷியா என்ற பேதம் சிறுபான்மையினரான ஷியாக் களை மிகவும் பாதிக்கிறது.



காந்தி ஜி

சமயத்தால் இஸ்லாமியர்களாக இருந்தாலும், அனைவரும் சமத்துவமாக அங்கு இல்லை. இந்தியாவோ சமயத்தால் பல்சமய நாடு. இனத் தாலும் மொழியாலும் அப்படித்தான்.

வேற்றுமைகள் நூறு வகையாக இருந்தாலும், அந்த வேற்றுமைக்குள் ஓர் ஒற்றுமை இழை யோடிக் கொண்டிருப்பதைக் காண முடியும். வேற் றுமைகளில் ஒற்றுமைதான் இந்தியாவின் பன் னெடுங்காலமாக இருந்த பலமாகும்.

வரலாற்றில் ஒரு பிழைத் திருத்தப்படாம லேயே விடப்பட்டுவிட்டது. பிரிட்டிஷ் ஏகாதிபத் தியம்தான் இந்தியா என்ற அரசியல் ஒற்று மையை உண்டாக்கியதென்று மேலைநாட்டுச் சரித்திர ஆசிரியர்கள் கூறியுள்ளனர்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இந் தியாவை மட்டுமல்ல; இலங்கை, பர்மா, சிங்கப்பூர், மலேசியாவையும்தான்

ஆண்டது. பிரிட்டிஷ் இந்திய ஆட்சிப்பரப்பில் சிங்களமும் பர்மா வும் சில காலம் இருந்தன. 1936–இல் சிங்களமும் பர்மாவும் தனியாகப் பிரிக்கப்பட்டன.

அப்படி என்றால், இந்தியா என்பது மட்டும் எப்படி பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் ஏற்படுத்திக் கொடுத்த ஆட்சிப் பரப்பாக இருக்க முடியும்?

இங்கே சமஸ்தானாதிபதிகள் இருந்திருக்கலாம். ஜமீன்தார்கள் இருந்திருக்கலாம். அரசர்கள் இருந்திருக்கலாம். ஆனாலும் இது இந்தியாவாகத்தான் இருந்தது.

இதனை இந்தியாவாக வைத் திருந்த இழையோட்டம் இந்த நாட் டின் பண்டைய ஆன்மிகச் சக்தி தான். அது 5 ஆயிரம் ஆண்டுகள் பழமையுடையது என்று சுவாமி விவேகானந்தர் சுட்டிக் காட்டி இருப்பதை மறந்துவிட்டு, 200 ஆண்டு ஆங்கிலேய ஆட்சியி னால்தான் இந்தியா வந்தது என்று சொல்வது தவறு. மேற்கத்தியச் சரித்திர ஆசிரியர்கள்தான் இவ் வாறு திரித்துக் கூறியுள்ளனர்.

ஆன்மிகத்தால் இந்தியா ஒரே தேசமாக இருந்து வந்துள்ளதே தவிர, ஆங்கிலேயர் அடிமைப்படுத்தி ஆட்சி செய்ததால் அல்ல.

கங்கைக்கு யாத்திரை செல் வதைத் தென்பகுதி மக்கள் புண்ணிய மாகக் கருதுவது போல, ராமேஸ்வரம் வந்து தரிசிப்பதை வடஇந்திய மக்கள் புண்ணியமாகக் கருதுகிறார்கள்.

சுவாமி விவேகானந்தர் வங்காளத் திலிருந்து கன்னியாகுமரி வந்து இந்து மகா சமுத்திரப் பாறையில் அமர்ந்து தியானம் செய்ததை எண்ணிப் பாருங் கள். இதுதான் இந்திய ஆன்மிகத்தில் உள்ள இழையோட்டம்.

இந்தியாவின் ஆன்மிகம் சகிப்புத்


விவேகானந்தர்


திலகர்


நேதாஜி

தன்மைக்குச் சான்றாக நிற்பது. இந்தியாவின் ஆன்மிகம் சமயம் சம்பந்தப்பட்டது என்பதையும்விட, ஞானத் தேடலுக்கு நம்மை அழைத்துச் செல்வது என்பதே சரியானது.

அந்தரங்கமாக அமைந்துள்ள இந்த ஒற்றுமை அம்சங்களை மேலும் செழிப்பாக வளர்த்திடும் செயல்களில், இந்திய சுதந்திரத் திற்குப் பிறகு ஈடுபட்டுள்ளோம்.

ஆனால், 'அடிப்படை மதவாதி கள்' ஒவ்வொரு சமயத்திலும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களுக்குச் சகிப்புத்தன்மை இல்லை. அத்தகைய அடிப்படை வாதிகளால் ஏற்படும் சமயக் கல வரங்கள்தான் நவகாளிகளை நாள் தோறும் உருவாக்கிவிடுகின்றன.

சமயக் கலவரங்களோடு இப் போது சாதிக் கலவரங்களும் ஏற் பட்டு விடுகின்றன. சாதி, சமயம், இனம், மொழி என்று நமது சமு தாயம் திட்டுத் திட்டாக ஆக்கப் பட்டு, ஒவ்வொரு திட்டும் ஒவ் வொரு தீவுபோலத் துண்டிக்கப் பட்டுக் கிடக்கின்ற நிலைதான் இன்று இருந்து வருகிறது.

சமுதாயம் முழுமையும் ஒரே சம வெளி போல அமைவதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதுதான் நம் முன்புள்ள சவால்.

நம்மைப் பிரித்து வைக்கும் மதில் சுவர்கள் ஏராளம். ஆனால், இணைத்து வைக்கும் பாலங்கள்தான் மிகமிகக் குறைவு.

மதில் சுவர்களைத் தகர்க்கவும் வேண்டும், பாலங்களை மேலும் கட்ட வும் வேண்டும். இவை இரண்டும் சம காலத்தில் போர்க் கால வேகத்தில் நடைபெற வேண்டும். மதில் சுவர் களைத் தகர்க்கும் பணி மகத்தானது என்றால், பாலங்களைக் கட்டும் பணி அதைவிட மகத்தானது.

தமிழக அரசு சாதிப் பெயர்களை மாவட்டங் களிலிருந்தும், போக்குவரத்துக் கழகங்களி லிருந்தும் நீக்கியது. இது தமிழக அரசு செய்த துணிச்சலான காரியமாகும்.

இவை போதாது. இன்னும் மிச்ச சொச்சங்கள் இருக்கத்தான் செய்கின்றன. பல்கலைக் கழகங் களுக்கு வைக்கப்பட்டுள்ள சமுதாயவாதிகளின் பெயர்களையும் நீக்கத்தான் வேண்டும். அரசுக் கட்டடங்களுக்குச் சூட்டப்பட்டுள்ள அரசியல் தலைவர்களின் பெயர்களையும் நீக்கத்தான் வேண்டும். சிலைகள்கூடப் பழைய நினைவு களைத் தூண்டாமல் கலவரங்களைத் தூண்டு வதற்குத்தான் காரணமாகின்றன. ஞாபகச் சின் னங்களைப் படங்களாகவோ, மார்பளவுச் சிலை களாகவோ பொதுக் கட்டடங்களில் வைக்கலாம்.

இவ்வாறு நீக்க வேண்டிய இந்த நீண்ட பட்டியலில் முதலாவதாகச் சேர்க்கப் பட்டிருக்க வேண்டியது ஒன்று உண்டென்றால், அது நமது நாட்டில் உள்ள கட்சிகளின் கொடிகள்தான்.

காங்கிரஸ் அமைப்பை 1885–இல் ஹ்யூம் என்ற ஆங்கிலே யர்தான் தொடங்கினார். அப் போதிருந்த இந்தியர்கள் இங்கி லாந்து அரசனை மாட்சிமை பொருந்திய மன்னர் என்று விசு வாசமாக அழைப்பதில் நிகரற்று விளங்கினார்கள். அப்படி இருந்த போதிலும் அவர்களுக்குள்ளும் சிறுசிறு கோபதாபங்கள் பிரிட்டி ஷார் மீது இருக்கத்தான் செய்தன. அத்தகையவர்கள் தங்கள் ஆத்திரங்களை மனுக்கள் மூலமாக மன்னருக்குச் சமர்ப் பித்துத் தங்கள் குறைகளை நிவர்த்தி செய்து கொள்வதற் காக நிறுவப்பட்ட ஒரு சங்கம் தான் காங்கிரஸ்.

அந்தக் காங்கிரஸ்தான் அரசியல் விழிப்புணர்வு பெற்று விடுதலை இயக்கமாக மாறியது. திலகரைப் போன்ற தீவிரவாதிகளும் கோகலே போன்ற மிதவாதிகளும் உருவானார்கள். தீவிரவாதம் – பகத்சிங், ராஜகுரு, சுகதேவ்களை உருவாக்கியது. நேதாஜி தலைமை யில் இந்திய தேசிய ராணுவம் வரை தீவிரவாதம் சென்றது. சுதந்திர இந்தியாவின் அரசு இந்தியா விற்கு வெளியே சிங்கப்பூரிலிருந்து பிரகடனமும் செய்யப்பட்டது.

ஜப்பானின் தோல்வியும் நேதாஜியின் விமான விபத்தும் ஆயுத பலம் மூலம் இந்திய விடு தலையை உருவாக்கும் முயற்சியை வெற்றிபெற முடியாமல் செய்துவிட்டன.

கோகலேயில் தொடங்கிய மிதவாதம், காந்திஜி தலைமையில் உலகத்திற்கே புதுமை யான அகிம்சைப் போராட்டத்தினை உருவாக் கியது. இந்தியாவை ரத்தம் சிந்தாமல் அது விடுதலைக்கு அழைத்துச் சென்றது.

ஆனாலும் இந்திய தேசிய ராணுவத் தளபதி யாக இருந்த நேதாஜி, தேசப்பிதா என்றுதான் காந்திஜியை வணக்கத் தோடு அழைத்து வந்தார். இதே போல காந்திஜியும் நேதாஜியை ‘எனது வீரமகன்’ என்றே கூறி வந்தார்.


பகத்சிங்

மிதவாத அகிம்சையானாலும் தீவிரவாத ராணுவப் புரட்சியாக இருந்தாலும் வீரமும் தியாகமும் தான் விடுதலைக்குத் தேவையான உயிரும் உடலுமாக இருந்தன.

நமது வீரத்தையும் தியாகத்தையும் நாம் சிந்தும் ரத்தத்தின் மூலமாகத் தான் விளக்கிக் கூறமுடியும். ரத்தத் தின் நிறம் சிவப்பு. சுதந்திரத்திற் காகப் பாடுபட்ட காங்கிரஸ் கட்சியின் மூவர்ணக் கொடி யில் முதல் நிறம் சிவப்புதான். வீரத்திற்கும் தியாகத்திற்கும் உரிய வண்ணமாக இந்தச் சிவப்பு அமைந்தது.


ராஜகுரு – சுகதேவ்

விடுதலைக்குப் பிறகு அமைதி தேவை. அமைதி – சமாதானம் – ஆகியவற்றைக் குறிப்பிடுவதற்கான நிறம் தான் வெள்ளை.

அபிவிருத்தி –

முன்னேற்றம், செழுமை ஆகியவற்றிற்கான நிறம் தான் மூன்றாவதான பச்சை நிறம்.

வெள்ளை நிறத்தின் மத்தியிலுள்ள கை ராட்டை, சுதேசியத்தைச் சுட்டிக்காட்ட காங்கிரஸ் கையாண்ட சின்னமாக விளங்கிற்று. இந்த வகை யில் அமைந்த கொடிதான் காங்கிரஸ் கட்சியின் மூவர்ண ராட்டைக் கொடி.

அப்போது தேசத்தின் அரசுக்கு ஒரு கொடி தேவைப்பட்டது. அதுபற்றி உடனடியாக விவாதிக் கப்பட்டது. காங்கிரஸ் கட்சியின் மூவர்ணக் கொடியையே தேசியக் கொடியாகத் தேர்வு செய் தனர். அதில் ஒரே ஒரு மாற்றம். நடுவில் கைராட் டைக்குப் பதிலாக அகிம்சையின் அடையாளமாக அசோகச் சக்கரத்தைப் போட்டனர். அதேசமயம் பழைய ராட்டைக் கொடியைக் காங்கிரஸ் தனது கட்சிக் கொடியாக்கிக் கொண்டது.

தேசியக் கொடியும், காங்கிரஸ் கொடியும் ஒரே மாதிரி அமைந்துவிட்டது பெரிய குறை. அரசியலில் காங்கிரஸ் கட்சியை எதிர்த்தவர்கள் காங்கிரஸ் கொடி போன்ற தேசியக் கொடிக்கு மரியாதை தர மறுத்தனர்.

காங்கிரஸ் தனிக்கொடி வைத்திருந்ததைக் கண்ட சோஷலிஸ்டுகள், ஜனதா தளம், பாரதிய ஜனதாக கட்சி முதலிய அகில இந்தியக் கட்சி களும் மற்றுமுள்ள மாநிலக் கட்சிகளும் தனித் தனிக் கொடிகளை அமைத்துக் கொண்டன.

இவற்றோடு சேர்ந்து முஸ்லீம் லீக், இந்து முன்னணி முதலிய சமயத்தின் அடிப்படையில் செயல்படும் அமைப்புகளும் தங்கள் சமயங்களின் சார்பாகத் தனித் தனிக் கொடிகளை ஏற்படுத்திக் கொண்டனர்.

இதனையொட்டி சாதிப் பிரிவுகளைக் காட் டும் சமுதாயக் கொடிகளும் பறக்கத் தொடங்கின. இனத்தின் அடிப்படையிலும் கொடிகள் தோன் றின. புலி, வில், மீன் பொறித்த மூவேந்தர்களின் கொடிகளும் வந்தன.

கட்சி என்றாலே அதற்கென ஒரு கொடி கட்டாயம் இருந்தாக வேண்டும் என்று கருதி, கட்சிகள் தோன்றுகிற போதெல்லாம் கொடிகளும் தோன்றின.

இந்தக் கட்சிக் கொடிகள் ஒவ்வோர் ஊரிலும் கம்பங்களில் பறக்கவிடப்பட்டுக் கிழிந்து போன நிலையில், அவற்றில் உள்ள நிறங்கள் மங்கி மறைந்து போய்ப் பரிதாபமாகப் பறந்து கொண்டிருப்பதையும் பார்க்கலாம்.

கட்சிகள், தங்கள் மாநாடுகளை நடத்துகின்ற போது கட்சிக்கான கொடியை ஏற்றிய பிறகுதான் மாநாடு தொடங்கப்படுகின்ற ஒரு சம்பிரதாயம் உருவானது. இது எப்படி – எப்பொழுது தோன் றியது?

அடிமைப்பட்ட நம் தேசத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் யூனியன் ஜாக் கொடி மட்டும் தான் தலைநகரங்களில் உள்ள அரசு அலுவலகங் களில் பறந்து கொண்டிருந்தது. இங்கிலாந்து மன்னர் இந்தியாவில் ஆட்சி செய்து வருகிறார் என்பதை அக்கொடி அடையாளமாகக் காட்டி வந் தது. கொடி பறக்கிறது என்றால், அது ஓர் ஆதிக் கத்தை வெளிப்படுத்துவதற்குத்தான் பறக்கும்.

பண்டைய காலத்திலும் ஒரு மன்னன், மாற்றான் தேசத்தை ஜெயித்தால் முதலில் அவன் செய்வது கொடிக் கம்பத்தில் அந்தத் தேசத்துக் கொடியை இறக்கிவிட்டு, தனது தேசத்துக் கொடியை ஏற்றுவதுதான்.

இந்தியாவில் யூனியன் ஜாக் கொடியை இறக்கிவிட்டு நமது தேசத்தின் சுதந்திரக் கொடியை ஏற்றுவதற்கான போராட்டம் தொடர்ந்து நடைபெற்றது. காங்கிரஸ் இயக்கம் அந்த விடுதலைப் போராட்டத்திற்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டது. காங்கிரஸ் மாநாடு கல்கத்தாவில் – திரிபுராவில் – கராச்சியில் என்று எங்கு நடந்தாலும், மாநாட்டின் முகப்பில் கொடி ஏற்றிய பிறகு தான் மாநாடு தொடங்கும். ஏனெனில், விடுதலைக்கான போராட்டம் அது. இவ் வாறுதான் கட்சி மாநாடுகளில் கொடி யேற்றும் வழக்கம் தோன்றியது.



அந்த அடிப்படையில் தான் விடுதலை நாளான ஆகஸ்டு 15–ஆம் நாளன்று டெல்லி செங்கோட்டையில் பிரதமர் கொடியேற்றி உரை நிகழ்த்துகின்றார்.

இதேபோல மாநிலத் தலைநகரங்களில் உள்ள தலைமைச் செயலகங்களில் மாநில முதல்வர்கள் கொடி ஏற்றுகின்றனர்.

தேசத்திற்கு ஒரு கொடி என்பதுதான் உலகத்தில் உள்ள எல்லாத் தேசங்களிலும் வழக்கமாக உள்ளது. இங்கிலாந்தில் கன்சர்வேட்டிவ் கட்சி என்றும், தொழில் கட்சி (லேபர் கட்சி) என்றும், லிபரல் கட்சி என்றும் மூன்று கட்சிகள் உள்ளன. அந்த மூன்று கட்சிகளுக்கும் தனித்தனிக் கொடி கிடையாது. யூனியன் ஜாக் கொடி ஒன்றுதான் அந்த தேசத்தில் ஒரே கொடி.

அமெரிக்காவில் குடியரசுக் கட்சி என்றும், ஜனநாயகக் கட்சி என்றும் இரண்டு கட்சிகள் மாறி மாறி ஆட்சிக்கு வருகின்றன. அங்கும் ஒரே கொடிதான். அங்கும் தனித்தனிக் கொடிகள் கட்சிகளுக்குக் கிடையாது. ஆனால், தேர்தல்களில் அக்கட்சிகளுக்கென்று கழுகு, கழுதைச் சின்னங்கள் உள்ளன.

ரஷ்ய தேசத்தினைப் பற்றிக் குறிப்பிட வேண்டிய அவசியமே இல்லை. ஒரே கொடி. கட்சியும் ஒரே கட்சிதான். இப்போது அங்கு ஜனநாயக வாசலைத் திறந்துவிட்ட பிறகும் புதிதாகக் கட்சிகள் தோன்றினாலும், கொடிகள் தோன்றவில்லை. சீன தேசத்திலும் ஒரே கொடிதான்.

இதேபோல ஜெர்மனி, பிரான்சு முதலிய ஐரோப்பிய நாடுகளிலும், ஜப்பான் போன்ற ஆசிய நாடுகளிலும், நம்மை விட்டுப் பிரிந்து சென்ற பாகிஸ்தானிலும், வங்காள தேசத்திலும் தேசியக் கொடி ஒன்றுதான் பறந்து கொண்டிருக்கிறது. தேச மக்களுக்கு அந்த ஒரு கொடிதான் தெரியும்.

இவ்வாறு, ஜனநாயக நாடுகளிலும் சமயச் சார்பு நாடுகளிலும் சமதர்ம நாடுகளிலும் ஒரே கொடிதான் பறக்கிறது. அது அந்த நாட்டின் தேசியக் கொடிதான்.

ஆனால், நமது இந்திய நாட்டில் தேசியக் கொடி என்று ஒன்று இருக்கிறது. தேசியக் கொடியைக் காட்டிலும் மக்களுக்குத் தெரிந்த கொடிகள் கட்சிக் கொடிகள்தான். ஒவ்வொரு கட்சியும் ஒரு தனிக் கொடியை வைத்துக் கொண்டு மக்களிடத்தில் பிரச்சாரம் செய்து வருகின்றது.

இதன் காரணமாக மக்களுக்குக் கட்சிகளின் மீது ஏற்படுத்தப்படுகிற பக்தி, தேசத்தின் மீது ஏற்படவில்லை. கட்சி பக்தியைக் காட்டிலும், தேச பக்தி முக்கியமானது – முதன்மையானது.

உலக நாடுகளின் வழக்கத்தை ஒட்டி நமது நாட்டிலும் தேசியக்கொடி ஒன்றே ஒன்று மட்டும் தான் பறப்பதற்கு உரிமை உடையதாக இருக்க வேண்டும். இந்திய அரசியல் சட்டம் வழங்கியுள்ள உரிமைகளின் அடிப்படையில் செயல்படுவது உண்மையாக இருக்குமானால், ஒவ்வோர் அரசியல் கட்சியும் நம் தேசியக் கொடிக்கு ஏற்படுத்தித் தர வேண்டிய மரியாதையைப் பற்றி எண்ணிப் பார்க்க வேண்டும். ஒவ்வொரு கட்சிக்கும் அதில் பங்கு இருக்கிறது.

உலகத்தில் மற்ற நாடுகளில் உள்ளதைப் போலவே நமது நாட்டிலும் தேசியக்கொடி ஒன்று மட்டும்தான் பறக்க வேண்டும். கட்சிக் கொடிகள் அனைத்தையும் கைவிட வேண்டாம். கௌரவமாக அருங்காட்சியகத்தில் வைத்து அவற்றைப் பாதுகாக்கலாம்.

இந்த நல்ல காரியத்தை முதன் முதலாகத் தொடங்கி வைக்க வேண்டிய கடமைப்பாடு காங்கிரஸ் கட்சிக்குத்தான் உண்டு. ஏனென்றால், தேசியக் கொடியைக் காங்கிரஸ் கொடி போலவே அமைத்துவிட்டோம். ஆகவே, காங்கிரஸ் கட்சி தான் தனது மூவர்ணக் கொடியை மியூசியத்திற்கு முதலில் அனுப்ப வேண்டும். அது நிகழ்ந்த பிறகு, இதர கட்சிகளும் தங்கள் கொடிகளை அருங்காட்சியகத்திற்கு அனுப்ப முன்வர வேண்டும்.

அரசியல் கட்சிகள் நடத்தும் மாநாடுகளில் கூட தேசியக் கொடியை ஏற்றும் பழக்கத்தையும், பண்பாட்டையும் உருவாக்க வேண்டும்.

இவ்வாறெல்லாம் செய்வதன் மூலம் தேசியக் கொடிக்கு உணர்வுப் பூர்வமான ஒரு மரியாதையை நாம் உருவாக்க முடியும். ●

# வென்றிடு நீ தோழனே!



கவிஞர் பொன்முடி சி. சுப்பையன்

இமிழ்கட லுக்குள் இமையம் இருக்கையில்
பஃறுளி யாற்றில் படகுவிட் டவன் நீ!

மன்பதை மாந்தர் மாடு மேய்க்கையில்
தென்மது ரையிலே தமிழ்ஆய்ந் தவன் நீ!

உலகம் மடமையில் உறங்கிக் கிடக்கையில்
பலகலை தேர்ந்து பாத்தொடுத் தவன் நீ!

குபேர நாடெலாம் குப்புறக் கிடக்கையில்
கபாட புரத்தில் கலைவளர்த் தவன் நீ!

மதங்கள் தமக்குள் மற்போர் புரிகையில்
பொதுமறை வகுத்துப் புதுமைசெய் தவன் நீ!

தொன்மையும் நுண்மையும் வண்மையும் உண்மையும்
வன்மையும் படைத்தவர் வழிவந் தவன் நீ!

தனக்கென்று வாழாத் தமிழன் நீ, இளைஞன் நீ!
உனக்கொன்று சொல்வேன், உன்னிப் பாய்க்கேள்!

பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல என்று வகுத்தவ னும் நீ!

மேல்நோக்கி எரிந்து விளக்குகள் சுடர்ந்த
காலம் இன்று கடந்துபோய் விட்டது!

தலைகீ ழாக விளக்குகள் எரியும்
நிலையில் வாழ்கிறோம், நினைவிற் கொள் நீ!

பாட்டனின் எருதுகள் உழுத புன்செயில் – இன்று
டிராக்டர் உழுவதைத் தடுக்க முடியுமா?

கழிந்து போன காலப் பெருமையில்
இழந்து விடாதே இன்றையப் பொழுதை!.

பந்தயக் களத்தில் அறிவியல் குதிரைகள்
பாயும் போட்டியில் நீயும் கலந்துகொள்!

வேண்டாம் என்று விலகி நீ நின்றால்
"வேண்டாம் இவன்" என உலகுனை விலக்கும்!

இயற்பியல் வேதியல் உயிரியல் வானியல்
பயிரியல் பொறியியல் கணக்கியல் கணினி

அனைத்திலும் தேர்ச்சிகொள்! அனைத்தையும் ஆய்வுசெய்!
வினைத்திறன் இருந்தால் வெற்றிகள் குவியும்!

"உயிர்களில் மனிதனே உயர்ந்தவன் என்றால்
மனிதரில் தமிழனே மாண்புகழ் உடையோன்"

என்றுனை உலகம் ஏற்றிடச்
சென்றிடு திசையெலாம் வென்றிடு தோழனே!



# பொள்ளாச்சி தமிழிசைச் சங்கத்தின்

# 48-வது ஆண்டு விழா...!

**10**.5.2019 அன்று நடந்த விழாவில் பத்மஸ்ரீ டிரம்ஸ் சிவமணிக்குப் பாராட்டு விருது வழங்கும் ஏ.பி.டி. எக்சிகியூட்டிவ் டைரக்டர் மா. ஹரிஹரசுதன். உடன் பி.ஏ. கல்வி நிறுவனங்களின் தாளாளர் திரு. அப்புக்குட்டி, பொள்ளாச்சி தமிழிசைச் சங்கச் செயலாளர் திரு. ஜி.டி. கோபாலகிருஷ்ணன் ஆகியோர்.



விழாவிற்கு வருகைதந்த கூட்டத்தினர்

கட்டுரை

# பழகிப் பார்த்ததில் இவர்கள்... 6

## கவிஞர் கே.சி.எஸ். அருணாசலம்


கே.சி.எஸ். அருணாசலம்

அப்போது நான் கல்லூரி மாணவன். கார் காத்த வேளாளர் சங்க ஆண்டு விழா கோவையில் நடந்து கொண்டிருந்தது. ஏதோவொரு பரிசு பெறப் போனதாக ஞாபகம். அந்த விழாவிற்கு யாரோ ஒரு பெரிய கவிஞரும் வரப் போவதாகப் பேசிக் கொண்டார்கள்.

அவர் பொதுவுடைமை வாதி என்றும், ஜாதி சங்கக் கூட்டங்களுக்கு வருவதில்லை என்றும், அவருடைய சம்பந்தி சங்கத் தலைவர் என்பதால் கட்டாயப்படுத்தி அழைத்து வருகிறார்கள் என்றும் சொல்லப்பட்டது.

சொன்னவர்களுக்கும் அவருடைய பெயர் தெரியவில்லை. சற்று நேரத்தில் அந்தக் கவிஞர் சபைக்குள் நுழைந்தார். நல்ல உயரம். வழுக்கைத் தலை. வெள்ளை ஜிப்பா. வெள்ளை வேட்டி.

அவர்தான் கவிஞர் கே.சி.எஸ். அருணாசலம் என அறிந்த மாத்திரத்தில் எனக்குச் சொல்ல முடியாத மகிழ்ச்சி. சில வாரங்களுக்கு முன்புதான் அவருடைய 'கவிதையின் கைவாள்' என்னும் நூலை வாசித்து முடித்திருந்தேன். நல்ல கவிதைகளை வாசிக்கும் போது அவை எனக்கு உடனே மனனம் ஆகி விடும்.



அப்படி அந்தத் தொகுப்பிலிருந்தும் பல கவிதைகள் எனக்கு மனனம் ஆகியிருந்தன. அங்கே அவருக்குத் துண்டு அணிவித்து மாலை அணிவித்தனர். அடுத்து அவரைப் பேசச் சொல்லலாம் என்று நினைத்துக் கொண்டிருந்தனர். அவர் பெயரைத் தாண்டி அவரைப் பற்றிய மற்ற தகவல்கள் அங்கே பெரும்பாலானவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை.


குன்றக்குடி அடிகளார்

நான் எழுந்து போய் அமைப்பாளர்களிடம் "முதலில் அவரைப் பற்றி நான் பேசுகிறேன். பிறகு அவர் பேசட்டும்" என்றேன்.

கே.சி.எஸ். அவர்களுக்கு என்னைத் தெரியாது. நான் ஒலிபெருக்கி முன்னர் போய் 'இங்கே வந்திருப்பவர் ஒரு பெரிய கவிஞர். கவிதையைத் தன் சுவாசமாகக் கருதுபவர். தன்னுடைய வாழ்வை சமூக நலனுக்காக அர்ப்பணித்து இருப்பவர். அவர் யார் என்று உங்களில் பலருக்குத் தெரியாமல்

மரபின் மைந்தன் முத்தையா

இருக்கலாம். அவர் யார் என அவரே சொல்கிறார், கேளுங்கள்' என்று அவருடைய கவிதையைச் சொல்லத் தொடங்கினேன்.

"கவிதை எனக்கு ஒரு கை வாள் – மார்பில்
கவசம் அதில் ஒரு வாய்மை
புவியில் தீமைகள் வீழ – நான்
போர் செய்யும் ஓர் படை வீரன்
ஆயுதம் கேடயம் இல்லை – எனக்கு
அவற்றின் தேவையும் இல்லை
தீயன சூழ்ந்திடும் போது – என்
சிந்தனை பாசறை ஆகும்"

என்ற கவிதையைச் சொல்லி, அதில் எனக்கு மிகவும் பிடித்த ஒரு வரியைச் சொன்னேன். மொழி தோன்றும் முன்பே ஒருவனுடைய மனதில் கற்பனைகள், கவித்துவமான சிந்தனைகள் ஆகியவை தோன்றியிருக்கக் கூடும் என்பது கே.சி.எஸ். அவர்களின் நம்பிக்கை.

"எழுத்தும் தோன்றிடும் முன்னே – என்றோ
இருந்த கவி மனத்துள்ளே
விழித்து எழுந்தது பாடல் – அதை
வேண்டி வளர்ப்பது என் வேலை"

இந்த வரியை மேற்கோள்காட்டி விட்டு அவருடைய வெவ்வேறு கவிதைகளைச் சொல்லிக் கொண்டே வந்தவன், சற்றே இடைவெளிவிட்டு, இவர் திரைப் படத்திற்கும் பாடல்கள் எழுதியிருக்கிறார். அவற்றில் மிகவும் பிரபலமான பாடல்

"சின்னச் சின்ன மூக்குத்தியாம்
சிகப்புக் கல்லு மூக்குத்தியாம்
கன்னிப் பெண்ணே உன் ஒய்யாரம் கண்டு
கண்ணைச் சிமிட்டுற மூக்குத்தியாம்"

என்ற பாடலைச் சொன்னதும், அவை ஆரவாரம் செய்து மகிழ்ந்தது. இப்போது கே.சி.எஸ். அவர்களை எல்லோருக்கும் தெரிந்தது. அதன்பின் அவர் உரை நிகழ்த்தினார்.

நிகழ்ச்சி முடிந்ததும் என்னிடம் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தவர், என் முகவரியைப் பெற்றுக் கொண்டு விடைபெற்றார். சில நாட்களில் அவரிடம் இருந்து ஓர் அஞ்சலட்டை வந்தது. எங்கள் சந்திப்பில் ஏற்பட்ட மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டு, நீங்கள் கவிதைகள் எழுதுவது என்றால் 'தாமரை'க்கு எழுதலாம் என்று குறிப்பிட்டிருந்தார்.



சுகி சிவம்

பின்னர்தான் தாமரை என்னும் இதழ் வருவதையும், அதற்கு அவர்தான் ஆசிரியர் என்பதையும் அறிந்து கொண்டேன். ஆனால் அந்த இதழுக்கு நான் கவிதைகள் எதுவும் அனுப்பவில்லை.

அதன்பிறகு கே.சி.எஸ். அருணாசலம் அவர்களைச் சில நிகழ்ச்சிகளில் சந்திக்க நேர்ந்தது. தவத்திரு குன்றக்குடி அடிகளார் பற்றிய கட்டுரையில் ஒரு பட்டிமண்டப மேடையில் திரு. சுகி சிவம் அவர்களுக்கும் அடிகளாருக்கும் நேர்ந்த விவாதம் பற்றிக் குறிப்பிட்டு இருந்தேன். அந்த நிகழ்ச்சி முடிந்து மேடையில் இருந்து இறங்கியதும், எதிரே கே.சி.எஸ். தென்பட்டார். சுகி சிவம் அவர்களைப் பார்த்து உரிமையுடன் என்ன இவ்வளவு கோபம் என்று வினவினார்.

அப்போதுதான் தாம் தேர்ந்து கொண்ட பொதுவுடைமை இயக்கத்துக்காக வாழ்வின் சுகங்களை அவர் தியாகம் செய்த விதங்களையெல்லாம் சுகிசிவம் அவர்கள் எனக்குச் சொன்னார்.

சில ஆண்டுகள் கழித்து, கவிஞர் வைரமுத்து அவர்கள் தன்னுடைய பிறந்த நாளில் மூத்த கலைஞர்களுக்கு விருது வழங்கிப் பணமுடிப்பும் தந்து கௌரவிக்கத் தொடங்கினார்.

அப்படி ஒருமுறை "கே.சி.எஸ்.–சுக்குக் கொடுக்கலாமே" என்று நான் சொன்னதும், கவிஞர் வைரமுத்துவின் முகம் மலர்ந்தது. "அடடா! நல்ல

கவிஞர் ஆச்சே. அவர் எங்கே இருக்கிறார்?” என்று வினவ, “இப்போது பொள்ளாச்சியில் இருக்கிறார்” என்றேன். விருதினைப் பெற்றுக்கொள்ள அவரிடம் இசைவு பெறும் பொறுப்பையும், அவரைச் சென்னைக்கு அழைத்து வரும் பொறுப்பையும் கவிஞர் வைரமுத்து என்னிடம் ஒப்படைத்தார்.

கே.சி.எஸ். விருது பெற இசைவு தந்தார். தமிழ் அறிஞர்களையும் படைப்பாளர்களையும் பேணுவதில் பெரும் ஆர்வம் கொண்ட இலக்கியப் புரவலரும் அப்போது கவிஞர் வைரமுத்து ‘சமூக இலக்கியப் பேரவை’ என்ற பெயரில் இயங்கி வந்த அமைப்பின் (இப்போது ‘வெற்றித் தமிழர் பேரவை’) முக்கியப் பொறுப்பாளருமான கோவை பெரிய லாலா கார்னர் ஸ்வீட்ஸ் திரு. மாரியப்பன் அவர்கள் கே.சி.எஸ். அவர்களைச் சென்னைக்கு அழைத்து வரும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்.

விழாவுக்கு முந்தைய நாள் இரவு விடுதியில் அவரைச் சந்திக்கச் சென்றேன். பொறியில் சிக்கிக்கொண்ட எலியைப் போல – அல்ல அல்ல புலியைப் போலத் தவித்துக் கொண்டிருந்தார் கே.சி.எஸ்.

விஷயம் இதுதான். மாரியப்பன் அவர்கள் பொதுவாகவே படைப்பாளர்களைத் தங்கத் தட்டில் வைத்துத் தாங்கக் கூடியவர். கே.சி.எஸ். அவர்களுக்குக் குளிர்சாதன வசதிகொண்ட பெட்டியில் தொடர்வண்டிப் பயணப் பதிவுசெய்து, அவருக்கு ஓர் உதவியாளரை நியமித்துச் சென்னை அசோகா ஹோட்டலில் மிகப்பெரிய அறை ஒன்றைக் குளிர்சாதன வசதியோடு பதிவுசெய்து அவரைத் தங்க வைத்திருந்தார். எளிய வாழ்வுக்கு எப்போதும் பழகியிருந்த கே.சி.எஸ். இதில் திக்குமுக்காடிப் போகிறார்.

என்னைத் தனியாக அழைத்து, “எனக்கு இதெல்லாம் பழக்கம் இல்லை. இவ்வளவு செலவுகள் தேவையில்லை. இவருடைய அன்புப்பிடியில் இருந்து எப்படித் தப்பிப்பது என்றும் தெரியவில்லை” என்று முறையிட்டார்.

விருது விழாவில் கே.சி.எஸ். படைப்புகள் பற்றிக் கவிஞர் வைரமுத்து பேசும்போது, எல்லோரையும் போலவே ‘சின்னச் சின்ன மூக்குத்தியாம்’ பாடலைக் குறிப்பிட்டார்

அப்போது “கழுத்தைச் சுற்றி ஓர் அட்டியலாம்” என்றுகூட எழுதிவிட முடியும். ஆனால் ‘உன் கட்டழகே ஒரு பட்டியலாம்’ என்ற வரியில்தான் கே.சி.எஸ். அபார முத்திரை பதித்து இருக்கிறார்” என்று வியந்து சொன்ன போது, அரங்கம் கரவொலி செய்தது. கே.சி.எஸ். கண்கள் லேசாகக் கலங்கின.

கே.சி.எஸ். எழுத்தாற்றல் மேல் அருட்செல்வர் நா.மகாலிங்கம் அவர்களுக்கு நல்ல ஈடுபாடு இருந்தது. அவரை ஆதரிக்க வேண்டும் எனவும் பெருமுயற்சிகள் மேற்கொண்டார்.

அருட்செல்வரின் எழுபதாவது பிறந்தநாள் விழா பொள்ளாச்சியில் கொண்டாடப்பட்டது. அப்போது ஒரு கவியரங்கம் நிகழ்ந்தது. கவிஞர் வைரமுத்து, கவிஞர் கே.சி.எஸ். இருவருமே அதில் பங்கேற்றனர். தன் பாடல்களைக் குரலெடுத்துக் கம்பீரமாகப் பாடக் கூடிய கே.சி.எஸ். அன்றும் ஒரு பாடலுடன் தொடங்கினார்.

ஆனால் அந்தப் பாடலின் பல்லவி, அவரை அறிந்தவர்களை அதிர்ச்சிக்கும் வருத்தத்திற்கும் ஆளாக்கியது. இந்தக் கோயிலுக்கு ஏனோ இப்போது பாட விருப்பமில்லை என்றுதான் அந்தப் பாடல் தொடங்கியது.

அதன்பிறகு நீண்ட காலம் கவிஞர் கே.சி.எஸ். அவர்களைச் சந்திக்க முடியவில்லை. இறுதியாகக் கிடைத்தது என்னவோ அவருடைய மறைவுச் செய்திதான்!

அவர் மறைந்தார் என்ற செய்தி கேட்ட மாத்திரத்தில், என் நினைவில் நிழலாடியது அவருடைய இந்த வரிகள் தான் :

“சாவி னுக்கு அஞ்சேன் சாகேன் – இந்த

சடலம் எனக்கு ஒரு சட்டை

சேவகனாகவே இருப்பேன் நான்

திரும்பவும் இவ்விதம் பிறப்பேன்”

மறுபிறப்பில் கம்யூனிஸ்டுகளுக்கு நம்பிக்கை இருக்கிறதா தெரியாது. ஆனாலும் அந்தக் கவிஞரின் ஆளுமை மிக்கப் பிரகடனம் இது! ●

நேர்காணல்

இரசாயன உரங்கள் மற்றும் பூச்சிக்கொல்லி மருந்துகளால் நாம் உண்ணும் உணவு நஞ்சாகிப்போன நிலையில் உடலுக்கு நலம் தரும் தூய்மையான இயற்கை உணவு பற்றிய குரல்கள் ஆங்காங்கே ஒலித்து வருகின்றன. இயற்கை வேளாண்மை, இயற்கை உணவை விவசாயிகளே மறந்துவிட்ட நிலையில், இயற்கை ஆர்வலர்கள் இதற்கான விழிப் புணர்வை ஏற்படுத்தி வருகின்றனர்.

இந்நிலையில், உணவுப் பொருள்களை இயற்கை வழியில் விளைவிக்க வைத்து, அவற்றை நல்ல விலை கொடுத்து வாங்கிப் பொதுமக்களுக்கு விற்பனை செய்யும் ஓர் அமைப்பாக, விவசாயிகளே சேர்ந்து உருவாக்கிய 'உயிர் அக்ரிகல்ச்சர் பிரைவேட் லிமிடெட்' என்னும் நிறுவனம் சிறப்பாகச் செயல்பட்டு வருகிறது.

இந்நிறுவனம் 'உயிர் இயற்கை விவசாயிகள் நேரடி விற்பனை நிலையம்' என்ற பெயரில் இயற்கை உணவுப் பொருள்கள் விற்பனையகத்தை ஈரோடு நகரில் முதலில் தொடங்கி, பின்னர் கோவையிலும் செயல்பட்டு வருகிறது. விரைவில் சென்னை, திருப்பூர், நாமக்கல் நகரங்களில் செயல்பட உள்ளது. படிப்படியாகத் தமிழகத்தின் அனைத்துப் பகுதிகளிலும், அனைத்திந்திய அளவிலும், வெளிநாடுகளிலும் முழுவதும் நஞ்சில்லாத தூய இயற்கை உணவுப்பொருள்களை விற்பனை செய்யத் திட்டமிட்டுள்ளது இந்நிறுவனம்.

உணவுப்பொருள்கள் விற்பனைப் பணியோடு, பொதுநலப் பணிகளும் செய்து வரும் இந்நிறுவனத்தைப் பற்றிய தகவல்களை 'ஓம் சக்தி' வாசகர் களுக்கு அளிக்க, இதன் நிர்வாக இயக்குநர் திரு. பி. திருஞானசம்பந்தம் அவர்களைப் பேட்டிக்குச் சந்திக்க ஆலோசனை தந்தவர் **பேராசிரியர் A.A. பாலசுப்பிரமணியம்.**

# விவசாயிகளின் விடியல்
# 'உயிர் அக்ரிகல்ச்சர்!'

**"கேள்வி : இந்த 'உயிர்' அமைப்பை எப்போது தொடங்கினீர்கள்?**

**பதில் :** 2016 நவம்பர் மாதம் இதனைத் தொடங்கினோம். ஈரோடு மாவட்டம் கொடு முடிக்கு அருகிலுள்ள சிவகிரி என்னும் ஊரில் முகநூலில் இணைந்திருந்த விவசாயிகள் சிலர் ஒரு கூட்டம் ஏற்பாடு செய்யலாம் என்று முடிவு செய்து 25 விவசாயிகள் ஒன்று கூடினோம். அப்போது 'உயிர்' அமைப்பு ஏற்படுத்தும் எண்ணம் எதுவும் எங்களுக்குள் இல்லை.

விவசாயம் செய்யும் இளைஞர்களுக்கு யாரும் பெண் கொடுப்பதில்லை, விவசாய விளை பொருள்களுக்கு நல்ல விலை கிடைப்பதில்லை, விற்பனை செய்யும் வியாபாரிகளுக்குத்தான் விலை கிடைக்கிறது. இவற்றிற்கெல்லாம் என்ன தீர்வு காண்பது? என்பதைப் பற்றித்தான் பேசி னோம்.

இப்படியே மூன்று கூட்டங்களை நடத்தி



திரு. பி. திருஞானசம்பந்தம்

னோம். பின்னர்தான் வாட்ஸ் அப்குழுவையும், முகநூல் தொடர்புகளையும் ஏற்படுத்தினோம். அவற்றில் 100 விவசாயிகளுக்கு மேல் இணைந் தார்கள். இவர்கஎெல்லாம் ஈரோடு, சேலம், மேட்டூர், நாமக்கல் முதலிய ஊர்களிலிருந்து இணைந்தார்கள். அவர்கள் சிவகிரி வருவதற்குச் சிரமமாக இருக்கிறது, அதனால் ஈரோட்டில் கூட்டம் நடத்தலாம் என்று கூறினர்.

எனவே, ஈரோட்டில் வாரா வாரம் ஞாயிற்றுக் கிழமைகளில் கூட்டம் நடத்தினோம். மூன்று முதல் நான்கு கூட்டங்கள் நடந்து முடிந்த போது எங்களுக்குள் தோன்றிய எண்ணத்தின்படி, அவரவர் விளைவித்த பொருள்களைக் கொண்டு வந்து, ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண் டோம்.

இதனைக் கவனித்த அக்கம் பக்கத்தில் குடியிருந்தவர்கள், எங்களுக்கும் காய்கறிகள் கொடுப்பீர்களா? என்று கேட்டனர். அப்போதுதான் நமக்குப் போக உள்ளவற்றை விற்பனை செய்ய லாம் என்ற எண்ணம் எங்களுக்குத் தோன்றியது. அதன்படி, ஞாயிறு காலை 10 மணிக்கே காய்கறி களைக் கொண்டு வந்து, விவசாயிகளிடம் பெறும் விலையோடு நிர்வாகச் செலவுகளுக்காக 10 சதவிகிதம் மட்டும் கூடுதல் விலை வைத்து விற்பனை செய்யத் தொடங்கினோம்.

இந்த விளைபொருள்கள் இயற்கை வழியில் விளைவிக்கப்பட்டதால், பொதுமக்களிடமிருந்து நல்ல வரவேற்புக் கிடைத்தது. இது அவர்கள் மூலம் பலருக்கும் பரவத் தொடங்கியது. நுகர் வோரே இதற்கென்று ஒரு தனி வாட்ஸ் அப் குழு அமைத்துக் கொண்டு தேவைகளைத் தெரி வித்துப் பொருள்களைப் பெற்றுக் கொண்டனர்.

ஞாயிற்றுக் கிழமைகளில் என்னென்ன காய்கறிகள் வரும் என்பதை நாங்கள் அவர் களிடம் முதலிலேயே சொல்லிவிடுவோம். இதனால், காலை 10 மணிக்கே பெரிய வரிசையில் நின்று காய்கறிகள் வாங்கத் தொடங்கினர்.

இதனை ஒரு கூட்டுறவுச் சங்கம் போல வைத்துச் செயல்பட்டால் எதிர்காலத்தில் கருத்து வேறுபாடுகள் வரும் என்பதால், பிரைவேட் லிமி டெட் கம்பெனியாகப் பதிவு செய்தோம். ‘உயிர் அக்ரிகல்ச்சர் பிரைவேட் லிமிடெட்’ என இதற்குப் பெயரிட்டோம்.

இதற்கு 3 இயக்குநர்கள், 26 பங்குதாரர்களை நியமித்தோம். இப்போது பங்குதாரர்கள் 64 பேர் உள்ளனர். ரூ. 1 கோடிக்கும் மேல் முதலீடு செய் யப்பட்டுள்ளது. இதன்பின் தமிழகத்தின் எல்லா மாவட்டங்களிலும் உள்ள இயற்கை விவசாயிகள் எங்களிடம் வரத் தொடங்கிவிட்டனர். அவர் களின் பொருள்களை எங்களிடம் தருகிறார்கள். நாங்கள் விற்பனை செய்து அவர்களுக்குப் பணம் தந்துவிடுகிறோம்.

**கேள்வி : விவசாயிகள் யார் வேண்டுமானாலும் உங்களிடம் தங்கள் விளை பொருள்களை விற் பனை செய்ய முடியுமா?**

**பதில்** : உற்பத்தி செய்யும் விவசாயிகள் எங்கள் நிறுவனத்தில் உறுப்பினராக வேண்டும். இப்போது 400 பேர்களுக்கு மேல் உறுப்பினர்கள் உள்ளனர். இவர்கள் ஜம்மு காஷ்மீரிலிருந்து இந்தியா முழுவதிலும் உள்ள பல மாநிலங்களைச் சேர்ந்தவர்கள். அங்கே விளையும் பொருள்களை இங்கே தருவிக்கிறோம். இங்கே விளைந்து






அங்கே கிடைக்காத பொருள்களை அவர்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

பொதுவாக, விவசாயிகள் உற்பத்திக்கு முன்னதாகவே, இன்ன பொருள் உற்பத்தி செய் கிறோம் என்று எங்களிடம் பதிவு செய்துவிட வேண்டும். அப்போதுதான் என்ன தேவையோ, அதை உற்பத்தி செய்து தர வேண்டுவோம். இதனால், ஒரே பொருளையே பலர் உற்பத்தி செய்து அதிக விளைச்சலும், விலை வீழ்ச்சியும் ஏற்படும் நிலையைத் தவிர்க்கிறோம்.

அந்த உற்பத்திப் பொருள்களை இரசாயன வேளாண்மையில் விளையும் பொருள்களை விற்பனை செய்யப்படும் விலைக்கே நாங்கள் எடுத்துக் கொள்கிறோம்.

**கேள்வி : இயற்கை வேளாண்மை நம் நாட்டின் பாரம்பரிய விவசாயம். ஆனால், தற்போது விவசாயிகள் இரசாயன வேளாண்மையை விடாப்பிடியாகப் பின்பற்றுகிறார்கள். இதைத் தடுக்க என்ன வழி?**



தூத்துக்குடி மாவட்டம் நமச்சிவாயபுரம் விவசாயிகளுடன் 'உயிர்' குழுவினர் கலந்துரையாடல்

**பதில் :** இயற்கை விவசாயத்தைப் பற்றிய புரிதல் தற்போது இல்லாமல் போய்விட்டது. இதனால்தான் இரசாயன வேளாண்மையை விவசாயிகள் பின்பற்றுகிறார்கள். நாங்கள் இயற்கை விவசாயம் செய்பவர்களை மட்டும்தான் பங்குதாரர்களாகச் சேர்த்துக் கொள்கிறோம். எங்களிடம் உள்ள பங்குதாரர்கள் இயற்கை வேளாண்மையில் மிகுந்த அனுபவம் கொண்டவர்கள். அவர்கள் தங்கள் அனுபவங்களை மற்ற விவசாயிகளுக்குக் கற்றுக் கொடுக்கிறார்கள்.

ஒரு ஏக்கரில் 1 டன் தக்காளி விளைவிக்க முடியும் என்றால், இயற்கை வேளாண்மையில் ஒன்றரை டன் தக்காளியை விளைவிக்க முடியும். இந்த நம்பிக்கையை விவசாயிகளுக்கு ஊட்டுகிறோம். அடுத்து நல்ல விலை கிடைக்கிறது. இவ்வாறான பணிகளால் இயற்கை வேளாண்மையைப் பரவ வைத்து இரசாயன வேளாண்மையைக் குறைக்கும் முயற்சியில் ஈடுபட்டு வருகிறோம்.

**கேள்வி : இயற்கை வேளாண்மை, இரசாயன வேளாண்மையைவிடச் செலவு குறைவானதா? அதிகமானதா? குறைவு எனில் இயற்கை விளைபொருள்கள் விலை அதிகமாக இருப்பது ஏன்?**

**பதில் :** நிச்சயமாகச் செலவு குறைவுதான். இயற்கை வேளாண்மையில் செலவு குறைவுதான் என்றால், இடுபொருள் செலவுதான் இல்லை. களை எடுக்கும் செலவு, அறுவடைச் செலவு முதலியன அதிகம்.

இரசாயன வேளாண்மையில் உதாரணத்திற்கு களைக்கொல்லி மருந்துகளைக் கொண்டு

களைகளைக் கட்டுப்படுத்துகிறார்கள். இயற்கை வேளாண்மையில் ஆட்களைக் கொண்டு களை எடுக்க வேண்டும். மருந்து தெளிக்காததால், களைகள் இயற்கை வேளாண் நிலங்களில் அதிகமாக முளைக்கும். களைக்கொல்லி அடிக்கச் செலவு குறைவு. களை எடுக்கச் செலவு அதிகம்.

இப்போது நாங்கள் 'உயிர்' அமைப்பைத் தொடங்கிய பிறகு, இயற்கை வேளாண் பொருள்களை முன்னர் சந்தைகளில் விற்ற இயற்கை விளைபொருள்களைவிடக் குறைவாகத்தான் தந்து கொண்டிருக்கிறோம். எல்லோரும் இயற்கை வேளாண்மைக்கு வரும்போது விலை உறுதியாகக் குறையும். இரசாயன வேளாண்மையில் தொடக்கத்தில் ஒரு மூட்டை உரம் போட்டுக் கொண்டிருந்த விளைநிலங்களில் இப்போது ஐந்து மூட்டை உரம் இட்டால்தான் விளைச்சல் அதிகரிக்கிறது. இந்த எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே போகிறது.



ஆனால், இயற்கை வேளாண்மையில், ஜீவாமிர்தத்தை ஆண்டுக்கு ஆண்டு குறைவாகக் கொடுத்தாலே போதும். நிலம் அந்த அளவுக்கு வளமாகிவிடும். எனவே, நாளடைவில் இயற்கை வேளாண்மையில் செலவு குறைவாகும். தொடக்க நிலையில் இயற்கை வேளாண்மையில் செலவு அதிகம்தான். பின்னர் படிப்படியாகக் குறையும். அப்படி நாளடைவில் குறையும்போது இந்த இயற்கை விளைபொருள்களின் விலையும் குறையும்.

2025–க்குள் தமிழகம் முழுதும் இயற்கை வேளாண்மை மாநிலமாக வர வேண்டும் என்ற நோக்கத்தில் செயல்பட்டு வருகிறோம்.

**கேள்வி : இதற்காக அரசாங்கத்திடம் ஏதேனும் கோரிக்கை வைத்திருக்கிறீர்களா?**

**பதில் :** முதல்வரிடம் கோரிக்கை வைத்திருக்கிறோம். ஆலோசித்து முடிவெடுப்பார்கள். ஈரோடு மாவட்டத்தில் ஆட்சியர் இதற்கு ஆதரவாக இருக்கிறார். இதற்கு முதலில் நுகர்வோர் முழு ஒத்துழைப்புக் கொடுக்க வேண்டும். இயற்கை விளைபொருள்களுக்குச் சிறிது விலை அதிகமாகக் கொடுக்க வேண்டியுள்ளது என்பது உண்மைதான். ஆனால், இரசாயன விளைபொருள்களை உண்டு, அதனால் ஏற்படும் விளைவுகளுக்கு லட்சக்கணக்கில் மருத்துவமனைகளில் செலவு செய்வதை நினைத்துப் பார்க்க வேண்டும்.

15 ஆண்டுகளுக்கு முன்பு கோவையில் எத்தனை புற்றுநோய் மருத்துவமனைகள் இருந்தன, இப்போது எத்தனை உள்ளன என்பதைப் பாருங்கள். இதேபோல் சர்க்கரை நோய் மருத்துவமனைகள் எங்கு பார்த்தாலும் இப்போது உள்ளன. காரணம், உணவு முறைதான்.

**கேள்வி : இயற்கை விளைபொருள்கள் பற்றிய விழிப்புணர்வு நகர மக்கள் – சிற்றூர் மக்கள் யாரிடம் அதிகம்? இந்த விழிப்புணர்வை மக்கள் மத்தியில் ஏற்படுத்த 'உயிர்' அமைப்பு என்ன பணி செய்கிறது?**

**பதில் :** நகர மக்கள், சிற்றூர் மக்கள் எல்லோரிடமும் விழிப்புணர்வு உள்ளது. 'உயிர் ஆர்கானிக்' யு டியூப் சேனலில் தொடர்ந்து இயற்கை உணவுகள், இயற்கை வேளாண்மை பற்றிய பதிவுகளை வெளியிட்டு வருகிறோம். என்னென்ன உணவுப் பொருள்களை உண்பதால் என்னென்ன பயன்கள் கிடைக்கின்றன என்பதையும் அவற்றில் தெரிவிக்கிறோம். இந்தப் பதிவுகள் பல்லாயிரக்கணக்கான மக்களால் பார்க்கப்பட்டு விழிப்புணர்வு ஏற்படுத்தப்படுகிறது.

**கேள்வி : இரசாயன உரங்களால் நச்சுத்தன்மை ஏற்பட்டுள்ள நிலங்களை எப்படிச் சரி செய்யலாம்?**

**பதில் :** பெரிதாக எதுவும் செய்யத் தேவையில்லை. நிலத்திற்குத் தேவை கழிவுகள்தான். 'வீட்டைச் சுத்தமாக வை, காட்டைக் குப்பையாக வை' என்று நம்மாழ்வார் ஐயா கூறுவார். ஆனால், நாம் இதற்கு மாறாகவே செயல்பட்டு வருகிறோம். ஒரு கைப்பிடி மண்ணில் 10 லட்சம் கோடி நுண்ணுயிரிகள் உள்ளன. அந்த நுண்ணுயிரிகள் வாழத் தேவை குப்பைகள், கழிவுகள், மக்கியவை

தான். இந்த மக்கியவற்றின் மூலம் மண்ணை நாம் வளப்படுத்திவிடலாம். கால்நடைக் கழிவுகளில் ஏராளமான நுண்ணுயிரிகள் உள்ளன.

மாடு கன்றுகள் இல்லாத நிலையில் பசுந்தாள் உரங்கள் நல்ல பலனைக் கொடுக்கும். இதற் கென்று இருக்கும் சணப்பை, தக்கைப்பூண்டு, கொழிஞ்சி, அவுரி, பலவகைத் தானியங்கள் முதலியன வளர்த்து, அவற்றை வெட்டி உழுதோமா னால் நிலம் பண்பட்டு நுண்ணுயிர்ப் பெருக்கம் ஏற்படும். மண் வளம் பெறும், இயற்கைத் தன்மைக்கு மாறும்.

**கேள்வி : இரசாயன உரங்கள், பூச்சிக்கொல்லி மருந்துகள், களைக்கொல்லிகளால் நிலத்தடி நீரின் தன்மை கெட்டுவிட்டது. இதனைச் சரி செய்ய முடியுமா?**

**பதில் :** தண்ணீரைச் சரி செய்வது கடினமான செயல்தான். ஏனெனில், தொழிற்சாலைப் பகுதி கள் பலவற்றில், கழிவு நீரைச் சுத்திகரிக்காமல் ஆயிரம் அடி, 2 ஆயிரம் அடி ஆழ்குழாய்க் கிணறு களில் அப்படியே விட்டுவிடுகின்றனர். இந்தக் கழிவு நீர், இப்பகுதியைக் கடந்து வேளாண்மை செய்யும் பகுதிகளுக்கும் பரவி, அங்குள்ள ஆழ் குழாய்க் கிணறுகளில் இந்தக் கெட்ட நீர் கிடைக்கின்றது.

இதற்கு இச்செயலைச் செய்பவர்கள் தாங் களாகவே திருந்த வேண்டும். காற்றையும், நிலத் தையும், நீரையும் மாசு படுத்துபவர்களுக்குக் அரசாங்கம் கடும் தண்டனைகள் வழங்க வேண்டும்.

பொதுமக்களுக்கு இதுபற்றிய விழிப்புணர்வு வேண்டும். தனிமனித ஒழுக்கம் வேண்டும். எங்களது அமைப்பினால் நிலத்தையும், உணவு நிலையையும் மாற்ற முடியும். ஆனால், நிலத்தடி நீரைச் சுத்தம் செய்வது எங்களால் இயலாது.

**கேள்வி : விவசாயிகள், தோப்புகள் அல்லாத மற்ற விளைநிலங்களில் மரங்களே இல்லாமல் விவ சாயம் செய்கின்றனர். இதனால், வேளாண்மைக்கு உதவும் பறவைகளுக்கு இடமில்லாமல் போய், பூச்சி, புழுக்கள் பெருக வழி ஏற்படுகிறது. இது பற்றி விவசாயிகளுக்கு விழிப்புணர்வை 'உயிர்' அமைப்பு ஏற்படுத்துகிறதா?**

**பதில் :** இதுவரை அதுபற்றி எந்த நடவடிக் கையும் எடுக்கவில்லை. இனி உடனடியாக இதுபற்றி 'உயிர் ஆர்கானிக்' யூ டியூப் சேனலில் செய்திகளை வெளியிடுவோம். வளர்க்கின்ற மரங்கள் நமக்கும் பயன் தருபவையாக இருக்க வேண்டும். அப்படிப் பழங்களும், நிழலும் தரும்



பயன்மிகு மரங்கள் வளர்ப்புப் பற்றிய செய்தியைத் தயார் செய்து வெளியிடுவோம். இந்த மரங்கள் வளர்ப்பானது, வளர்ப்பவருக்கும் பயன் தரும், பறவைகளுக்கும் பயன் தரும்.

**கேள்வி : இயற்கைப் பூச்சி விரட்டிகள் மலிவு விலையில் கிடைக்கின்றனவா?**

**பதில் :** கிடைக்கின்றன. எங்களிடமே சில பூச்சி விரட்டிகள் மலிவாகக் கிடைக்கின்றன. முன் னர் ரூ. 300, ரூ. 400 வரை விற்றவை, இப்போது ரூ. 150, ரூ. 200 விலையில் கிடைக்கின்றன.

**கேள்வி : பூச்சி விரட்டிகள் பூச்சிகளைக் கொல்வ தில்லை. ஒரு விளைநிலத்திலிருந்து வேறொரு விளைநிலத்திற்கு விரட்டப்படுகின்றன. அவை அடுத்த விளைநிலத்தில் உள்ள பயிர்களைச் சேத மாக்குமல்லவா?**

**பதில் :** இதன் கருத்துருவே வேறு. ஒவ் வொரு பயிருக்கும் ஒவ்வொரு விதமான வாசம் உண்டு. இதை நாம் உணர்கிறோமோ, இல் லையோ பூச்சிகள் உணரும். கத்தரியைத் தாக்கும் பூச்சி தக்காளியைத் தாக்காது. தக்காளியைத் தாக்கும் பூச்சி வெண்டையைத் தாக்காது. ஒவ் வொன்றிற்கும் ஒவ்வொரு பூச்சி உண்டு. பூச்சி விரட்டி தெளிக்கப்பட்ட பயிர்களில் உள்ள பூச்சி, புழுக்கள் ஒரு நாள் உணவின்றி இருந்தாலும் அவை உயிரிழந்துவிடும். இனப்பெருக்கம் ஆகாது.

**கேள்வி : உங்களிடம் விற்பனைக்கு வரும் பொருள்கள் இயற்கை விளை பொருள்கள்தானா**



**என்பதை எப்படிக் கண்டுபிடிப்பீர்கள்?**

**பதில் :** எங்களிடம் உறுப்பினர் ஆகிவிட்டாலே, எங்கள் குழுவினர் அவர்களின் விளை நிலத்திற்குச் சென்று ஆய்வு செய்வார்கள். அவர்களின் வேளாண்மை முறையைப் பார்வையிட்டு, அவர்களுக்குத் தேவையான ஆலோசனைகள் சொல்வோம்.

யாருடைய விளைபொருள்களில் ஏதேனும் சந்தேகம் எப்போது ஏற்பட்டாலும் அவற்றை ஆய்வகப் பரிசோதனைக்கு உட்படுத்திவிடுவோம். இப்போது ஆண்டுக்கு ரூ. 6 கோடிக்கு விளை பொருள்கள் விற்பனை செய்கிறோம்.

மேலும், விதை நேர்த்தி செய்வது முதல் அறுவடை செய்வது வரை எங்களுடைய பரிசோதனைக்குழு பார்த்துக் கொள்ளும். இயற்கை வேளாண்மையில் முனைவர் பட்டம் பெற்ற தயாரிப்பு மேலாளர் இருக்கிறார். விவசாயிகளின் தோட்டங்களுக்கு நேரே சென்று யோசனைகள் சொல்லி, நல்ல விளைச்சல் பெற வைக்கிறோம்.

**கேள்வி : மரச்செக்கு எண்ணெய், நாட்டுச் சர்க்கரை என்பன இப்போது பரவலாக விளம்பரப் படுத்தப்படுகின்றன. இவை எந்த அளவிற்குச் சரியானவை?**

**பதில் :** மரச்செக்கில் எண்ணெய் ஆட்டுகிறார்கள். அதனாலேயே அது இயற்கை எண்ணெய் ஆகிவிடாது. அதில் இடப்படும் எண்ணெய் வித்து இயற்கை முறையில் விளைந்திருந்தால் தான் கிடைப்பது இயற்கை எண்ணெய் ஆகும். நாட்டுச் சர்க்கரை என்றாலும் அப்படித்தான். அந்தக் கரும்பு விளையும்போது அதற்கு அடித்த பூச்சிக்கொல்லி, களைக்கொல்லி மருந்துகளின் பாதிப்பு இல்லாமல் போவதில்லை. எங்களிடம் கிடைக்கும் சர்க்கரை, எண்ணெய் அனைத்தும் இயற்கை முறையில் விளைவிக்கப்பட்டு, இயற்கை முறையில் தயாரிக்கப்படுபவைதான். தென்னந் தோப்பில் களைக்கொல்லி மருந்து அடித்திருந் தாலும் அவர்கள் எங்களிடம் உறுப்பினராக முடியாது.

**கேள்வி : விவசாயிகளின் விளைபொருள்கள் விற்பனைக்கு நீங்கள் எந்த அளவிற்கு உதவி செய்கிறீர்கள்?**

**பதில் :** 100 சதவிகிதம் நாங்களே வாங்கி விற்பனை செய்கிறோம். மதிப்புக்கூட்டும் வேலையை விவசாயிகளே செய்து தரும்படி செய்கிறோம். சான்றாக, மஞ்சளைப் பொடி செய்தல், முறுக்கு செய்தல் முதலானவற்றை அவர்களே செய்கிறார்கள். அதற்கு மூலப்பொருள்கள் வேண்டுமானால், அனைத்தும் நாங்களே தருகிறோம்.

**கேள்வி : இந்தத் தயாரிப்புகளை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறீர்களா?**

**பதில் :** ஏற்றுமதி செய்வதில்லை. ஆனால், வெளிநாடுகள் பலவற்றிலிருந்து கேட்கிறார்கள். உற்பத்தி அந்த அளவிற்கு இல்லை. உள்ளூர் விற்பனைக்கே இங்கே போதிய அளவு பொருள்கள் இல்லை. மேலும் ஏற்றுமதிக்கென்று பல விதிமுறைகள் வைத்திருக்கிறார்கள். ஆனால், சிங்கப்பூர், மலேசியா, அமெரிக்கா முதலிய நாடுகளில் கேட்டிருக்கிறார்கள். உற்பத்தியை அதிகரித்தபின், உலகம் முழுவதும் இயற்கை உணவுப் பொருள்களை எங்கள் நிறுவனம் விற்பனை செய்யும்.

**கேள்வி : கஜா புயலால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு இலவசமாக வீடுகள் கட்டித் தந்துள்ளீர்கள். இந்த எண்ணம் எப்படி வந்தது? இதற்கு எத்தனை செலவானது? நிதி எப்படித் திரட்டினீர்கள்?**

**பதில் :** கஜா புயலால் பாதிக்கப்பட்ட புதுக்கோட்டை, நாகப்பட்டினம், தஞ்சாவூர் உள்ளிட்ட 5 மாவட்டங்களில் வீடுகளை இழந்தோருக்கு 102 வீடுகள் கட்டித் தந்துள்ளோம். ஒரு வீட்டின் மதிப்பு ரூ. 26 ஆயிரம் ஆகிறது. இந்த வீடுகளை, அந்தந்தப் பகுதியில் கள ஆய்வு செய்து, உண்மையிலேயே இந்த வீட்டைக் கட்டிக்கொள்ளும் அளவுக்கு வசதி இல்லாதவர்களாகத் தேர்ந்தெடுத்துக் கட்டித் தந்தோம். தார் ஷீட்டால் செய்யப்பட்ட கூரைகள் அமைத்துத் தரப்பட்டுள்ளன.

இதற்கான நிதியை நமது பங்குதாரர்கள், வாடிக்கையாளர்கள், விவசாயிகள் ஆகியோரிடம் திரட்டினோம். பல வாடிக்கையாளர்கள் அவரவர்களே ஒரு வீட்டிற்கான தொகையைக் கொடுத்தனர். வெளிநாடுகளிலிருந்தும் சிலர் பணம் அனுப்பினர். பணிகள் முடிந்த பின்னரும் சிலர் உதவி செய்வதாகக் கூறினர். ஆனால், பணிகள் முடிந்து விட்டதால், பின்னர் வாங்க மறுத்து விட்டோம்.''

*உயிர் இயற்கை அமைப்பில் விவசாயிகள் உறுப்பினராவது மற்றும் விற்பனை தொடர்பான தகவல்களுக்கு, நிறுவனத்தின் உற்பத்தி மேலாளர் டாக்டர் துரை ராஜ் அவர்களை 98428 31144 என்ற எண்ணில் தொடர்பு கொள்ளலாம்.*

பேட்டி : **இரா. வேணுகோபாலகிருஷ்ணன்**

ஆன்மிகம்

# திருவரங்கன் வளர்த்த
# பராசர பட்டர்

வைணவத்தின் தன்னிகரில்லாத ஆசாரிய புருஷரான ராமாநுஜரின் முக்கியச் சீடர் கூரத்தாழ்வான் ஆவார். இவர், பெருந்தேவித் தாயார் சமேத ஸ்ரீ வரதராஜப் பெருமாள் அருள்பாலிக்கும் காஞ்சிபுரத்தின் அருகிலுள்ள கூரம் என்ற திருத்தலத்தைச் சேர்ந்த மிகப் பெரிய தனவந்தர் ஆவார். ராமாநுஜர் காஞ்சிபுரத்திலிருந்து





பராசர பட்டர்

ஸ்ரீரங்கம் நோக்கிக் கிளம்பியபோது, தம்முடைய அளவற்ற செல்வங்கள் அத்தனையையும் அப்படியே விட்டுவிட்டுத் தம் மனைவி ஆண்டாள் அம்மையாருடன் தாமும் உடன் கிளம்பியவர் இந்த அருமைச் சீடர்.

அப்படிப்பட்ட மாமனிதர், ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்ததும் தம் ஆசாரியார் ராமாநுசருக்குத் தொண்டு புரிவது, ஸ்ரீரங்கனையும் ஸ்ரீரங்கநாயகித் தாயாரையும் தொழுவது ஆகியவற்றையே கடமையாகக் கருதினார். காலை வேளைகளில் வைணவ அடியார் இல்லங்களில் உஞ்சவிருத்தி (பிச்சை) எடுத்து, அதில் கிடைக்கின்ற அரிசியைச் சமைத்து இறைவனுக்கும் படைத்து உண்டு வந்தார்.



எஸ். ஸ்ரீதுரை

ஒரு மழை நாளில் அவ்விதம் உஞ்சவிருத்திக்கும் போக முடியாத நிலையில், கூரத்தாழ்வானும் ஆண்டாள் அம்மையாரும் நாள் முழுவதும் பட்டினி கிடக்க நேர்ந்ததாம். அன்று இரவு வேளையில் திருவரங்களின் திருக்கோயிலில் பூசைகள் நடைபெற்று நைவேத்தியம் படைக்கும்போது எழுகின்ற மணியோசையைக்


கூரத்தாழ்வான்

கேட்டு மனம் வருந்திய ஆண்டாள், "உன் பக்தர்களை இப்படிப் பட்டினி போடலாமா...?" என்று மானசீகமாக வேண்டியுள்ளாள்.

பக்தையின் வாக்கு பரந்தாமனுக்குக் கேட்காமல் இருக்குமா...? உடனடி யாகத் திருவரங்கப் பெருமான் தன்னு டைய திருக்கோயில் அதிகாரிகளிடம் அசரீரியாகப் பேசி, தான் அமுது செய்த பிரசாதங்களைக் கூரத்தாழ்வான் இல்லத்திற்கு எடுத்துக் கொண்டுபோய்க் கொடுக்கச் சொல்லிவிட்டார்.

அந்த அருட்பிரசாதத்தை அன்றிரவு கணவன் – மனைவி இருவரும் வயிறார உண்டு மகிழ்ந்தார்கள். இறைவனின் அருட்பிரசாதம் உண்டதன் விளைவாக, தம்பதியருக்கு இரண்டு அழகான ஆண் குழந்தைகள் பிறந்தன. ஆசாரியார் ராமாநுஜர் மிகவும் மகிழ்ந்து அந்தக் குழந்தைகள் இருவருக்கும் பராசர பட்டர், ராமபட்டர் என்று நாமகரணம் செய்துவைத்தார்.

மூத்த பிள்ளையாகிய பராசரபட் டரைத் திருவரங்கனே தமது சுவீகாரப் பிள்ளையாக ஏற்றுக்கொண்டு தமது பெரிய திருக்கோயில் வளாகத்திலேயே அவரை வளரச் செய்தாராம். எம்பெரு மானின் சுவீகாரப் பிள்ளை என்பதால், நைவேத்தியத்திற்கு வைத்துள்ள பிரசா தங்களைப் பெருமாள் அமுது செய்வ தற்கு முன்பாகவே இக்குழந்தை எடுத்து ருசிபார்த்தாலும் யாரும் கடிந்து கொள்ளமாட்டார்களாம். எல்லோரும் அவரைச் சுருக்கமாகப் பட்டர் என்றே கூப்பிடத் தொடங்கினர்.

பட்டருக்கு ஐந்து வயதாகும் போதே, தம் தகப்பனார் திருவாய் மொழிப் பாசுரங்களைப் பாராயணம் செய்யும்போது நுணுக்கமான கேள்வி களைக் கேட்டு பதில் பெறுவார். தினந் தோறும் அக்குழந்தையின் அழகையும் அறிவுக் கூர்மையையும் யாரும் பார்த் துக் கண்ணெச்சில் பட்டுவிடக் கூடாது என்று தாயார் அவருக்கு திருஷ்டி கழிப் பது வழக்கம்.

வேத சாத்திரங்களைத் தம் தகப்ப னார் மற்றும் எம்பார் இருவரிடமும் பயின்றுவந்த பட்டருக்குத் திருமண வயது நெருங்கியது. பெரியநம்பிகள் வம்சத்தைச் சேர்ந்த ஒருவரது கனவில் திருவரங்கன் தோன்றி, "பட்டரைச் சாதாரண மனிதப் பிறவியாக எண்ண வேண்டாம்!" என்று கூறி அவருடைய இரண்டு பெண்களையும் பட்டருக்கே கொடுக்கும்படியும் உத்தரவிட்டாராம்.

திருவரங்கன் தாம் ஸ்ரீதேவி பூதேவி என்று இரண்டு பக்கமும் மனைவி யரைக் கொண்டுள்ளது போல், தம் முடைய சுவீகாரப் புத்திரருக்கும் இரண்டு மனைவிகள் அமைய வேண் டும் என்று ஆசைப்பட்டாராம்.

பட்டரின் தகப்பனார் கூரத்தாழ் வான், ராமாநுஜர் ஆகியோர் சிலவருட இடைவெளியில் முக்தி அடைய, ராமாநுஜரைத் தொடர்ந்து வைணவத் தலைமை ஏற்ற எம்பாரும் முக்திய டைந்த பிறகு, பராசர பட்டர் இல்லறத் தைத் துறக்காமலேயே தமது இளம் வயதிலேயே தலைமைப் பீடம் ஏற்றார்.

கர்நாடக தேசத்தில் மேலக்கோட் டையை அடுத்துள்ள கங்கோத்ரி என்ற இடத்தில் வசித்துவந்த மெத்தப் படித்த வேதாந்தி ஒருவரை அவர் இருப்பிடத் திற்கே சென்று, ஒன்பது நாட்கள் வாதங் கள் செய்து வென்று, தமது சீடராக்கிக் கொண்டார். மேலும் அவரைத் தினந் தோறும் தமது இல்லம் தேடி வரும் வைணவ அடியார்களுக்கு உணவளிக் கும் புண்ணியத்தொண்டு புரிந்துவரும் படி அறிவுரை கூறித் திருவரங்கம் திரும்பினார்.

பின்னர் ஒரு நாளில், வேதாந்தி வெளியே சென்றிருந்த நேரத்தில் வந்த அடியார்களுக்கு அவருடைய மனை வியர் (அவருக்கும் இரண்டு

மனைவிகள்) உணவளிக்காமல் திருப்பி அனுப்பி விட்டார்கள். வீடு திரும்பி யதும் விஷயமறிந்து மனம் நொந்த வேதாந்தி, தமது செல்வம் அனைத்தை யும் மூன்று பாகமாகப் பிரித்துத் தம்முடைய இரண்டு மனைவிகளுக்கு இரண்டு பாகங்களை அளித்துவிட்டு, மீதியுள்ள செல்வங்களை ஓர் ஒட்டகத் தின் மேல் ஏற்றிக்கொண்டு திருவரங்கம் நோக்கிக் கிளம்பும் முன்பே துறவறமும் பூண்டார். அச்செல்வத்தைக் கொண்டு பட்டரின் அறிவுரைப்படி, திருவரங்கப் பெருமானுக்கு நந்தவனக் கைங்கரிய மும், அடியார்களுக்கு அன்னதானத் திருப்பணியையும் செய்துவந்தார்.

அவ்வேதாந்தி தம்மிடம் வரும் முன்பே துறவறம் பூண்டு வந்ததால் மனம் நெகிழ்ந்து “நம் ஜீயர் வந்தார்” என்று மகிழ்வுடன் கூறினார் பட்டர். அதுமுதற் கொண்டு “அத்துறவிக்கு நஞ் சீயர்” என்ற திருப்பெயர் நிலைத்து விட்டது. பட்டருக்குப் பிறகு இந்த நஞ்சீயரே வைணவ உலகின் தலை மைப் பொறுப்பை வகித்தார் என்பது வரலாறு.

பின்னர், வீரசுந்தரப் பிரம்மராயன் என்ற சிற்றரசன் திருவரங்கம் பெரியகோயில் மதிற்சுவர் திருப்பணி செய் யும்போது, வைணவ அடிய வர் ஒருவரது வீட்டை இடித்துத் தள்ளிய துடன், தனது செல்வச்செருக்கி னால் பட்டரை யும் அவமதித் தான். இதனால் மனம் நொந்த பட்டர் திருக்கோட்டி யூர் சென்று சிறிது காலம் தங்கிவிட் டார். அங்கே அருள்பாலிக்கும் சௌமியநாராயணப் பெருமாளை வணங்கிவந்தாலும், திருவரங்கனைத் தொழமுடியாமல் வாடினார் பட்டர். அவரை மனம் நோகச் செய்த சிற்றரசன், எம்பெருமானின் திருவுள்ளம் காரண மாக, வெகு விரைவிலேயே நோய்வாய்ப்பட்டு இறந்தான். பின்னர் பட்டர் திருக்கோட்டியூரிலிருந்து திருவரங்கத்திற்குத் திரும்பினார்.


ஸ்ரீ ராமானுஜர்

இவருடைய சீடர்களில் இன்னொரு வனாகிய வீரசிகாமணிப் பல்லவராயன் என்ற மற்றொரு சிற்றரசன் பலவிதப் பிரச்சினைகள் குறித்துக் கவலைப் பட்டுக் கொண்டிருந்தபோது, “கடற் கரை வெளியை நினைத்திரும்!” என்று பட்டர் கூறிய அறிவுரை வைணவர்களி டையே பிரசித்தி பெற்ற ஒரு கூற்றாகும். அதாவது, ராமர் இலங்கையின் மீது படையெடுத்த போது, அவருக்காகக் களத்திற்கு வந்த எழுபது கோடி வானர வீரர்களும் இலங்கையின் கடற்கரை வெளியில் இரவு உறக்கம் கண்ட பொழுது, ராமரும் லட்சுமணரும் உறங் காமல் வில்லேந்தியபடி அந்த வானரர் களுக்கு எந்த ஆபத்தும் வராமல் பாது காத்தார்களாம். அதுபோல, “தன்னை நம்பியவர்களை ராமர் கைவிடமாட் டார் என்று மகாவிசுவாசம் கொண்டு நிம்மதி அடைந்திரு!” என்பதே அந்தப் பட்டர் கூறிய அந்த அரிய உபதேசத்தின் சாரமாகும்.

பட்டர், தம்முடைய இருபத் தெட்டாவது வயதில், திருவரங் கன் திருச்சன்னிதியில் கைசிக புராணத்திற்கு விளக்கம் அளித்ததைக் கேட்டு மனம் மகிழ்ந்த எம்பெருமான், தமது மாலை, பரிவட்டம், ஆபரணங்கள் என்று ஒவ் வொன்றாக அர்ச்சகர் கள் மூலம் பட்டருக் குப் பரிசாக அளித்தவர், திடீரென்று, “பட் டரே, நாம் உமக்கு மேலை வீடு அளிக் கிறோம்!” என்று கூறி யருளினார்.

திருக்கோயிலிலிருந்து தமது திருமாளிகைக்குத் திரும்பியவுடன் திரு வேங்கமுடையானும் கருட வாகனத்தில் அவருக்குக் காட்சி அளித்தார். அடுத்த நொடியில் தம் பூதவுடலை நீத்து முக்தி யடைந்தார் பராசரபட்டர்.

●

கட்டுரை

# செந்தமிழ் வளர்த்த செம்மல்



ப. சோமசுந்தர வேலாயுதம்

பத்தொன்பதாம் நுற்றாண்டில் சிற்றரசர்களும் திருமடங்களின் அதிபர்களும் தமிழைப் போற்றி வளர்த்தனர். தென்றமிழ் நாட்டில் தமிழ் பரப்பிய இராமநாதபுரத்தில் வாழ்ந்த சேது மன்னர்கள் தமிழைப் போற்றிப் பாதுகாத்து வளர்த்தவர்களில் குறிப்பிடத் தகுந்தவர்கள். இவர்கள் தங்களின் குறுநில நிர்வாகம் தவிர்த்து ஏனையப் பொழுதைத் தமிழ்ப் புலவர்களிடையே கழித்து வந்தனர்.

அவ்வரிசையில் சிறப்பிற்குரியவராகத் திகழ்ந்தவர்களில் ஒருவர் பெயரும் புகழும்பெற்ற பொன்னுசாமித் தேவர் என்பவர். செந்தமிழ் வாணர் பலரை ஆதரித்துப் போற்றியவர். பாப்புனையும் ஆற்றலும் பெற்றிருந்தார்.

1837–ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 2–ஆம் நாளன்று பிறந்த அவர், தனது பதினேழாவது வயதில் குறுநில நிர்வாகத்தில் சீமைப்பேஷ்கார் என்னும் பதவியில் அமர்ந்தார். இராமநாதபுரம் சீமையில் முன்பே சிறந்த மதிமந்திரியாக விளங்கிப் பல சீர்திருத்தங்களைச் செய்து வழிகாட்டிய முத்திருளப்ப பிள்ளை என்பவர் காட்டிய வழியில் தனது பதவியின் நிர்வாகத்தைக் கொண்டு சென்றார்.




பதவியேற்கு முன்னர் ஆங்காங்கு சட்டத்திற்குப் புறம்பாக இயங்கி வந்த கொள்ளைக் கும்பல்களை அடக்கினார். அதனால் மக்களிடம் நற்பெயர் பெற்றார். அவரது இருபதாவது வயதில் நாட்டின் நிர்வாகத் தலைமைப் பதவி அவரைத் தேடி வந்தது. அப்போது தருக்கித் திரிந்த துட்டர்களை ஒடுக்கி அமைதி ஏற்பட வழி செய்தார்.

“மதிக்கணை நெறித்தபுரு வச்சிலையின் மாட்டிக்
கதிக்கும்அடை யாரிலக்கங் காட்டித் –
துதித்தெவரும்
அஞ்சப் புவிபுரக்கும் அண்ணல்பொன்னுச்
சாமிமன்னன்
தஞ்சத்தை யாரடையா தார்”

அக்காலத்துப் புலவரொருவர் பொன்னுசாமித் தேவரின் அதீதத் திறமையை வியந்து இவ்வாறு பாடலாகப் பாடியுள்ளார். குடிகளின் ஆக்கத்திற்கும் நாட்டின் தேவைக்கும் ஏற்ற அனைத்தையும் செய்தார். கண்மாய், வாய்க்கால், குளங்கள் செப்பனிடப் பட்டன.

தேவரின் நிர்வாகத் திறமையால் ஆட்சி செவ்வனே நடைபெற்றுக் கொண்டிருக்கப் புலவர்கள், கவிஞர்கள் அட்டாவதானிகள், சதாவதானிகள் நாடொறும் இராமநாதபுரம் வந்து இவருடன் உரையாடி மகிழ்ந்து பாடிப் பரிசிலும் பாராட்டும் பெற்றுச் செல்வாராயினர்.

அரசவை நாளும் தமிழ் மணம் கமழும் அவையாயிற்று. அவையில் திருக்குறள், கம்பராமாயணம் முதலிய

வற்றில் புலவர்களுடன் உரை நிகழும். இராமநாதபுரம் மண் தமிழ் வளர்த்துப் புகழ் பெற்றதால், தேவருக்கும் தமிழறிவும் கவி புனையும் ஆற்றலும் இயல்பாகவே அமையப் பெற்றிருந்தன.

இக்கோமானிடம் நூல் வாசிப்புக் கென்று தமிழறிந்த ஓர் அலுவலரைப் பணியில் அமர்த்தியிருந்தார். அவர் பெயர் இராமலிங்கம் என்பது. அவர் பத்து மணிவரை இவருடன் இருந்து இல்லம் செல்வதுதான் நாடொறும் நடைபெற்று வரும் பழக்கம்.

ஒருநாள் இரவு எட்டு மணிக்கு இவர் அவரை அழைக்க, அவரோ வீடு சென்றிருந்தார். ஒரு கடிதத்தை எடுத்துக் கீழ்க்கண்ட பாடல் ஒன்றை எழுதி இராமலிங்கத்திற்கு அனுப்பினார்.

"எட்டு மணியோ இலைநீ எனையதற்குள்
விட்டுப் பிரிந்த விதமென்னே - இட்டமனை
மாலா மயலா மடியா மமதையா
சீலா இராமலிங்கம் செப்பு"

எளிமையும் நயமும் உடையது இவ் வெண்பா என்பதறிந்து மகிழ்கிறோம்.

தேவர் குறுநில நிர்வாகம், சில வழக் குகள் சம்பந்தமாகவும் சென்னைக்குச் சென்று வரவேண்டிய சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. பாம்பின் கால் பாம்பறியும் என்பதற்கேற்ப அன்றைக்குச் சிறந்து விளங்கிய மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, அவரது மாணவர் வித்துவான் தியாகராசச் செட்டியார், ஆறுமுக நாவலர் முதலிய பெருமக்கள் தேவரைச் சந்தித்து அளவளாவி வந் தனர். மகாவித்வான் இவரைப் பாராட் டிப் பாடிய பாடல் ஒன்றே தேவர் எத் தகைய உயர்ந்த தமிழறிவுக்குச் சொந்தக் காரர் எனபதைத் தெரிந்து கொள்ளப் போதுமானது.

"சொன்னயமும் பொருள்நயமும் அணிநயமும்
கற்பனையாச் சொல்லா நின்ற
நன்னயமும் தொடைநயமும் வனப்புநல
மும் பிறிது நாட்டா நிற்கும்
எந்நயமும் சிற்சிலவே பிறர்க்கமையும்
நினக்கமைந்த எல்லாம் என்னில்
பன்னயமும் உணர் பொன்னுச்சாமிமகி
பா நினது பாட்டுளற்றாமே."

எத்தனை பெரிய பாராட்டு. வெறும் சம்பிரதாயத்துக்குப் பாராட்டு பவர் அல்லர் மகாவித்வான். இத்தகைய பெரும்புலவர் குழாத்திடம் உரையாடிய பொழுது தேவர் பாடிய பாடல்கள் பல வாகும். அவ்வாறு பாடிய பாடல் களைத் தொகுத்து 1882-ஆம் ஆண்டு 'சமுத்திர விலாசம்' என்னும் பெயரிட்டு அச்சிலியற்றியுள்ளனர். இதில் தேவர், அவரது இளவல் சேதுபதியரசர், சதாவ தானம் சரவணப் பெருமாட் கவிராயர், அட்டவதானி கிருட்டிணய்யங்கார், சேசகிரிராயர், வித்வான் முத்து வீரப்ப பிள்ளை முதலிய புலவர்கள் பாடிய பாடல்கள் அடங்கியுள்ளன.

இவ்வரசர் முருகக்கடவுளிடம் பெரும் பக்தி செலுத்தி வந்தவராவார். முருகப் பெருமான் மீது தேவர் பாடிய 208 வெண்பாக்களைக் கொண்ட நூலுக்குத் 'தனிச் செய்யுட் சிந்தாமணி' எனப் பெரிடப்பட்டது. அவற்றில் ஒரு பாடல்

"பூவும் மணமும் புனலும் குளிரும் மெய்யும்
ஆவியும்போல் எந்தையுமெம் அன்னையரும் -
மேவி
இருந்தா ரடியார் இரும்பிறவி நீக்கும்
மருந்தாய கந்த வரை"

சரச சல்லாபமாலை, முருகரனுபூதி, நீதிபோத வெண்பா, பிரபாகர மாலை முதலிய செய்யுள் நூல்களும் இவ்வரச ரால் பாடப் பெற்றன. இவர் இசைப் புலமை மிக்கவர் என்பதை இவர் இயற் றிய காயகப்பிரியா, ரசிக ரஞ்சனம் என்னும் நூல்களிரண்டால் அறிய முடிகிறது.

முத்தமிழ்த் துறையின் முறைபோகிய உத்தமக்கவி சீலன் பொன்னுசாமி என்று பலராலும் புகழப் புலவர்கள், கவி வாணர்கள் பலரும் இவரைச் சந்தித்து வாழ்த்தும் பாராட்டும் பெற இராமநாத புரம் நோக்கி வருவாராயினர். இவரது காலத்தே பிறவியிலேயே இரு கண்களும் இழந்து ஏடாயிரம் எழுதாது தன் மனத்தே எழுதிப் படித்த விரகன் எனப் பாராட்டப் பெற்ற மாம்பழச்சிங்கக் கவி ராயர் இவரைச் சந்தித்துத் தனது கவித் துவத்தைக் காட்டு முகத்தான் அரண் மனைக்கு வந்தார். இவரது தோற்றத்

தைக் கண்ட வாயில் காப்பவர் இவரை உள்ளே செல்லவிடாது தடுத்தார். இது பொறுக் காத கவிவாணர்,


மீனாட்சிசுந்தரம் பிள்ளை

"தருமகிமை மிகுமுனது
சமுகமுறார் வறுமையெனச்
சவிக்கக் காய்ந்து
வருமிரவி வெயிலதனால்
மயங்கியிங்கு யான்வருந்தி
வந்த போதில்
அருமைதவிர் பாராச் சேவகர்
தமதுபெயர்ப்பொருளை
அறியக் காட்டிக்
கருவமொடு தடுப்பதென்னே
காமர்பொன்னுச்
சாமியெனுங் கருணைமாலே"


உ.வே.சா.

என்னும் கவியை எழுதி மன்னருக்கு அனுப்பினார். கவியைக் கண்ட தேவர், புலவர் ஒருவரை அனுப்பி அவரை அழைத்து வரச் செய்தார். வந்ததும் தேவர் மீது சொல்லணி, பொருளணிகளும், அகத்துறைப் பொருள்களும் அமைந்த பாமலர்களைப் பொழிந்தார். அவரது பாடும் திறனை அறிந்த தேவர்,

"கிரியிற் கிரியுருகுங் கேட்டு" என்னும் ஈற்றடி கொடுத்துப் பாடி முடிக்குமாறு பணித்தார்.

கவிராயரோ தயக்கம் சிறிதுமின்றி 'மங்கையர் யாழில் வாசிக்கும் நீலாம்பரி ராகத்தால் கொடிய பாலைநிலம் குளிரும். ஆகிரி ராகத்தால் கிரி(மலை)யும் உருகும்' என்னும் கருத்தமைந்த

"மாலாம்பொன் னுச்சாமி மன்னர்பிரான்
நன்னாட்டிற்
சேலாங்கண் மங்கையர்வா சிக்குநல்யாழ் – நீலாம்
பரியிற் பெரியகொடும் பாலைகுளி ரும்ஆ
கிரியிற் கிரியுருகுங் கேட்டு"

என்ற பாடலைப் பாடினார். பின்னர் பல நாள்கள் அரசரது அவையில் விருந்தினராக இருந்த கவிராயர், ஒருநாள் தனது ஊரான பழநிக்கு அரசர் வழங்கின பரிசில் பொருள்களுடன் புறப்பட்டார். புலவரது கைகளைப் பிடித்துத் தேவர் பாராட்டி அனுப்பினார். தனது கைகளைப் பிடித்துப் பாராட்டியது கண்டு உவகையின் மிக்க கவிராயர்,

"அவனிபுக ழுளனதுதிரு வடிமலரி
னெழுத்துகளா லன்று நீங்காப்
பவமதகன் றொருகரிய
பாறையும்பெண்
ணாகுமெனிற் பாராவாரம்
துவளவமு தெடுத்தினிய
சுரர்க்கருள்நின்
திருக்கரத்தாற் றொடப்பெற்றேற்குக்
கவலையினி யுளதாமோ
காமர்பொன்னுச்
சாமியெனுங் கருணை மாலே"

என்று பாடி மகிழ்ந்தார்.

அற்றை நாளில் பல புலவர்களும் தினமும் இப்பெருமகனிடம் வந்து சந்தித்துப் பாக்கள் பாடிப் பரிசில் பெற்றுச் செல்வாராயினர். மேலும் தங்களிடம் ஏட்டில் உள்ள நூல்களை அச்சிலேற்றப் பொருளுதவி நாடி வந்தவர்களும் உண்டு.

சோழ நாட்டைச் சேர்ந்த தில்லையம்பூர்க் கவிராயர் என்பார் இவரிடம் வந்து,

"செவ்விய நச்சி னார்க்கினி யத்தின்
எழுத்ததி காரம் அச்சிட் டீந்தனன்
விழுத் தகு மகாலிங் கைய வேதியன்
மற்றுமந் நூலின் மருவதி காரம்
முற்று மச்சிட முயன்றன னெனக்குப்
பொருளிலை பொன்னுச் சாமிமா நிதியே
மன்னு மிகுநிதி வழங்கி
என்னுளக் கருத்தை யீடேற் றுகவே"

என்று பாடிப் பொருள் பெற்றுச் சென்று பல நூல்களைப் பதிப்பித்தார்.

இப்பெருமகன் குறித்துத் 'தமிழ்த் தாத்தா' உ.வே.சா. அவர்கள் தாம் பதிப்பித்த 'வித்துவான் தியாகராசச் செட்டியார்' என்னும் நூலில் "தமிழ் நாட்டில் தம்பெயரை நிலைநிறுத்தியவர்களில் இராமநாதபுரம் சமஸ்தானம் பொன்னுச்சாமித் தேவர் ஒருவர்.



பாண்டித்துரைத் தேவர்

அந்தச் சமஸ்தானத்தின் நிர்வாகத்தை மிகச் சிறப்பாகவும் ஒழுங்காகவும் அவர் நடத்தி வந்தார். சிறந்த மதியூகியாகிய அவர், சமஸ்தானத்தை நிர்வாகம் செய்துவந்த காலத்தில் அவரது அதி காரத்தின் கீழே குடிகளும் வித்துவான் களும் நன்மை பெற்றனர்.

சமஸ்தானத்தின் செல்வநிலையும் பெருமையும் உயர்ந்தன. அவர் அருங் கலை விநோதர். மிகவும் அழகாகப் பிரசங்கம் செய்வார். கேட்டோர் மன தைக் கவரும்வண்ணம் செய்யுட்களுக்கு விரிவாக உரை கூறுவார். சிலேடை நயம் அமையவும் சமயோசித சாதுர்யம் புலப்படவும் பேசுவார். ஏதேனும் ஒரு விஷயத்தை எடுத்துக் கொண்டு காரண காரியங் களுடன் வாதம் செய்வார். செய்யுள் இயற்றுவார்.

நன்றாகப் படித்தவராகை யால் தரம் அறிந்து பாராட்டும் திறமை அவரிடம் அமைந்திருந்தது. தம்மிடம் வரும் வித்துவான்கள் இன்ன இன்ன துறையில் வல்லவர் என்பதை அறிந்து அவரவர் களுக்கு ஏற்ற கேள்விகளைக் கேட்டு அவர்களது கல்வி யாழத்தைப் பார்ப்பார்.



ஆறுமுக நாவலர்

திறமைமிக்க வித்துவான்கள் அவரால் பரீட்சிக்கப் பெறுதலை ஒரு கௌரவ மாகவே கருதினர். அவர்பால் வரும் வித்துவான்கள் வைரமணிகளைப் போல் இருந்தனர். அவர் சாணைக் கல்லாக இருந்தார். அவ்வித்துவான்கள் அதன்பிறகு அதிகப் பிரகாசத்தை அடைந்தார்கள். இப்பெருமகன் பற்றி மகாவித் வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பாடியுள்ள ,

“மன்ற மறுவிவா மதியெனு முகத்தான்
அருள்மடை திறந்தா லனையசெங் கண்ணான்
வெள்ளிய நீறு விளங்குதிரு நுதலான்
பயன்மர முள்ளூர்ப் பழுத்தற் றாலாலன
நயமுடை யான்கண் நண்ணிய செல்வமென்று
ஆன்றோ ருரைத்த வதற்கொரு சான்றாய்த்
தோன்றா நின்ற சுந்தரக் குரிசில்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குநர் அல்லர்நின் மாட்டென்று
அறிதர முன்னா ளான்றோ ருரைத்து
இவன்செய னோக்கி யெதிரது போற்றி
யன்றே யென்றுபே ரறிஞ ருவப்ப
நன்றே நாளு நடாத்திவரு வள்ளல்
அருந்தமிழாக ஆரிய முழுவதும்
பெருந்தமி ழாமொழி பெயர்ப்பது குறித்தோன்
இகழே யாரெடுத் தியம்பிய வெலாந்தன்
புகழே யாக்கிய புண்ணிய மூர்த்தி
பொன்னுச்சாமி”

வள்ளுவப் பெருந்தகையார்,

“தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும்”

என்றார்.

இத்தகைய பெயர்பெற்ற பெற்றியருடைய மகனே தமிழ்ச் சங்கம் கண்ட பாண்டித்துரைத் தேவர். தந்தை தமிழின்பால் வைத்திருந்த பற்றுதலுக்கு ஒருபடி மேலே சென்று தமிழச்சங்கம் கண்டார் அப் பெருமகன்.

●

சிறுகதை

## மு. பழனி இராகுலதாசன்

# வீரு

தபால்காரருக்கும் அப்பாவுக்கும் ரொம்ப நாள் சிநேகம். வீட்டுக்கு நேரே சைக்கிளை நிறுத்தி, “சபாபதி ஒண்ணும் இல்லை” என்று அறிவித்து விட்டுத்தான் நகர்வார். கடிதம் இருந் தால் கடிதத்தை முன்னும் பின்னு மாய்ப் பார்த்து, ‘உனக்குத்தான்’ என் பார்.

இன்றைக்கு ஒரு கடிதம் வந்திருந் தது. “திண்டுக்கல்லில் இருந்து பெரிய வன் முருகேசு எழுதியிருக்கான்... இந்தா” என்றவர் குடும்ப நட்பு என்ப தால், கூடுதலாகச் சில வார்த்தைகள் பேசினார்.

“சின்னவன் இந்தப் பக்கம் வருவதும் இல்லை. காகிதம் போடுறதும் இல்லை.



அம்மா சொன்ன வாசகங்களால் ஐம்புலன்களும் நெருப்பேறிக் கிடந்த அப்பா, அம்மாவிடமிருந்து குழந்தையை, ஒரு மலரை வாங்குவது போல் வாங்கி, இரு கைகளிலும் ஏந்தி, நெற்றியில் முத்தமிட்டு, “பெயர் நான் வைக்கிறேன்”

மும்பையில் இருக்கிறவன், மனைவி மக்களைக் கூட்டிக் கொண்டு வருவதும் போவதும் சும்மாவா இருக்கு...? ஆமா, சபாபதி, கேட்க ணும்னு நினைச்சேன்... பெரியவன் வீட்டுக்காரப் பொண்ணு சும்மாதான் இருக்கா?” என்றார்.

குரலை மிகவும் தாழ்த்திக் கொண்ட அப்பா, “ஆமா, சும்மாதான் இருக்கு; இப்பவும் ஏழு, எட்டு வருசத் துக்கு மேலே ஓடிப் போச்சு” என்றார்.

தபாலைப் படித்துவிட்டு அப்பா, சற்றுச் சாய்மானமாக உட்கார்ந்தார். கடிதத்தின் கனமான சாராம்சம் அப் பாவின் உடம்பையும் ஆத்மாவையும் சற்று ஆயாசப்படுத்திவிட்டது.

எல்லாவற்றையும் ஒவ்வொரு அசைவாகக் கவனித்துக் கொண்டி ருந்த அம்மா ஓசைப்படாமல் மெது வாய் நடந்து, அப்பாவின் அருகில் வந்து, “பெரியவன் எழுதியிருக் கானா...?” என்று மட்டும் கேட்டாள்.

என்ன எழுதப் போகிறான். குழந்தைகள் ஆஸ்ரமத்திலே இருந்து ஒரு குழந் தையைத் தத்து எடுப்பதாக முடிவெடுப்பது பற்றித்தான் எழுதி யிருப்பான் என்று அம்மா சரியாகவே முன் உணர்ந்து கொண்டாள்.

அப்பாவிடமிருந்து கடிதத்தை வேறு எவ்விதப் புறமெய்ப்பாடு களுமின்றி, வாங்கி உள்ளே இருந்த தாளை எடுத்துப் படித்துவிட்டு, அப்படியே உள்ளே வைத்து அப்பாவிடம் கொடுத்தாள்.

இந்தக் கவர் கூட்டுக்காவது உள்ளே ஒரு காகிதம் இருக்க வாய்ச் சிருக்கு, மருமகள் கண்மணிப் பொண் ணுக்கு வாய்க்கலியே” என்று அம்மா

ஒரு கணம் பெருமூச்செறிந்தாள்.

மனைவி கண்மணியின் அப்பா, அம்மா, தம்பி எல்லோரும் உடன் வந்ததாகவும், ஆஸ்ரமத்துக்குச் சென்று முறைப்படி ஏற்பாடுகளைச் செய்து ஒரு பெண் குழந்தையைப் பெற்றுக் கொண்டதாகவும், ஒரு நாள் ஊருக்கு வருவதாகவும், அம்மாதான் பெயர் வைக்க வேண்டும் என்றும் பெரியவன் அடுத்து ஒரு கடிதம் எழுதியிருந்தான்.

ஊருக்கு வந்து அப்பாவையும் அம்மாவையும் அழைத்துப் போகச் சந்தர்ப்பம் அமையவில்லை என்றும் கவலைத் தொனிக்க எழுதியிருந்தான்.

கடிதத்தைப் படித்த அப்பா, "அதனால் என்னப்பா... எல்லாம் நல்லபடியாய் நடந்தால் சரி" என்று ஆழ்மனசுக்குள் சொல்லிக் கொண்டார். இருந்தாலும் தன்னை அழைக்கவில்லையே என்ற மனக்குறை முகம் முழுவதிலும் வியர்வையாய்ப் பூத்துக்கிடந்தது.

"அதனால் என்ன? எப்படிச் சந்தர்ப்பமோ, அதுதான் எல்லாரும் அடுத்த வாரம் இங்கே வரப் போறாங்கதானே" என்று அம்மா அப்பாவுக்கு ஆறுதல் செய்தாள்.

கடிதத்தில் எழுதியிருந்தபடி முருகேசும் கண்மணியும் குழந்தையைத் தூக்கிக் கொண்டு இன்று சாயுங் காலம் வரப் போகிறார்கள். சோழ வந்தான் வரைக்கும் ரயிலில் வந்து, அங்கிருந்து ஒரு கார் அமர்த்திக் கொண்டு வருவதாக முருகேசு எழுதியிருந்தான்.

ரயில் வருகிற நேரம், கார் வருகிற நேரம் எல்லாம் அப்பா, அம்மா மனசுக்குள் சுற்றிச் சுற்றி, அவர்கள் ஊருக்குள் வருகிற நேரம் மாலை நாலரை மணிக்கு மேல் என்று கணக்குப் படிந்து கிடந்தது.

ஊருக்குள் நுழைவாயிலாக அடர்ந்தும் படர்ந்தும் இருந்தது ஆல மரம். அதன் வேர்கள், விழுதுகள், கிளைகள் எல்லாவற்றுக்கும் ஒட்டு மொத்தமாய் ஊர்மக்கள் 'பெரிய ஆலமரம்' என்று பெயர் சூட்டி வைத்திருந்தார்கள்.

அம்மா அப்பாவிடம், "ஆல மரத்துக்கிட்டக்கப் போய் நிற்பமா?" என்றாள். இருவருமாகப் பெரிய ஆல மரத்து அடியில் வந்து நின்றார்கள். ஆலமரத்தடியில் வேர்கள் முண்டு முண்டாகத் தடித்து யானையின் முகப்படாம் போலக் கிடந்தது. அப்பா அந்த முண்டுப் பகுதியில் உட்கார்ந்து கொண்டார். பார்வை மட்டும் ரோட்டுப் பக்கம் பதிந்து கிடந்தது. அம்மா உட்காரவில்லை; நின்று கொண்டே இருந்தாள்.

ரயில் வருவதும் போலவும், சோழ வந்தான் ஸ்டேஷனில் அவர்கள் இறங்குவது போலவும், வாடகைக் காரில் ஏறுவது போலவுமாய்க் காட்சிகள் அம்மாவின் மனசுக்குள் ஓடிக் கொண்டே இருந்தன.

அப்பா மெதுவாக, ஆனாலும் அம்மாவுக்குக் கேட்குமாறும் சிறிது சிறிதாக வார்த்தைகளைக் கூட்டிப் பேசினார். உட்காரச் சொன்னால் அம்மா வந்து உட்காரமாட்டாள் என்று அப்பாவுக்குத் தெரியும். வந்து உட்காருமாறு அழைப்பதுதான் பேச்சுக்கு உரிய தொடக்கமாக அமையும் என்று உணர்ந்த அப்பா, "தங்கம், இப்படி வந்து உட்காரு வா..." என்றார்.

உட்கார்ந்து கொள்கிற மனநிலையில் இல்லாத அம்மா, அப்பாவின் உணர்வுபூர்வமான அழைப்பை முற்றுலுமாக மறுதலிக்க இயலாமல், அப்பாவை நோக்கிச் சிறிது நகர்ந்து வந்து நின்றாள். ஆனாலும் அம்மாவின் பார்வையும் மனசும் ரோட்டுப் பக்கமே பதிந்து கிடந்தன.

அம்மா சற்று அருகில் வந்து நிற்கும் இடைவெளிச் சுருக்கத்தைப் பயன்படுத்திப் பேசுவதற்கு அப்பா முயன்றார். நிமிர்ந்து பார்த்தும், பக்க வாட்டில் பார்வையை ஓடவிட்டும்



நிதானம் கூட்டிக் கொண்ட அப்பா, பெரிய ஆலமரம் தவிர அந்த இடத்தில் யாரும் இல்லை என்று உறுதிப்படுத்திக் கொண்டு, மெதுவாய், தங்கத்தின் மனசுக்குள் நேரடியாய்ச் சென்று சேர்ந்து தொடும் வகையில் வார்த்தைகளைக் கூர்செய்து பேசினார் : "அதெல்லாம் சரி தங்கம். நேரம் இல்லை, சந்தர்ப்பம் இல்லை, நம்மைக் கூப்பிடவில்லை; சரி; பிள்ளை யார்வீட்டுப் பிள்ளை, அப்பா, அம்மா யாரு, குலம், சாதி, சனம் எல்லாம் தெரிய வேண்டாமா...?" அப்பா

நிறுத்தி நிறுத்தி, தயங்கித் தயங்கி அக்ஷரம் அக்ஷரமாய்ப் பேசிய பேச்சு அம்மாவின் நெஞ்சைத் தொடுகிற நேரத்தில் கார் வந்துவிட்டது.

முன் இருக்கையிலிருந்து இறங்கிய முருகேசு டிரைவரிடம் பேசிக் கொண் டிருந்த நேரத்தில், பின் இருக்கையி லிருந்து கண்மணி குழந்தையை ஏந்திய வாறு கீழே இறங்கினாள். தாவிச் சென்ற அம்மா குழந்தையை அள்ளி வாங்கிக் கொண்டாள்.

முருகேசு கொண்டு வந்திருந்த பைகளோடு முன்னால் நடந்தான்; அவனை அடுத்து கண்மணி நடந்தாள்; மூன்றாவதாக அம்மா குழந் தையைத் தன் மார்போடு அணைத் துப் பிடித்தவளாக நடந்தாள்; அம்மா வின் பின்னால் அப்பா வந்தார்.

இந்த வரிசை முறை அப்பாவுக்கு வசதியாக, சிறிது பேசுவதற்குத் தூண்டுதலாக அமைந்தது. அம்மா வுக்கு மட்டும், அவளது ஆழ்மனசின் ரேகைப் படிமானத்துக்கு மட்டும் கேட்கிற மாதிரி அப்பா பேசினார் :

“யாரு வீட்டுப் பிள்ளை, ஊரு, பேரு, சாதி, சனம் என்னான்னு விசாரிச்சு சொல்லு தங்கம்...”

வீட்டுவாசலின் முன்பாக முருகேசு நின்றான்; அவன் அருகில் கண்மணி நின்றாள். இருவரையும் தாண்டி முன்னால் வந்த அம்மா குழந்தையைத் தோளில் அணைத்துக் கொண்டவாறு கதவைத் திறந்து உள்ளே சென்றாள்.

அம்மாவைத் தொடர்ந்து அப்பா வும் சென்றார். அவருடைய நுழைவு இயல்பானது என்பது போல அப்பா மெய்ப்பாடு காட்டிக் கொண்டார். இன்னும் உள்ளே வராத முருகேசும், கண்மணியும் காலணிகளைக் கழற்றி ஓரமாய்த் தள்ளி ஒழுங்கு செய்து கொண்டிருந்தார்கள்.

நாற்காலியில் உட்கார்ந்த அம்மா குழந்தையைத் தன் மடிமீது கிடத்திய வாறு, குழந்தையின் நெற்றிப் பரப்பில் ஒழுங்கின்றிக் கிடந்த தலைமுடியை ஒதுக்கிவிட்டுச் சரிசெய்தாள்.

வெளியில் இருந்து இன்னும் முருகேசும் கண்மணியும் உள்ளே வராத இடைவெளி அவகாச மணித் துளிகளைப் பயன்படுத்திக் கொண்ட பாவனையில் அப்பா அம்மாவிடம் மெதுவாய்ச் சொன்னார் : “நான் வேற ஒண்ணும் கேட்கலை தங்கம், என்னா, ஏதுன்னு விவரம் விசாரிச்சு சொல்லுன்னுதான் கேட்கிறேன்...”

அம்மாவுக்கு கேசாதி பாதம் அருளா, மருளா என்று சொல்ல முடியாத உணர்ச்சி படிந்து, வளர்ந்து படர்ந்துவிட்டது. மடியில் கிடந்த குழந்தையைச் ‘சட்’டென்று தூக்கி, ஆன்மாவிலேயே ஒட்டிக் கொள்வது போல மார்போடு அணைத்துக் கொண்டு சொன்னாள் :

“பிள்ளைதான் வீட்டுக்குள்ளே வந்திருச்சுல்ல, வீட்டுக்குள்ள வந்த பிறகு இந்த விசாரணை எதுக்கு?”

நதி ஒன்று சமுத்திர சாகரத்துக் குள்ளே நுழைகிற அந்தக் கண நேரம் வரைக்கும்தான் அதற்கு நதி என்றும், ஆறு என்றும் அடையாளங்கள் இருக்கக் கூடும்; சாகரத்துகுள் நுழைந்துவிட்ட பிறகு அது சமுத்திர மாகவே ஆகிவிடுகிறது... இப்படியெல் லாம் தத்துவார்த்தமாக வியாக்கி யானம் சொல்ல அம்மாவுக்குத் தெரியாது; ஆனால், அந்த வீடு ஒரு சமுத்திரத்திற்கு நிகரானது என்பது மட்டும் அவளுக்குத் தெரிந்திருந்தது...

அதற்குள் உள்ளே வந்த முருகேசு “அமமா... குழந்தைக்குப் பெயர் வைம்மா” என்றான்.

அம்மா சொன்ன வாசகங்களால் ஐம்புலன்களும் நெருப்பேறிக் கிடந்த அப்பா, அம்மாவிடமிருந்து குழந்தையை, ஒரு மலரை வாங்குவது போல் வாங்கி, இரு கைகளிலும் ஏந்தி, நெற்றியில் முத்த மிட்டு, “பெயர் நான் வைக்கிறேன்” என்று சொல்லியவாறு, “முருகேசு, உன் அம்மா பெயரையே வைக்கிறேன், தங்கம்... தங்கம்... எங்கள் வீட்டுத் தங்கம்” என்றார். ●

கட்டுரை

# புவி அடையாளக் குறியீடு பெற்ற ஈரோடு மஞ்சள்

ஒவ்வொரு நாட்டிலும் ஒரு குறிப்பிட்ட பகுதியில் அதன் மாண்பை வெளிப் படுத்தும் வகையில் பண் பாட்டின் சின்னமாகப் பாரம்பரியமாக உரு வாக்கப்பட்டு வரும் சில பொருள்கள் மற்ற பொருள்களில் இருந்து வேறுபடுத்திக் குறிக்கப்பட வேண்டியது மிகவும் அவ சியம் ஆகும்.



இத்தகைய சிறப்பான வேறுபாடு கள் அந்தந்தப் பகுதிக்கு மட்டுமே சொந்தமான, அந்தப் பகுதியை அதன் பாரம்பரியத்தை வெளிப்படுத்தும் சிறப்புடையதாக இருக்கும் பொருள் களின் சிறப்பைப் புரிந்து கொள்வ தற்கும், தேர்ந்தெடுப்பதற்கும் வசதி யாக இப்பொருள்களுக்கு என்று சிறப்பு அடையாளக் குறியீடுகளும், பெயர்களும் வழங்கப்படு வதையே 'புவி அடையாளக் குறியீடு' (Geographical Indication) என்கிறோம்.

அந்தப் பகுதியுடைய பொருள் உற்பத்தியாளரும், அதை வாங்கிப் பயன் படுத்தும் உபயோகிப் பாளரும் ஒருசேரப் பயன் படும் வகையில் அமைந்ததே இந்தப் புவி அடை யாளக் குறியீடு வழங்கும் முறை ஆகும்.

பாரிஸ் அறிவுசார் சொத்துகளின் உரிமைக்கான மாநாட்டின் (Paris Convention for the Protection of Intelectual Property Right) *1, 2*–ஆம் பிரிவில் உட் பிரிவு, *10*–வது பிரிவு ஆகிய பிரிவுகள் இந்தப் புவி அடையாளக் குறி யீட்டுப் பொருள்கள் அறிவுசார் சொத்துரிமையின்கீழ் வருவதாக அங்கீகாரம் தந்துள்ளது.

வணிகம் தொடர்பான அறிவுசார் சொத்துகளின் உரிமைகளின் ஒப் பந்தத்தின்படி (Trade Related Aspects of Intelectual Property Rights Agreement) *22*–வது மற்றும் *24*–வது பிரிவுகள் இத்தகைய புவி அடையாளக் குறியீடு தரப்படும் பொருள்களுக்குப் பாது காப்பும், பராமரிப்பும் தர வேண்டி யதன் தேவையை வலியுறுத்து கின்றன.



சிதம்பரம் இரவிச்சந்திரன்

உலக வர்த்தக அமைப்பில் (World Trade Organisation) உறுப்புநாடான இந்தியா இத்தகைய குறியீடுகளைப் பாதுகாப்பதற்காகச் சட்டப் பூர்வமான விதிகளை இயற்றி யும், அதை நடைமுறைப் படுத்தவும் செய்து வருகிறது. இதன்படி,

1999–இல் புவி அடையாளக் குறியீட்டுப் பொருள்கள் – ஒழுங்குமுறை மற்றும் பாதுகாப்புக்கான சட்டத்தை (Geographical Indications of Goods Regulation & Protection Act) இயற்றிச் செயல்படுத்தி வருகிறது.

இதன் 13–வது பிரிவின்படி, இத்தகைய ஒரு பொருளை உற்பத்தி செய்பவர்களின் பாதுகாப்பை உறுதிப்படுத்தும் சங்கங்களுக்கோ, அமைப்புகளுக்கோ, நடைமுறையில் இருந்து வரும் இதற்கான அதிகாரம் பெற்றவருக்கோ இத்தகைய ஒரு பொருளைப் பதிவு செய்வதற்குரிய விண்ணப்பத்தை அளிக்க முடியும்.

இந்த சட்டத்தின் 18–வது பிரிவின்படி, இதன் மீதான அனைத்து வகையான உரிமைகளும் 10 வருடங்கள் வரை செல்லுபடியாகும். இதற்கு பிறகும் ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்தி இதன் மீதான உரிமையைப் புதுப்பித்துக் கொள்ள முடியும்.

விவசாயப் பொருள்கள், இயற்கையில் கிடைப்பதில் இருந்து உருவாக்கப்படும் பொருள்கள், திடவடிவத்தில் இருக்கும் பொருள்கள், தொழில் ரீதியான பொருள்கள், உணவுப் பொருள்கள் ஆகியவை புவி அடையாளக் குறியீட்டைப் பெறுவதற்கான பொருள்கள் ஆகும். இந்தச் சொத்துரிமை மீறப்பட்டால் மாவட்ட நீதிமன்றத்தை இதற்காக அணுக முடியும்.

தமிழ்நாட்டில் பத்தமடை பாய், காஞ்சிபுரம் பட்டு ஆகியவற்றுக்கு மட்டும் இல்லாமல் 2015 பிப்ரவரி முதல் நாளன்று தமிழகத்தின் நெற்களஞ்சியமாக விளங்கும் தஞ்சையின் புகழ்பரப்பும் ‘தஞ்சாவூர் கலைத் தட்டு’க்குப் புவி அடையாளக் குறியீடு பெருமை கிடைத்துள்ளது.

கி.பி.17–ஆம் நூற்றாண்டில் தஞ்சையை ஆண்டுவந்த இரண்டாம் சரபோஜி மன்னரின் காலத்தில் உருப்பெற்ற இந்த அற்புதமான கலை வடிவம், புவி அடையாளக் குறியீடு பெற்றதன் காரணமாக இப்போது உலகம் முழுவதும் சென்று தஞ்சையின் வரலாற்றை எடுத்துக் கூறப் போகிறது.

தஞ்சாவூர் கலைத் தட்டைப் பாரம்பரியமாகச் செய்துவரும் 52 கலைஞர்களுக்குப் புவி அடையாளக் குறியீட்டுக்கான சான்றிதழ்கள் வழங்கப்பட்டன. இது நமக்கும், தமிழகத்துக்கும் பெருமை தரும் செய்தியாகும்.

கேரளாவில் ஆறன்முலா கண்ணாடி, ஆலப்புழை கயிறு, மலபார் மிளகு, பாலராமபுரம் கைத்தறி, பல்வேறு மருத்துவக் குணங்களையுடைய நவரை என்னும் நெல் ரகம், கைப்பாடு என்கிற அரிசி ரகம், உலகிலேயே மிகவும் ருசியும் சத்தும் உள்ளதாகக் கருதப்படும் எர்ணாகுளம் என்ற ஊரின் அருகில் இருக்கும் வாழைக்குளத்தில் விளையும் அன்னாசிப்பழம் முதலிய பொருள்களுக்கு இத்தகைய புவி அடையாளக் குறியீடு வழங்கப்பட்டுள்ளது.



புவி அடையாளக் குறியீடு பெற்றுள்ள பொருள்களின் பட்டியலில் டேஹ்ராடூன் பாசுமதி, டார்ஜிலிங் தேயிலை ஆகியவையும் அடங்கும். இந்த வரிசையில் திருநெல்வேலி அல்வா

வையும் சேர்ப்பதற்கான பரிசீலனை நடந்து வருகிறது.



வாழ்வில் எதையும் மங்களகரமாகத் தொடங்கும் பண்பாட்டை உடைய தமிழர்களாகிய நமக்கு இந்த ஒரு சிறப்பு சமீபத்தில் கிடைத்திருக்கிறது. ஆம், உலகப் புகழ்பெற்ற ஈரோடு மஞ்சளுக்குக் கடந்த மார்ச் 7, 2019–இல் புவி அடையாளக் குறியீடு பெருமை கிடைத்துள்ளது.

ஈரோடு மாவட்டத்தில், குறிப்பாக மொடக்குறிச்சி முதலிய இடங்களில் உள்ள மண்ணின் தனித்தன்மையால் இங்கு விளையும் மஞ்சளுக்குப் பல்வேறு தனிப்பட்ட மருத்துவக் குணங்கள் உள்ளன. இது அறிவியல் பூர்வமாக நிரூபிக்கப்பட்டு, தற்போது இந்தியப் புவி அடையாளக் குறியீட்டுப் பதிவாளரால் இந்தச் சான்று வழங்கப்பட்டுள்ளது.

இது ஈரோடு மாவட்டத்தின் விவசாயிகளுக்கும், வியாபாரிகளுக்கும் கிடைத்திருக்கும் பெரும் வெற்றியாகக் கருதப்படுகிறது. இனி, அவர்கள் ஈரோடு மஞ்சளின் சிறப்பான மருத்துவ மற்றும் தனிப்பட்ட பண்புகளுக்கு ஏகபோக உரிமை கொண்டாடலாம்.

ஈரோடு மஞ்சள் இந்தியாவின் பல பகுதிகளுக்கு மட்டும் இல்லாமல், உலகநாடுகள் பலவற்றிற்கும் பெருமளவில் ஏற்றுமதி செய்யப்பட்டு வருகிறது. இந்தப் பெருமையின் மூலம் இங்கு உள்ள விவசாயிகளும், வியாபாரிகளும் பலவிதமான முன்னுரிமையைப் பெறுவதோடு பல நன்மைகளையும் பெற இது வழி வகுத்துள்ளது.

2013 – ஆம் வருடத்தில் ஈரோடு மஞ்சளுக்குப் புவி அடையாளக் குறியீடு கோரி விண்ணப்பம் செய்யப்பட்டது. இதன் பின்னர் இந்தியப் புவி அடையாளக் குறியீடு வழங்கும் ஆணையத்தால் ஈரோடு மஞ்சளின் சிறப்புக் குணங்கள் குறித்து மஞ்சள் விளையும் வயல்கள் உட்படப் பல இடங்களில் இதற்கான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டு, அறிவியல் ரீதியாக ஈரோடு மஞ்சள் பல சிறப்புமிக்க மருத்துவ மற்றும் தனிப்பட்ட குணங்களைப் பெற்றுள்ளது ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதன் அடிப்படையிலேயே இப்போது ஈரோடு மஞ்சளுக்கு இப்போது இந்தச் சிறப்புக் கிடைத்துள்ளது.

ஏற்கனவே மகாராஷ்டிராவில் விகோன் மஞ்சள் மற்றும் ஒரிசாவில் கன்டமல் மஞ்சளுக்கும் இதுபோலச் சிறப்புக் கிடைத்துள்ளது என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

தமிழ்நாட்டில் இரண்டு வகையாகப் பெரிய நாடன், சிறிய நாடன் என்ற பெயர்களில் மஞ்சள் விளைவிக்கப்படுகிறது. இதுபோன்ற பொருள்களை அறிந்து, அவற்றை அதிகமாக வாங்கிப் பயன்படுத்துவதன் மூலம் நம் பண்பாட்டையும், பாரம்பரியத்தையும் நம்மால் முடிந்த வரை நாம் பாதுக்காக்க முடியும். அதனால், இத்தகைய பொருள்களை அறிந்து கொண்டு அவற்றுக்கு இரு கரம் நீட்டி மனப்பூர்வமாக எல்லா விதமான ஆதரவையும் அளிப்போம். ●

கட்டுரை

# வள்ளுவரின் வரலாற்றுச் சுவடுகள்

திருவள்ளுவர் பற்றி நான் செய்த ஆய்வுகளில் தலைசிறந்தது, திருவள்ளுவர் பிறந்தது குமரி மண் என்ற எனது கண்டுபிடிப்புத்தான். இக்கருத்தை *1989* டிசம்பர் மாதம் மொரீசியஸ் தீவில் நடைபெற்ற ஏழாவது அனைத்துலகத் தமிழ் மாநாட்டில் பன்னாட்டு அறிஞர்கள் முன்னிலையில் பல்வேறு சான்றாதாரங்களோடு உறுதி செய்தேன்.

பல ஆண்டுக்காலமாகப் பல்வேறு பத்திரிகைகளில் திருவள்ளுவர் பிறந்தது குமரி மண் என்ற கருத்தைப் பல ஆய்வரங்குகளில் வெளியிட்டும் வந்தேன். ஆனால், அக்கருத்தைப் பொது மேடையின் வழியே இந்த உலகிற்கு அறிவித்தவர் இலக்கியச் செல்வர் டாக்டர் குமரி அனந்தன் அவர்கள்தான்.

**டாக்டர் எஸ். பத்மநாபன்**

*1984*–ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் *29* அன்று நாகர்கோவிலில் நடைபெற்ற அதங்கோட்டாசான் நினைவாலயத் திறப்பு விழாவன்று மக்கள் திலகம் எம்.ஜி.ஆர். அவர்கள் முன்னிலையில் எனது கருத்தை இலக்கியச் செல்வர் டாக்டர் குமரி அனந்தன் வெளியிட்டார். அதனை எம்.ஜி.ஆர். அவர்கள் தமது உரையிலே பாராட்டினார்.

இதனைத் தொடர்ந்து ஆனந்த விகடன், தாய் முதலிய வார இதழ்கள் என்னைப் பேட்டி கண்டு திருவள்ளுவர் பற்றிய எனது ஆய்வினை விரிவாக வெளியிட்டன. திருவள்ளுவர் பிறந்தது குமரி மண் என்ற கருத்தை உள்ளடக்கிய 'குமரி மண் தந்த திருவள்ளுவர்' நூலை *1990* செப்டம்பர் மாதம் *6* அன்று கன்னியாகுமரியில் நடைபெற்ற திருவள்ளு



வர் சிலைப் பணித் தொடக்க விழாவில் அன்றைய தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் வெளியிட்டார்.

1995–ஆம் ஆண்டு டாக்டர் ஜெயலலிதா தமிழக முதல்வராக இருந்த நேரத்தில் வெளியான கன்னியாகுமரி மாவட்ட விவரச் சுவடியில் திருவள்ளு வர் குமரி மாவட்டத்தில் திருநயினார் குறிச்சியில் பிறந்தவர் என்ற எனது கருத்து இடம் பெற்றுள்ளது.

இவ்வாறு மூன்று முதல்வர்களின் முன்னிலையில் திருவள்ளுவர் பிறந்த குமரி மண் என்ற எனது கருத்து உறுதி செய்யப்பட்டுள்ளது. இக்கருத்துப் பற்றி மேலும் அறிய மேனாள் குடியரசுத் தலைவர் டாக்டர் ஏ.பி.ஜே. அப்துல் கலாம் அவர்கள் 15.1.2002 அன்று புதுடில்லிக்கு நேரிலே என்னை அழைத்து உரையாடிப் பாராட்டுத் தெரிவித்தார்.

திருவள்ளுவர் பிறந்தது முட்டத்தை அடுத்துள்ள திருநாயனார் குறிச்சி என்ற கருத்தை மக்கள் திலகம் எம்.ஜி.ஆர். அடிக்கடி ஜேப்பியார் அவர்களிடம் கூறியதை வைத்து, முட்டத்தைச் சார்ந்த அவர், என்னைத் தேடிக் கண்டுபிடித்து, அவரது சத்தியபாமா பல்கலைக்கழகம் வழியாக மாதந்தோறும் எனக்கு ரூ. 7 ஆயிரம் ஓய்வூதியமாக வழங்குகிறார்.

மலாய் நாட்டில் நடைபெற்ற திருக் குறள் மாநாட்டில் வெளியான தமிழ் மன்றக் களஞ்சியம் சிறப்பு மலர் 1000 பக்கங்களைக் கொண்டது. அம்மலரில் ஐந்தாவது கட்டுரை நான் எழுதிய வள்ளுவர் மலை பற்றிய கட்டுரை யாகும். இக்கட்டுரையில் திருவள்ளுவர் மலையின் படத்தையும், வள்ளுவநாடு நிலவரைப் படத்தையும் பல வண்ணங் களுடன் வெளியிட்டு அக்கட்டுரைக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுத் துள்ளனர்.

திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் ஓர் உலகப் பொதுமறை. அவர் காலத் தில் சிறப்புடன் விளங்கிய சைவம், வைணவம், சமணம், பௌத்தம் ஆகிய சமயக் கோட்பாடுகளை நன்கு அறிந்து அச்சமயத்தவர்கள் எல்லோருக்கும் பொதுவாகத் திருக்குறளை அவர் இயற்றியுள்ளார். அவரது காலத்திற்குப் பின்னர் தோன்றிய கிறித்தவம், இஸ் லாம் ஆகிய சமயத்தவர்களும் ஒப்புக் கொள்ளும்படித் திருக்குறள் அமைந் துள்ளது.

எந்த நூலுக்கும் இல்லாத இந்தத் தனிச்சிறப்பு திருக்குறளுக்கு மட்டுமே உண்டு. திருக்குறள் ஒரு தமிழ் நூல். ஆனால் திருக்குறளில் எந்த ஓரிடத் திலும் தமிழ் பற்றியோ, தமிழ்நாடு பற்றியோ, தமிழர்கள் பற்றியோ குறிப்பிடவில்லை. உலகத்தவர் எவரும் ஒப்புக்கொள்ளும் விதத்தில் திருக் குறளை அவர் இயற்றியுள்ளார்.

திருக்குறளில் வருகின்ற அகம், புறம், அற்றம், அங்கணம், அளைதல், உணக்கல், செறுத்தல், செவி, மடி, மக்கா, மேவல், வெள்ளம், கொள்ளாம் முதலிய 50–க்கும் மேற்பட்ட சொற்கள் அதே பொருளில் குமரி மாவட்டத்தில் மட்டும் இன்றும் பேச்சு வழக்கில் உள்ளன. இச்சொற்களைப் பிற மாவட்டங்களில் நாம் கேட்க முடியாது.

வெறும் சொல்லை வைத்து வள்ளுவர் குமரி மண்ணைச் சார்ந்தவர் என்று கூற முடியாது என்று கூறுவார் உண்டு. ஒரு சொல்லை வைத்து ஒருவரை எந்த மண்ணைச் சார்ந்தவர் என்று நிச்சயமாகக் கூற முடியும்.

தமிழகத்தின் பிற பகுதிகளில் கரை புரண்டோடும் நீரை மட்டுமே வெள்ளம் என்பர். கிணற்று நீரையும், குளத்து நீரையும் வெள்ளம் என்று கூறும் வழக்கம் இல்லை. ஆனால் குமரி மாவட்டத்தில் மட்டும்தான் கிணற்று நீரையும், குளத்து நீரையும், ஆற்று நீரை யும் வெள்ளம் என்று கூறும் வழக்கம் உள்ளது. வள்ளுவரும் குளத்து நீருக்கு வெள்ளம் என்ற சொல்லையே பயன் படுத்துகின்றார். வள்ளுவரும்,

"வெள்ளத் தனையமலர் நீட்டம்மாந்தர் தம்
உள்ளத் தனையது உயர்வு"

(குறள் – 595)

எனப் பாடியுள்ளார்.

குமரி மாவட்டத்திலுள்ள சில பழக்க வழக்கங்கள் திருக்குறளிலே இடம் பெற்றுள்ளன. அவற்றுள்

இரண்டினை இங்கே கூற விரும்புகிறேன். நாஞ்சில் நாட்டுக்கே உரிய உழவியல் செயல்முறையான பொடி விதைப்பு அல்லது புழுதி விதைப்பு என்ற முறையைத் திருவள்ளுவர் தமது குறளிலே குறிப்பிடுகிறார்.


எம்.ஜி.ஆர்.


ஜெயலலிதா


குமரி அனந்தன்


கலைஞர்

"தொடிப்புழுதி கஃசா
உணக்கின், பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்"
(குறள் – 1037)

என்பது இக்குறள். ஒரு பங்கு மண், கால் பங்கு ஆகும்படி உழுது காயவிட்டால், ஒரு பிடி உரம்கூடத் தேவையில்லாமல் அந்நிலத்தில் பயிர் செழித்து விளையும் என்பது இக்குறளின் பொருள். நாஞ்சில் நாட்டு மக்கள் இந்தக் காய்ந்த மண்ணைப் புழுதி என்றே இன்றும் அழைக்கின்றனர். வள்ளுவரும் இதனைத் தொடிப்புழுதி என்றே இக்குறளில் குறிப்பிடுகிறார். மேலும் இக்குறளில் வரும் 'உணக்கின்' என்ற சொல்லுக்குக் 'காயவைத்தல்' என்பது பொருள். இச்சொல்லை அதே பொருளில் குமரி மாவட்ட மக்கள் மட்டும் இன்றும் பயன்படுத்துகின்றனர்.

குமரி மாவட்ட மீனவர்கள் கடலில் சென்று மீன் பிடிக்கப் பயன்படுத்தும் தூண்டிலில் ஜரிகையை இணைப்பது வழக்கம். ஜரிகை என்பது பொன் இழையாகும். இதனை வள்ளலார் இராமலிங்க அடிகள் 'பொற்றுகில்' என்று பாடுகின்றார். இதனைக் கசவு என்றும் குமரி மாவட்டத்தினர் கூறுவதைக் கேட்கலாம். இவ்வாறு தூண்டிலில் ஜரிகையை இணைத்து மீன்பிடிக்கும் வழக்கத்தைத் திருவள்ளுவர் தமது திருக்குறளிலே உவமையாகக் குறிப்பிடுகிறார்.

மினுமினுப்பிற்கு மீன் மயங்கும் என்று முதன் முதலில் கண்டுபிடித்தவர்கள் குமரி மாவட்ட மீனவர்கள். குறிப்பாகக் கடியப்பட்டினம் மீனவர்கள் தூண்டிலில் ஜரிகையை இணைப்பதில் மிகவும் வல்லவர்கள். பொதுவாக எல்லா மீன்களும் பொன் ஜரிகைக்கு மயங்கும் என்றும், கட்டா, கொளுவை, பாரை முதலிய சிலவகை மீன்கள் மட்டும் வெள்ளி ஜரிகைக்கு மயங்குவதுண்டு என்றும் அவர்கள் கண்டுபிடித்து, குறிப்பிட்ட அந்தத் தூண்டிலில் இணைப்பர். இதுபோன்ற பல நுணுக்கங்களைக் கடியப்பட்டினம் மீனவர்கள் தெரிந்து வைத்திருந்தனர்.

தற்போது ஜரிகையின் விலை அதிகமாக இருப்பதால், 'மின்ஸ்' என்று அழைக்கப்படும் செயற்கை நூல் இழையை அவர்கள் பயன்படுத்துகின்றனர். பெண்கள் தலையிலே வைக்கப் பயன்படுத்தும் ரிப்பனில் உள்ள மினுமினுக்கும் நூலைப் பிரித்து எடுத்து அதனைத் தூண்டிலில்

இணைப்பதும் உண்டு. ஒரு காலத்தில் கற்றாழை நாரை எடுத்து அதனைத் தூண்டிலில் இணைப்பதும் உண்டு. ஒரு காலத்தில் கற்றாழை நாரை எடுத்து நிறம் பூசி இதற்குப் பயன்படுத்தி வந்தனர். ஆக, தூண்டிலில் பொன் இழையை வைத்து மீன் பிடிக்கும் வழக்கம் கன்னியாகுமரி மாவட்டத்தில் பண்டைக் காலத்திலிருந்தே இருந்து வந்துள்ளது.

பெரியோர்கள் மறைந்த இடத்திலே அவர்களுக்குக் கோயில் எழுப்புவது நமது நாட்டு மரபு. அந்த அடிப்படை யிலேதான் மயிலாப்பூர் சென்று மறைந்த திருவள்ளுவ நாயனாருக்கு அங்கே கோயில் எழுப்பியிருக்க வேண் டும். இதை விடுத்துத் திருவள்ளுவர் மயிலாப்பூரிலேயே பிறந்து, மயிலாப்பூரி லேயே வாழ்ந்து, மயிலாப்பூரிலேயே மறைந்தார் எனக் கருதுவது தவறு. அவரை ஒரு சிறிய வட்டத்திற்குள் நிறுத் துவது பொருத்தமானதல்ல. சான்றோர் கள் மறைந்த இடத்தில் சமாதி கட்டிக் கோயில் எழுப்புவது நமது மரபு. அந்த மரபின்படி மயிலையில் கோயில் தோன்றியிருக்க வேண்டும்.

திருக்குறளை நமக்குத் தந்த திரு வள்ளுவர் நாடாண்ட மன்னர் என்ற ஒரு கருத்து ஏற்கனவே உண்டு. வள்ளு வர் அரச பரம்பரையில் பிறந்தவர் என்று கருதலாம் என்பது தமிழறிஞர் சாமி சிதம்பரனார் கூற்று. அவ்வா றாயின், வள்ளுவ நாடு எங்கே இருந்தது? என்ற கேள்வி இங்கு எழுகின்றது.

இன்றைய குமரி மாவட்டப் பகுதி யில் முன்பு 'வள்ளுவநாடு' என்ற பெய ரில் ஒரு நாடு இருந்தது என்ற தகவலைக் கல்வெட்டுகளும், செப்பேடும் தெரிவிக் கின்றன. பேச்சிப்பாறை அணையை அடுத்துள்ள திருநந்திக்கரைக் குடை வரைக் கோயிலில் கிடைத்த கல்வெட்டு ஒன்றும் வள்ளுவ நாட்டைக் குறிப்பிடு கின்றது.

கருப்புக்கோட்டை கைலாசநாதர் கோயிலில் கொல்லம் ஆண்டு 339–இல் அதாவது கி.பி. 1164–இல் செதுக்கப் பட்ட இரண்டு கல்வெட்டுகள் வள்ளுவ நாட்டைக் குறிப்பிடுகின்றன. இக் கல்வெட்டுகளிலிருந்து கி.பி. 12–ஆம் நூற்றாண்டு வரை வள்ளுவ நாடு இருந்ததாகத் தெரிய வருகிறது. இந்த வள்ளுவ நாட்டைத்தான் திருவள்ளுவர் பண்டைக் காலத்தில் ஆண்டிருக்க வேண்டும்.

பழங்குடி மக்களின் வாய்மொழி யாக வழங்கி வரும் வரலாற்றுத் தகவல் களின் மூலம் திருவள்ளுவர் வரலாற்றை யும் அறிய முடிந்தது. அங்குக் காணப் படும் ஒரு கிணற்றின் அருகே திருவள்ளு வர் கல்மலை என்று செதுக்கப்பட்ட ஒரு கல்வெட்டும் கிடைத்தது. அக்கல் வெட்டு பிற்காலத்தல் செதுக்கப்பட்டது தான். ஆனல், திருவள்ளுவர் பெயரில் அமைந்துள்ள இந்த மலை, வள்ளுவன் கல்மொட்டை என்று குமரி மாவட்ட நில வரைபடத்தில் இடம் பெற்றுள்ளது. குமரி மாவட்டத்தில் பொற்றை, மொட்டை ஆகிய சொற்கள் சிறிய மலையை, அதாவது குன்றினைத்தான் குறிப்பிடும். வள்ளுவன் கல்பொற்றை யின் உச்சியில் பொறிக்கப்பட்டுள்ள பாதம் வள்ளுவன் பாதம் என்று அழைக்கப்படுகிறது.

இத்தகவல்களின் அடிப்படையில் நோக்கும்போது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு வகை நிலங்களையும் தன்னகத்தே கொண்ட ஒரு பகுதியிலேதான் திருவள்ளுவர் பிறந்திருக்க வேண்டும், வாழ்ந்திருக்க வேண்டும் என்று தெரிய வருகிறது. தமிழகத்தில் குமரி மாவட்டத்திலே மட்டும்தான் நால்வகை நிலங்களும் இணைந்து கிடக்கின்றன.

கல்குளம் வட்டத்தில் மருதமும், நெய்தலும் இணைந்து கிடக்கும் திரு நாயனார் குறிச்சியில் பிறந்த திரு வள்ளுவ நாயனார் அதே வட்டத்தில் குறிஞ்சியும், முல்லையும் இணைந்து கிடக்கும் கூவைக்காடு மலை வந்து ஓய்வெடுத்தார் என்பதற்குரிய ஆதாரங் கள் திருக்குறளிலேயே நமக்குக் கிடைத் துள்ளன.

குமரி மண்ணில் பண்டைக்காலத் தில் வள்ளுவ நாட்டை ஆண்டு வந்த திருவள்ளுவர் மகாவீரர், புத்தர் போன்று நாட்டைத் துறந்து இல்லறத்தி லிருந்து துறவறத்திற்கு மாறி, திருக் குறளை இந்த உலகிற்குத் தந்தார் என்று கூறுவதுதான் ●

கட்டுரை



# செ.சரத்



# வேர் பிடிக்கும் வேளாண் வணிகம்!

**நா**டு சுதந்திரம் அடைவதற்கு முன்பு விவசாயத் தொழில் என்பது காலனி ஆதிக்கத்தின் பிடியில் ஒரு கூண்டுக்கிளியாய்ச் சிறைப்பட்டுக் கிடந்தது. பின்பு கூண்டுக்கிளி விடுதலை ஆனது. ஆனாலும் இன்னும் சிறைவாசக் கொடுமை தீர்ந்தபாடில்லை.

அண்மையில்கூட மகாராஷ்டிரா மாநிலத்தில் வெங்காயத்தின் விலை கடும் சரிவைக் கண்டு விவசாயிகளின் வாழ்வாதாரத்தைப் பாழ்படுத்தியது. இப்படிப் பல காரணிகள் இன்னும் அவர்களை நிம்மதியின்றித் துரத்திக் கொண்டே வருகிறது. இவற்றிற்கு முற்றுப்புள்ளி வைக்கும் நோக்கத்தில் மத்திய அரசாங்கம் அத்துறையின் பெயரை விவசாயம் மற்றும் விவசாயிகள் நலன் அமைச்சகம் என்றும், விவசாயிகளின் வருமானத்தை 2022–க்குள் இரண்டு மடங்கு ஆக்குவோம் என்றும் உறுதி பூண்டுள்ளது. இது எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்தும் என்பதை 2022–இல்தான் அறிய முடியும்.

ஏன் இன்றைய பொருளாதார வல்லுநர்களும் விவசாயத்தை விவசாயிகளுக்கு லாபம் தரும் வகையில் வணிகத்திறன்களை உருவாக்க வேண்டும் என்று அழுத்தமாகச் சொல்லிவருகிறார்கள்.

**விவசாயக் கடன் தள்ளுபடி :** விவசாயக் கடன் தள்ளுபடி என்பது வேளாண் வணிகத்திற்கு நேர்மறையான ஒன்றாகும். ரிசர்வ் வங்கியின் கணக்குப்படி, ஒரு தனிநபரோ அல்லது நிறுவனமோ 90 நாட்களில் கடனைச் செலுத்தாவிட்டால் அது வாராக்கடன் ஆகும். தற்பொழுது வாராக்கடனின் அளவு ஒரு சராசரி மனிதனின் இரத்த அழுத்தத்தைவிட அதிகரித்துச் சென்று கொண்டிருக்கிறது.

இதற்கான விடை வங்கியிடம் கடன் வாங்கிச் சுருட்டி ஏப்பம்விட்டு, பின் அரசாங்கத்திற்குத் தெரிந்தோ, தெரியாமலோ வெளிநாடு போய் அங்கு ஆடிப்பாடும் தொழிலதிபர்களுக்கும், தலைமறைவாய் உள்ள அவர்களைக் கண்டுபிடித்து விரைவில் நாடு கடத்துவோம் எனக் கூறும் அப்பாவி அரசாங்கத்திற்கும் மட்டுமே தெரியும்.

இதற்கிடையில் வெயிலில் மாடு மாதிரி உழைத்துச் சிறுகச்சிறுக வங்கியில் கடன் வாங்கும் கூலித் தொழிலாளியும், விவசாயியும் கடனைச் செலுத்தாவிட்டால் மிஞ்சுவது ஜப்தி, மிதமிஞ்சிய (அவ) மரியாதை என அடுக்கிக் கொண்டே போகலாம்.

ஒரு காலத்தில் வெங்காயமும், பருப்பும் மத்திய அரசாங்கத்தையே ஆட்டம் காண வைத்தன




என்பது வரலாறு நமக்குக் காட்டும் உண்மை. அதுவே தற்போது அரசியலில் உள்ள எதிரியை வீழ்த்த விவசாயக் கடன் தள்ளுபடி ஒரு பலம் வாய்ந்த ஆயுதமாகக் கருதப்படுகிறது. ஆனால் அது நாளடைவில் மிகப்பெரிய பாதிப்பை உண் டாக்கும் என்கின்றனர் பொருளாதார நிபுணர்கள்.

உதாரணத்திற்கு அண்மையில் வெளியான மத்திய தலைமைக் கணக்குத் தணிக்கை அதிகாரியின் (சிஏஜி) அறிக்கைப்படி, 2008–ஆம் ஆண்டு அறிவிக்கப்பட்ட விவசாயக் கடன் ரத்து மற்றும் கடன் நிவாரணத் திட்டத்தின்படி நாடு முழுவதும் கடந்த 4 ஆண்டுகளில் 3.69 லட்சம் சிறு விவசாயிகள் மற்றும் 60 லட்சம் பிற விவசாயி களுக்கு வழங்கப்பட்ட ரூ.52,516 கோடி கடன் தள்ளுபடி செய்யப்பட்டுள்ளது. அதில் வழிகாட்டு நெறிமுறைகளுக்கு மாறாக ரூ.164.60 கோடி கடன் தள்ளுபடி செய்யப்பட்டுள்ளது என்றும் தகுதியுடைய 13.46 சதவீத விவசாயிகளுக்குக் கடன் தொகை தள்ளுபடி செய்யப்படவில்லை என்றும் கூறியுள்ளார்.

மேலும் கடன் தள்ளுபடி என்பது கடனைத் திருப்பிச் செலுத்த வேண்டும் என்ற ஒழுக்கத்தை உடைத்துவிடும் என்றும், அடுத்தமுறை கடனைத் திருப்பிச் செலுத்த விவசாயிகள் அடுத்தத் தேர் தல் வரை காத்திருப்பார்கள் என மத்திய ரிசர்வ் வங்கியின் முன்னாள் ஆளுநர் உர்ஜித் பட்டேல் கருத்துத் தெரிவித்தார்.

அதேபோல் விவசாயிகளுக்கு அவர்களின் உற்பத்திச் செலவில் இருந்து 1.5 மடங்கு அதிக மாக, குறைந்தபட்ச ஆதரவு விலை உயர்த்தி வழங் கப்படும் என்னும் அரசாங்கத்தின் அறிவிப்பும் சரி யானதொன்று இல்லை என்கிறார் பொருளாதார நிபுணர் சுவாமிநாதன் அங்கலேசாரிய ஐயர்.

இதைத்தான் அன்றைய ஐரோப்பிய பொரு ளாதார சமூகம் போர் நடக்கும் சமயத்தில், தனது எதிரியான சோவியத் யூனியனை விட உணவு உற்பத்தியில் தன்னிறைவு அடையச் செய்ய விவ சாயிகளுக்கு உலக அளவில் இல்லாத விலை உயர்வை வாரி வழங்கியது.

இதன் விளைவு மலையளவு வெண்ணெய் மற்றும் இறைச்சி உற்பத்தி, ஆறாக ஓடும் அளவுக்குப் பால் மற்றும் ஒயின் உற்பத்தி மிகுதியாக உருமாறி விற்க முடியாமல் போனது. இறுதியாக வேறுவழியின்றி, ஐரோப்பா வலியச் சென்று எதிரி என்றும் பாராமல் சோவியத் யூனிய னிடம் வந்தவிலைக்கு விற்கும் நிலைக்குத் தள்ளப்பட்டது.

தவறை உணர்ந்த ஐரோப்பா ஒரு முடிவுக்கு வந்தது. அதாவது விவசாயப் பயிர்களுக்கு மானி யம் தருவதைவிட விவசாயிகளுக்கு நேரடியாக தரலாம் என்றும் இறுதியில் அதுவே உற்பத்தி யாகும் உபரியை குறைத்து, விநியோகம் மற்றும் தேவையைக் கட்டுக்கோப்பாக்கி விவசாயி களுக்கு நல்லதொரு விடியலைத் தந்துள்ளதாக அப்பொருளாதார நிபுணர் கூறுகிறார்.

ஆகவே, தற்போது விவசாயக் கடன் தள்ளு படி என்னும் புதிய செலாவணியைக் கைவிட்டு விட்டுப் புதியதொரு தீர்க்கதரிச முடிவை எடுக்க வேண்டும். அதேசமயம் வேளாண்மைக்கு ஆகச் சிறந்த வணிகத்தையும் ஏற்படுத்தித் தர வேண்டும்.

அண்மையில் பிரதமர் மோடி, ‘‘பெரும்பாலான விவசாயிகள் முறைசாரா நிதி நிறுவனங்களான (வங்கி அல்லாத) கந்துவட்டிக்காரர்களிடமும், குறுகிய காலத்தில் கடன் வழங்குவோரிடமும் தான் அதிகம் கடன் பெற்று இருப்பார்கள். எனவே, கடன் தள்ளுபடியால் அவர்களுக்கு எவ் விதப் பயனும் இல்லை’’ என்பதை உறுதிபடத் தெரிவித்தார்.

ஆம், விவசாயக் கடன் தள்ளுபடி என்பது விவசாயிகளின் பிரச்சனைக்கு என்றுமே நிரந்தரத் தீர்வாகாது. இதனைக் கருத்தில் கொண்டுதான் மத்திய அரசாங்கம் வேறு சில பரிந்துரைகளைத் தற்போதைய இடைக்கால பட்ஜெட் மூலம் நிறை வேற்றியுள்ளது. Prime Minister Kisan Samman Nidhi எனப் பெயரிட்டு விவசாயிகளுக்கு நீண்ட காலம் பயன்தரும் வகையில் ‘விவசாயி கவுரவ உதவித் திட்டம்’ உருவாக்கப்பட்டுள்ளது.


பிரதமர் மோடி

இத்திட்டத்தின் சிறப்பு அம்சம் விவசாயிகளுக்கு உதவித் தொகைகளை நேரடியாக அவர்களின் வங்கிக் கணக்கில் செலுத்துவதே ஆகும். இத்திட்டத்தின் முன்னோடி தெலுங்கானா மாநிலம் ஆகும். அதாவது 'ரித்து பந்து' என்னும் திட்டத்தின்கீழ் 58.33 இலட்சம் விவசாய நிலப் பட்டாதாரர்களுக்கு ஏக்கர் ஒன்றுக்கு பருவத்திற்கு நான்காயிரம் ரூபாய் வீதம் ஆண்டுக்கு இரண்டு பருவத்திற்கு எட்டாயிரம் ரூபாய் விவசாயிகளின் வங்கிக் கணக்கில் நேரடியாகச் செலுத்தப்படுகிறது.

இதன்மூலம் விவசாயிகள் விதை, உரம், பூச்சிக்கொல்லி மருந்து வாங்குவதற்கும் மற்றும் அவர்களின் சொந்தத் தேவைக்கும் பயன்படுத்திக் கொள்ளலாம். இதற்காக அம்மாநிலம் ஆண்டு ஒன்றுக்கு ரூ.12000 கோடியை நிதியாக ஒதுக்கியுள்ளது. ஆனால் இத்திட்டத்தில் உள்ள குறைபாடு என்பது நிலத்தைக் குத்தகைக்குக் கொடுத்திருப்போருக்குப் பயனே தவிர, குத்தகைக்கு எடுத்துப் பயிரிடுபவர்கள் இதனால் பயன் அடையமாட்டார்கள்.

மேலும் இத்திட்டத்தில் ஏக்கருக்கு வரைமுறை இல்லையென்பதும், பெரிய பெரிய நிலச்சுவான்தாரர்களுக்கும், பெரிய விவசாயிகளுக்கும் பொருந்தும் என்பது மிகப்பெரிய குறை. அதனை நிவர்த்தி செய்யும் வகையில் தற்போது ஒடிசா மாநிலம் 'கலியா திட்டம்' (Krushak Assistance for Livelihood and Income Augmentation (KALIA) எனப் பெயரிட்டு ரூ.10,000 கோடி நிதியில் ஏக்கருக்கு இரண்டு தவணைமுறையில் ரூ.10,000 (அதாவது ஒவ்வொரு பருவத்திற்கும் ரூ.5000 வீதம்) என இரு பருவங்களுக்கும் தரப்பட இருக்கிறது. பெரு விவசாயிகள் இந்தத் திட்டத்தில் இடம்பெற மாட்டார்கள் என்பதும் குத்தகைதாரர்களும் நேரடியாக விவசாயத்தில் ஈடுபடுபவர்களுமான 30 இலட்சம் சிறிய, நடுத்தர விவசாயிகள்தான் சேர்க்கப்பட்டுள்ளனர் என்பதும் சிறப்புக்குரிய ஒன்றாகும்.

இதுபோக வாழ்க்கைக் காப்பீடாக ரூ.2 இலட்சமும், விபத்துக் காப்பீடாக ரூ.2 இலட்சமும் தரப்படும் என்று அம்மாநில முதல்வர் கூறியுள்ளார். மேற்குவங்க மாநிலமும் இதனைக் 'கிரிஷ் கிரிஷாக் பந்து' என்னும் திட்டத்தின்கீழ் 72 இலட்சம் விவசாயக் குடும்பங்களுக்கு ஆண்டுக்கு இரண்டு முறை ஒரு ஏக்கருக்கு தலா ரூ.2500 வீதம் வழங்கப்படும் என்றும் அறுபது வயதுக்குள் விவசாயி மரணம் அடைந்தால், அவரது குடும்பத்துக்கு ரூ.2 இலட்சம் இழப்பீடு தொகை வழங்கப்படும் என்றும் அறிவித்துள்ளார்.


சுவாமிநாதன் அங்கலேசாரிய ஐயர்

இதுபோன்ற திட்டங்கள் விவசாயிகளை வெளிஆட்களிடம் இருந்து அதிக வட்டிக்குக் கடன் வாங்குவதைக் குறைத்து, அவர்களுக்குத் தகுந்த பயிர்களைச் சாகுபடி செய்யவும், அவர்களின் சொந்தத் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளப் பெரிதும் பயன்படும் என்கின்றனர் பொருளாதார வல்லுநர்கள்.

இதன் தொடர்ச்சியாக மத்திய அரசாங்கம் தற்போது இரண்டு ஹெக்டர் அல்லது அதற்கும் குறைவாக வைத்துள்ள 12 கோடி விவசாயிகளுக்கு ரூ.6000 நேரடி மானியமாக விவசாயின் வங்கிக் கணக்கில் மூன்று (ஒவ்வொரு தவணையிலும் ரூ.2000 வீதம்) தவணையாகச் செலுத்தப்படும் என்று கூறியுள்ளது. இதற்காக ரூ.75000 கோடி நிதியும் ஒதுக்கப்பட்டுள்ளது.

மேலும் இத்திட்டத்திற்கு வலிமை சேர்க்கும் வகையில் ஆந்திரா மாநிலம் 'ஆனந்த சுகிபவா' என்னும் திட்டத்தின்கீழ் ரூ.4000 இரண்டு தவணையாக விவசாயிகளுக்கு (மத்திய கவுரவத் திட்ட ஆந்திரா விவசாயப் பயனாளர்களுக்கு மட்டும்) வழங்கப்படும் என்று அறிவித்துள்ளது. இதனால் ஆந்திரா மாநில விவசாயிகள் ஆண்டுக்கு ரூ.10,000 பெறுவர். இதுபோல அனைத்து மாநிலங்களும் கூடுதலாக உதவித் தொகையைப் பங்கிட்டுக் கொண்டால், விவசாயிகளுக்குப் பெரிதும் பயனுள்ள ஒன்றாய் இருக்கும்.

**விவசாயிகளின் கூட்டு முயற்சி :** கூட்டுயர்வே நாட்டுயர்வு என்பார்கள். அதற்கான அரசாங்கத்தின் முதல் வித்து வேளாண்மையில் உழவர்களே நடத்தும் உழவர் உற்பத்தியாளர் நிறு

வனம் ஒன்றாகும். அதாவது 1000 விவசாயிகள் ஒன்றிணைந்து மேற்கொள்ளும் வேளாண் சார்ந்த வணிகமே ஆகும். முக்கியமாக இதில் இடைத்தர கர்கள் இல்லாமல் நிறுவனத்தில் உள்ள அனைத்து விவசாயிகளும் ஒன்றுசேர்ந்து தங்களது விலை பொருள்களை மதிப்புக்கூட்டி சந்தையில் லாபத் துடன் விற்றுக் கொள்ளலாம்.

**வேளாண்மையில் தரவுகள் :** வெறும் தரவுகள் (Data) விவசாயத்தில் எடுபடுமா என்று நீங்கள் எண்ணலாம். ஆனால் தரவுகள்தான் நாளைய விவசாயத்தில் முக்கியப் பங்கு ஆற்றும் என்கிறார் கள் வேளாண் தொழில் முனைவோர்கள்.

உதாரணத்திற்கு வேளாண் சார்ந்த தொழில் முனைவோரின் நிறுவனமான நிஞ்சாகார்ட் விவ சாயிகளுக்கும், சில்லறை வணிகர்களுக்கும் இடையிலான பிணைப்பை ஏற்படுத்தும் தளம். இந்நிறுவனத்திடம் 5 சில்லறை விற்பனையாளர் கள் (கடைக்காரர்) உள்ளனர். அவர்கள் தமிழ்நாடு, தெலுங்கானா, கர்நாடகம், ஆந்திரப் பிரதேசம் மற்றும் மகாராஷ்டிரா போன்ற மாநிலங்களில் உள்ள 35 விவசாயிகளிடம் இருந்துதான் காய்கறி மற்றும் பழங்கள் முதலியவற்றைக் கொள்முதல் செய்கின்றனர். இதில் விற்பனையாளர்களுக்கு நுகர்வோரின் நுகர்வுப் பாங்கு தெரியும் பட்சத்தில், விவசாயிகளுக்கு எந்தப் பயிர் பயிரிட வேண்டும் என்பதும் தெரிந்துவிடும்.

மேலும் விவசாயிகளுக்கும் சந்தையின் நிலவரம் மற்றும் தேவை, எந்தப் பயிர் எப்போது பயிரிட வேண்டும்? எப்போது அறுவடை செய்ய வேண்டும்? போன்றவற்றை அறிந்துகொண்டு முடிவு எடுப்பதற்குத் தரவுகள் முக்கியப் பங்காற்று கின்றன.

இதன்மூலம் விவசாயிகளுக்கும் சந்தையில் விற்பதைவிட 2 சதவிகித லாபம் அதிகமாகக் கிடைக்கிறது. சொன்னால் நம்பமாட்டீர்கள். அமெரிக்காவில் உள்ள உழவர் வணிகக் கூட் டமைப்பின் (Farmers Business Network) கீழ் 5 பண்ணைகளுடன் 16 மில்லியன் ஏக்கர் உள்ளது. இதில் உள்ள அனைத்து விவசாயிகளும் விதைக் கப்பட்ட விதையின் செயல்திறன் முதல் வானிலை, அறுவடை, சந்தை வரையிலான அனைத்தையும் தரவுகளாகப் பதிவுசெய்து அதற்கு ஏற்றார்போல் விவசாயம் செய்கின்றனர். எனவே தரவுகள் நாளைய விவசாயத்தை ஆட்கொள்ளும் என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை.

**தடம் பதிக்கும் தனியார் நிறுவனங்கள் :** சில தனியார் நிறுவனங்களும் வேளாண்மையில் கால்பதித்து வருகின்றன. ஐ.டி.சி. நிறுவனமானது கோதுமை விவசாயிகளிடமே நேரிடையாக இடைத்தரகர் இன்றிக் கொள்முதல் செய்கிறது. மேலும் கிராமப்புற விவசாயிகளுக்குச் சந்தையின் நிலவரத்தையும் e-choupal மூலம் வழங்கி வரு கிறது. எனவேதான் ஐ.டி.சி இந்திய அளவில் கோதுமைக் கொள்முதலில் இரண்டாமிடம் வகிக்கிறது.

அதேபோல் இந்தியாவில் விவசாயிகளிடம் இருந்து நேரிடையாகத் திராட்சைப் பழங்களை வாங்கி வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறது மஹிந்திரா நிறுவனம். மேலும் 12 சதவிகிதத் திராட்சைச் சந்தையின் பங்கு மஹிந்திரா நிறுவனத்திடம்தான் உள்ளது.

மேலும் இந்தியாவில் அதானி குழுமம்தான் ஆப்பிள் பழங்களை அதிக அளவில் ஏற்றுமதி செய்கிறது. இன்றும் நம் தென்னந்தோப்பில் உள்ள தேங்காய்களை வெளிச்சந்தையில் விற்கும்போது அதில் உள்ள 10 தேங்காய்களில் ஒரு தேங்காய் மேரிகோ நிறுவனத்திற்குச் செல்கிறது. எனவே, வேளாண் வணிகமானது தனியாரின் பங்களிப்புக் கொண்டுள்ளது என்பதற்கு இவையே சாட்சி.

**எதிர்காலத் தேவையும் விவசாயின் பங்களிப்பும் :** விவசாயிகளின் எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு அரசாங்கம் இளம் தொழில் முனைவோர்களைத் "தொடங்கிடு இந்தியா" (ஸ்டார்ட் அப் இந்தியா) திட்டத்தின்கீழ் விவசாயத் தின் பக்கம் ஊக்கப்படுத்த வேண்டும். உதாரணத் திற்கு WayCool, Ninjacart, Jumbo Tail, Gobasco, Ergos, Crofarm போன்ற ஸ்டார்ட் அப்கள் தொடர் சங்கிலியின் திறனை மேம் படுத்தும் வகையில் விவசாயி, உணவு பதப்படுத்து வோர், மொத்த விற்பனையாளர், சேமிப்புக் கிடங்கு வைத்திருப்போர் ஆகியோரைக் கொண்டு தரவுகள், மென்பொருள் மற்றும் செயலி மூலம் நல்லதொரு இலாபகரமான பிணைப்பை ஏற்படுத்துகின்றனர்.

இதேபோல் EM3, Oxen, Gold Farm போன்ற ஸ்டார்ட் அப்கள் விவசாயிகளுக்குப் பண்ணை இயந்திரங்களைத் தேவையின் பேரில் வாடகைக்குத் தருகின்றனர். மேலும் இதில் வேளாண் இயந்திரம் வைத்துள்ள யார் வேண்டுமானாலும் இணைந்து கொள்ளலாம்.

இதுபோன்ற வரவுகள் விவசாயத்தில் நல்ல தொரு மாற்றத்தை ஏற்படுத்தி வேலைவாய்ப்பை உருவாக்குவதுடன், விவசாயிகளை உற்பத்தியில் இருந்து பிற துறைகளுக்குச் செல்லவும் வழி வகுக்கும். ●

**விவாதம்**



# கமல்ஹாசனின் அநீதி மய்யக் கருத்து

தமிழ்நாட்டில் நடைபெற்று வந்த இடைத் தேர்தலில் அரவக்குறிச்சித் தொகுதிக்குட்பட்ட பள்ளப்பட்டியில் மக்கள் நீதி மய்யத்தின் தலைவர் நடிகர் கமல்ஹாசன் பேசியது பரபரப்பூட்டக்கூடிய செய்தியாகியுள்ளது.

பள்ளப்பட்டி முஸ்லிம்கள் பெரும்பான்மையாக வசிக்கக்கூடிய நகரம். தேர்தல் நேரத்தில் வாக்குச் சேகரிக்க அரசியல் தலைவர்கள் சில உத்தி களைக் கையாள்வது வழக்கம்தான். கமல்ஹாசன் கையாண்ட உத்தி, காட்டுத்தீயாகியது.



கோட்சே

மணிசங்கர் ஐயர் இதேபோல்தான் 2017 குஜராத் சட்டப் பேரவைத் தேர்தலின்போது மோடியை நீசன் (Neech) (இழிபிறவி) என்றும், சாயா விற்றவன் என்றும் கடுமையாக விமர்சித் தார். இந்தியாவே பரபரப்படைந்தது. 12 ஆண்டு கள் குஜராத் முதலமைச்சராக இருந்த மோடியை விமர்சித்தவர் ஐயர். விமர்சிக்கப்பட்டவர் பிற் படுத்தப்பட்ட சாதியைச் சார்ந்தவர்.

1984–ஆம் ஆண்டு பிரதமர் இந்திராகாந்தி சீக்கிய மெய்க்காப்பாளர்களால் சுட்டுக் கொல்லப் பட்டபோது, சீக்கியர்களின்மீது நடந்த தாக்குத லால் டெல்லியில் மட்டும் 3 ஆயிரம் சீக்கியர்கள் கொல்லப்பட்டனர்.

35 ஆண்டுகளுக்குப் பிறகு சென்ற மாதம் சீக்கியர்கள் கொல்லப்பட்டது குறித்து, காங்கிரஸ் தலைவர் சாம் பிட்ரோடாவிடம் கேள்வி கேட்ட போது, “சீக்கியர்கள் கொல்லப்பட்டது என்ன பெரிய விஷயம்?” (So what?) என்று அலட்சிய மாகப் பதில் தந்தார்.

இதிலுள்ள வேடிக்கை என்னவென்றால், மணிசங்கர் ஐயரையும் சாம் பிட்ரோடாவையும் ராகுல் மன்னிப்புக் கேட்கச் சொன்னதுதான். ஏனெனில், அவரே மோடியைத் திருடன் என்று,

உச்சநீதிமன்றமே சொன்னதாகத் தவறாகக்கூறி, உச்சநீதிமன்றத்திலே மன்னிப்புக் கேட்டவர்.

நடிகர் கமல்ஹாசன் நல்ல தமிழ்ப்படங்களைத் தந்த குணச்சித்திர நடிகர். நடனம் கற்றவர். திறமையான நடிகர். திரைப்படத்துறை, கலை என்பதைக் கடந்து அநேகமாக வணிகமயமாகி விட்டது. திரைப்படத்தின் வழியாக மக்களுக்குப் பொழுதுபோக்கு ஏற்படுத்தலாம், தேசபக்தியை வளர்க்க முடியுமா?

அரசியல் துறை என்பது அப்படிப்பட்டதல்ல. அரசு என்ற சாதனத்தை உபயோகித்து, நலிந்த மக்களுக்கு நலன்களைச் செய்ய முடியும். நல்ல அரசியல் தலைவர்கள் அப்படித்தான் மக்களுக்காகப் பலனை எதிர்பார்க்காமல் பாடுபட்டவர்கள்.

காந்திஜியும், படேலும், காமராஜரும் அப்படித்தான் அரசியலைக் கையாண்டனர். நேருஜி சிறைக்குச் சென்றதும், நேதாஜி ராணுவத்தை உருவாக்கியதும் அதற்குத்தான். பகத்சிங் தூக்குத் தண்டனை பெற்றதும் இதனால்தான். இவ்வாறு ஒரு நெடிய வரலாறு அரசியல் துறைக்கு உண்டு. அவர்களெல்லாம், தியாகம் செய்யும் துறையாக அரசியலை ஆக்கியவர்கள்.

நடிப்புத் துறையிலிருந்த கமல்ஹாசன் அரசியல் கட்சியைத் தொடங்கித் தேர்தலில் போட்டி போட்டுள்ளார். தேர்தல் விதிப்படி பிரச்சாரத்தில் ஈடுபடுகிற அரசியல் கட்சித் தலைவர்கள் வாக்காளர்களை மதத்தாலோ, சாதியாலோ பிரித்துப் பேசக்கூடாது. எச்சரிக்கையாக இல்லையென்றால், உணர்ச்சிவசப்பட்டு மத ரீதியில் வாக்காளர்களை ஆதரித்தும், விமர்சித்தும் விடுகிற ஆபத்து பேசுபவருக்கு ஏற்பட்டுவிடும்.



இந்தியா ஒரு செக்யூலர் தேசம். செக்யூலர் என்பதற்கு மதத்தை அரசியலில் கலக்கக்கூடாது என்பது நமது அரசியல் சட்ட விதியாகும். இந்துக்களாகவோ, தேசிய முஸ்லிம்களாகவோ, கிறிஸ்தவர்களாகவோ, சீக்கியர்களாகவோ, பார்சிகளாகவோ, தலித்துகளாகவோ இருந்தாலும், நாம் சுதந்திரம் கேட்டது இந்தியாவிற்குத்தான்.

எல்லா மதங்களைச் சார்ந்தவர்களும் இணைந்து நமக்கு நாமே வைத்துக்கொண்ட 'இந்தியர்' என்ற முத்திரையைக் குத்திக் கொண்டுதான் இந்திய விடுதலைக்காகத் தியாகம் செய்தோம். அப்படி இருந்தும் பாகிஸ்தான் பிரிவினையைத் தடுக்க முடியவில்லை.

மத ரீதியாக இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் பிரிந்தாலும் மதத்தைச் சாராத தேசமாகவே இந்தியா உருவாக்கப்பட்டது. ஜாகீர் உசேன் முதல் அப்துல் கலாம் வரை இந்தியாவில் இஸ்லாமியர்கள் ஜனாதிபதிகளாக இருந்துள்ளனர். ஆனால், பாகிஸ்தானில் இஸ்லாமியர் அல்லாத எவரும் அதிபராக முடியாது.

அரசியல் போராட்டத்தில் ஈடுபட்ட காலம் முதல் காந்திஜி ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் ஒருங்கிணைப்பதற்காகத்தான் எப்போதும் பாடுபட்டார். பாகிஸ்தான் பிரிவினைக்குச் சம்மதிக்காமல் தனது பிரேதத்தின்மீது நடந்து சென்று பிரிவினையைச் செய்து கொள்ளுங்கள் என்று சொன்னவர் காந்திஜி.

இத்தகைய காந்திஜியைப் பற்றிய சில தவறான புரிதல்கள் சில முஸ்லிம்களுக்கு மத்தியில் இருந்தது. சில ஹிந்துக்களுக்கு மத்தியிலும் இருந்தது. காந்திஜியை முஸ்லிம்களுக்கு ஆதரவானவர் என்று ஹிந்துக்கள் சந்தேகித்தனர். ராமராஜ்யம் பேசுகிற ஹிந்துவாகக் காந்திஜியை முஸ்லிம்கள் சந்தேகித்தனர்.

இந்தப் பின்புலத்தில்தான் சில தீவிரவாதிகள் – அதுவும் தவறான புரிதல் கொண்ட அவசரப் புத்திக்காரர்கள் காந்திஜியை உலகத்திலிருந்தே அப்புறப்படுத்தி விட்டால், இஸ்லாமிய தேசமான பாகிஸ்தானைப் போல ஹிந்துஸ்தானாக இந்தியாவையும் மாற்றிவிடலாம் எனத் திட்டமிட்டனர்.

இந்தத் திட்டத்தின்படிதான் சத்தியத்தைப் போதித்த காந்திஜி, கைத்துப்பாக்கியால் சுட்டு வீழ்த்தப்பட்டார். இக் கொலைத்திட்டத்தை நிறை வேற்றிய கொடும்பாவி நாதுராம் கோட்சே. ஆங்கிலத்தில் அவன் (Assassin) – கொலைகாரன் என்றே குற்றம் சாட்டப்பட்டான். அதுதான் உண்மையான வர லாறு. இப்போதுள்ள தீவிரவாதி என்கிற Extremist அல்ல அவன்.



*காந்திஜி*

ஐ.எஸ்.ஐ.எஸ். என்ற இஸ்லாமிய அமைப்பு பயங்கரவாத அமைப்பு (Terrorist Organization). மூளைச்சலவை செய்யப்பட்ட முஸ்லிம் இளைஞர் கள் சிலர் முஸ்லிம் அல்லாதவர்களைக் கொலை செய்கிற 'ஜிகாத்' யுத்தம் செய்கிறார்கள். பின்லே டன், நியூயார்க் இரட்டைக் கோபுரத்தைத் தகர்த்து 5 ஆயிரம் அமெரிக்கர்களைக் கொன்றான். இலங்கையில் இவர்கள்தான் தேவாலயங்களுக் குள் குண்டு வீசினார்கள். இவர்கள் தீவிரவாதி களைவிட மோசமான பயங்கரவாதிகள்.

கொலைகாரன் கோட்சே, அகில பாரத ஹிந்து மகா சபாவைச் சேர்ந்தவன். அதனுடைய நிறுவனர் மதன் மோகன் மாளவியா. சபாவின் கொள்கையான ஹிந்துத்துவா பற்றி இஸ்லாமின் ஜிகாத் போல, கிறிஸ்தவ மதத்தில் conversion எனப்படும் மதமாற்றம் போலக் கடும் விமர்சனங் கள் உள்ளன.

ஹிந்து மகா சபாவிற்குக் காந்திஜியின் மீது கடும் வெறுப்பு. காரணம், மகாசபா உறுப்பினர்கள் காந்திஜியை முஸ்லிம்களின் ஆதரவாளராகச் சந்தேகித்தனர். பாகிஸ்தான் பிரிவினையின்போது அந்த நாட்டிற்கு ரூ. 55 கோடி இந்தியா தர வேண்டும் என்பது தீர் மானம். ஆனால், இந்தியாவின் மத்திய அரசு அதைத் தர முன்வரவில்லை. ரூ. 55 கோடி என்று கணக்கிட்டுச் சொன்னவர் இந்தியா வின் முதல் நிதியமைச்சர் சர் ஆர்.கே. சண்முகம் செட்டியார். காந்திஜி ரூ. 55 கோடி யைத் தர வேண்டும் என்று வற்புறுத்தினார்.

இதைத் தரவேண்டும் என்பதற்காக காந்திஜி உண்ணாவிரதம் தொடங்கினார். காந்திஜியைக் காப்பாற்ற இந்தியா இந்தத் தொகையைப் பாகிஸ்தானுக் குக் கொடுத்தது. இதனால் ஹிந்து மகா சபா கடும் கோபமடைந்தது.

ஹிந்து மகாசபா, காந்திஜியின் 'ஒத்துழை யாமை இயக்கம்' போன்ற அகிம் சைப் போராட்டங்களிலும், 'வெள்ளையனே வெளியேறு' போராட்டத்திலும் கலந்து கொள்ள விரும்பவில்லை.

கோட்சே தனிப்பட்ட முறையில், காந்திஜியின் மீது வெறுப்படைந்து, அவரைப் படுகொலை செய்யத் திட்டமிட்டு அதை நிறைவேற்றினான். சுயநலத்திற்காக அவன் அக் கொலையைச் செய்யவில்லை என்று வாதிட்டா லும், சுய புத்தி பேதலித்து, இதுபோலக் கொடூரமாக நடக்கலாமா என்று அவன் சிந்திக்கவேயில்லை. மகாத்மா அவனுடைய வெறிக்கு பலியானார்.

இவனை முதல் **இந்துத் தீவிரவாதி** என்று கமல்ஹாசன் குறிப்பிட்டதில், அந்த வெறியனை ஹிந்து மதத்தோடு சம்பந்தப்படுத்தியுள்ளார். கார ணம், பேசிய இடம் பள்ளப்பட்டி.

இந்தப் பின்புலத்தில்தான் நடிகர் கமல் ஹாசன் சொன்ன **"சுதந்திர இந்தியாவின் முதல் தீவிரவாதி ஒரு ஹிந்து. அவர் பெயர் நாதுராம் கோட்சே"** என்கிற கருத்தைப் பரிசீலிக்க வேண்டும்.

முதல் தீவிரவாதி என்று சொல்ல வருவதன்



*நேதாஜி*

மூலம் இரண்டாவது, மூன்றாவது எனத் தீவிரவாதிகளின் வரிசை நீள்வதற்கான அர்த்தத்தை அது தருகிறது. கோட்சேயைப் பயங்கர வாதி என்றோ, கொலைகாரன் என்றோ கூறாமல் தீவிரவாதி என்றுதானே கூறினேன் என்று கமல்ஹாசன் சொல்வது, தீவிர வாதி என்றால் பாவப்பட்ட பசு போன்றவர் என்ற அர்த்தத்திலா?


படேல்

கோட்சே தீவிரவாதியா, பயங்கரவாதியா, கொலைகாரனா என்ற மூன்றில் சரியான விடையை ''மார்க்'' பண்ணும் மாணவருக்கான கேள்வியல்ல இது. கமல்ஹாசன் வரலாற்று உண் மையைக் கண்டுபிடித்து விட்டதாக நம்மைக் கைதட்டச் சொல்கிறார்.

கோட்சே தேசபக்தனா, தேசத்துரோகியா என் பது விவாதிப்பதற்குக்கூடத் தகுதியற்றது. காதலி இன்னொருவனைக் கல்யாணம் செய்யப் போவ தாகக் கருதி, ஆத்திரத்தில் அவள் கழுத்தை அறுத்துக் கொலை செய்கிற ஒருதலைக் காதலன் போன்றதுதான் கோட்சேவின் நடவடிக்கை. முஸ் லிம்களுக்கு காந்தி ஆதரவாக இருப்பதற்காகவே கோட்சே அவரைக் கொலை செய்தான்.

கோட்சே பற்றிப் பேசப்படுகிறபோது, அவனு டைய தன்னிச்சையான, தடம் புரண்ட, தவறான, பைத்தியகாரத்தனத்தைத்தான் படம்பிடிக்க வேண்டுமே தவிர, அவனுடைய மதம் என்ன? கட்சி என்ன? உயரம் என்ன? வருமானம் என்ன? என்பது பற்றி எதற்குப் பேச வேண்டும்?

கோட்சேவைப் பற்றி மட்டுமே கமல்ஹாசன் பேசியிருந்தால், அவனைக் கொலைகாரன் என்றும், பாவி என்றும் தாட்சயண்யமில்லாமலேயே பேசியிருக்கலாம். ஆனால், அவனோடு ஹிந்து மதத்தை இணைத்தது அரசியல் ஆதாயத்திற்குத் தானே தவிர வேறு எதற்கு?

இதே ஹிந்து மதத்தில்தான் புலையன் வேறு ஞானி வேறு அல்ல என்ற அத்வைதத்தைக் கண்டுணர்ந்த ஆதிசங்கரர் பிறந்தார். இதே ஹிந்து மதத்திலிருந்துதான் அதன் பிரதிநிதியாக சிகாகோவில் நடந்த உலக சமய மாநாட்டில் கலந்து கொள்ள சுவாமி விவேகானந்தர் சென் றார். இப்படி எத்தனையோ மகான்களையும், ஞானிகளையும், மகரிஷிகளையும் பிரசவித்த மதம் ஹிந்து மதம். அதில் கோட்சேவும் இடம் பெற்றான் என்பதால், அவனை ஹிந்துத் தீவிரவாதி எனக் கமல்ஹாசன் கூறியதில், அரசியல் ஆதாயம் தெரியு மளவுக்கு ஆராய்ச்சி தெரிய வில்லை.

ஹிந்து என்பவன் உலகத் தாரை வசுதேவக் குடும்பத் தாராக நேசிக்கிறவன்., **“தீவிர வாதியாக இருப்பவன் ஹிந்து வாக இருக்க முடியாது. ஹிந்து வாக இருப்பவன் தீவிரவாதியாக இருக்க முடியாது”** என்று பிரதமர் மோடியின் சிந்தனை எந்திரம் ஹிந்து மதத்தின் எடையைத் துல்லியமாகக் காட்டுகிறது.


பாரதப் பிரதமர் நரேந்திர மோடி

ஓட்டு வாங்குவதற்காக இத்தகைய சாக் கடை வழியில் கமல்ஹாசன் பயணம் செய்ய வேண்டிய அவசியமில்லை.

ஒவ்வொரு மதத்திலும் தீவிரவாதிகள் இருக் கத்தான் செய்கிறார்கள். மதவெறியனாக ஒருவர் மாற, அவனுடைய சுபாவம்தான் காரணமே தவிர, மதமல்ல. சுபாவ ரீதியில் கோட்சே அப்படி உரு வான கொலைகாரன். முதல் தீவிரவாதி என அவனை, ஓர் இந்துவாகக் காட்டியதன் மூலம், இரண்டாம் தீவிரவாதி என்ன முஸ்லீமா? எனக் கமலிடமே கேட்கத் தோன்றுகிறது.

தீவிரவாதிக்கு மதம் இல்லை. யானைக்குப் போல மதம் பிடித்தால், அவன் கொலைகாரனா வான். கூட்டமாகக் கொல்லத் தற்கொலைக்கும் தயாராகிவிடுவான்.

வாசகர்களாகிய நீங்கள் கமலுடைய கருத்தை ஏற்கிறீர்களா? எதிர்க்கிறீர்களா? என்பதைப் பற்றிப் பதிவு செய்யுங்கள் ஜூன் 15–க்குள்.

**– பி.சி.**

பேரா. முனைவர் கு. மோகனராசு

கட்டுரை

# திருக்குறளில் பாலியல் வன்முறை



'இன்றைய வாழ்வியல் சிக்கல்களும் திருவள்ளுவர் தரும் தீர்வுகளும்' என நான் 'ஓம் சக்தி' 2019 ஏப்பிரல் திங்களில் வழங்கிய கட்டுரையைப் படித்த க.சி. அகமுடை நம்பி அவர்கள், 'ஓம் சக்தி' 2019 மே திங்கள் இதழில் 'பாலியல் வன்முறைகள் குறித்த பதிவுகள் திருக்குறளில் இல்லை' என்னும் கட்டுரையில் சில கருத்துகளை முன்வைத்துச் சில வினாக் களையும் எழுப்பியுள்ளார்.

திருக்குறள் சான்றோர் அவர். அவரை நான் மதிக்கின்றேன்; வணங்குகிறேன். பெரியவர் அக முடை நம்பி அவர்கள் தெரிவித்துள்ள சில கருத் துகளுக்கும் எழுப்பியுள்ள சில வினாக்களுக்கும் உரிய விளக்கங்களை முன்வைக்க முனை கின்றேன்.



நம்பியவன் மனைவியிடம் தவ றாக நடந்து கொள் பவன் செத்த பிணம் (குறள். 143) என்று திருவள்ளுவர் மிகக் கடுமையாகச் சாடுவது கொடுமையான பாலியல் பிறழ்வின் பதிவாகவே அமைகின்றது.

திருக்குறள் க. சி. அகமுடைநம்பி அவர்கள் சொல்வது போன்று, 'இல் இறப்பான்' என்பதில் வரும் 'இல்' என்பது பிறன் மனைவியைச் சுட்டும் எனக் கொண்டாலும், மற்றவன் மனைவியிடம் வரம்பு கடந்து நடந்து கொள்பவன் – பாலியல் வெறியோடு மற்றவன் மனைவியைக் கெடுப்பவன் – தீராத பழியை அடைவான் என்றும் (குறள். 145), பகை, பாவம், அச்சம், பழி என நான்கும் அவன் வாழும் காலம் வரையும் அவனை விட்டு நீங்காது என்றும் (குறள். 146) திருவள்ளுவர் சாடு கின்றார். இந்தக் குறள்களில் மற்றவன் மனைவியைக் கெடுப் பவன் செயலைக் கொடுமையான பாலியல் பிறழ்வின் பதிவாகவே திருவள்ளுவர் பதிவு செய்வதைக் காண முடிகின்றது.

பாலியல் சார்ந்த சிக்கல்கள் காரணமாகப் பெண்களை வீட்டில் அடைத்து வைக்கும் வன்கொடுமை திருவள்ளுவர் காலத் திலும் இருந்துள்ளது. அத்தகைய வீடுகளைத் திருவள்ளுவர் வீடுகள் என்று சொல்லவில்லை; சிறைச்சாலைகள் என்று வன்மையாகச் சாடு கின்றார் (குறள். 57). இப்படிப் பெண்களை வீட்டில் அடைத்து வைத்துக் கொடுமை செய் வதைத் திருவள்ளுவர் பதிவு செய்துள்ளதும் ஒரு வகைப் பாலியல் வன்கொடுமைப் பதிவே. இவற்றையெல்லாம் இன்றைய சட்டம் பாலியல் வன்கொடுமைகளாகவே கருதுகின்றது. இவற்றை வெறும் ஒழுக்கக் கேட்டின் பதிவுகள் என்று கொள்வதினும் பாலியல் பிறழ்வுகளின் பதிவுகள் எனக் கொள்வதில் தவறில்லை.

காமத்துப்பாலைப் பழைய உரையாசிரியர் களுள், மணக்குடவர் குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் எனப் பிரிக்கின்றார்; பரிப்பெரு மாள் அருமையிற் கூடல், பிரிந்து கூடல், ஊடிக் கூடல் எனப் பிரிக்கின்றார்; காளிங்கர் தலைமகன் கூற்று, தலைமகள் கூற்று, இருபாற் கூற்று என்று பிரிக்கின்றார். பரிமேலழகர்தான் களவு, கற்பு என்று பிரிக்கின்றார். இப்படி ஒவ்வோர் உரையாசி ரியரும் அவரவர் போக்கிற்கும் நோக்கிற்கும் ஏற்பப் பிரிப்பதால், காமத்துப்பாலைக் களவு, கற்பு எனத் திருவள்ளுவர் பிரிக்கவில்லை என்பது தெளிவு.

காமத்துப்பாலில் முதல் ஏழு அதிகாரங்களைக் களவுக்கு உரியனவாகக் கொண்டது பரிமேலழகரே. அந்த ஏழு அதிகாரங்களுள், புணர்ச்சி மகிழ்தல், நலம்புனைந்துரைத்தல், காதல் சிறப்புரைத்தல் என்னும் மூன்று அதிகாரங்களும் களவிற்கு உரியன அல்ல; கற்பிற்கு உரியன என்பது இன்றைய திருக்குறள் ஆய்வுலகோர் பார்வைகளுள் ஒன்று.

திருக்குறள் மூதறிஞர் மதுரை இளங்குமரனார், சாலமன் பாப்பையா போன்ற திருக்குறள் சான்றோர்கள் இத்தகைய பார்வையாளர்களே. இதற்கு அவர்கள்தம் உரைகளே சான்று. சான்றுக்கு, காதல் சிறப்புரைத்தல் என்னும் அதிகாரத்திற்குக் 'கணவனும் மனைவியும் தம் காதல் மிகுதி கூறுதல்' எனத் திருக்குறள் மூதறிஞர் இரா. இளங்குமரனார் கூறுவதைக் கொள்ளலாம். யானும் ஆராய்ந்து, 'திருக்குறள் காமத்துப்பால் தெளிவுகள்' என்னும் 640 பக்க நூலில் சான்றுகளோடு இதனை நிறுவியுள்ளேன்.

இந்நிலையில், திருக்குறள் காமத்துப்பாலில் வரும் தகையணங்கு உறுத்தல், குறிப்பு அறிதல், நாணுத்துறவுரைத்தல், அலர் அறிவுறுத்தல் என்னும் நான்கு அதிகாரங்களே களவிற்கு உரியன. அவற்றுள் எந்த ஒரு குறளிலும் ஆண்பெண் உடலுறவு பற்றிய கருத்து இடம்பெறவில்லை என்பது உறுதி.

மேலும், திருக்குறள் ஓர் அற நூல்; காமத்துப்பாலும் அதனுள் அடக்கம்; திருவள்ளுவர் அகம் பாட வந்தவர் அல்லர்; அகத்துள் அறம் பாட வந்தவர். உலகத்தோர் ஏற்கத்தக்கன இவை என நிலைநாட்ட வந்தவர். களவுக் கால வாழ்க்கையில் ஒரு பெண் தன் காதலனுடன் உடல் உறவு கொண்டாள் என்பதை உலகம் ஏற்குமா? – குறிப்பாக, அந்தப் பெண்ணைப் பெற்றவர்கள் ஏற்பார்களா? என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

அதனை எண்ணிப் பார்த்துத்தான் அகத்தில் நடைமுறை அறம் பாட வந்த திருவள்ளுவர், தாம் படைக்கும் களவுக் கால வாழ்க்கையில் காதலர்களின் உடல் உறவைத் தவிர்த்தார். அதனால்தான், காமத்துப்பாலை ஆராய்ந்து, அவற்றைத் 'திருவள்ளுவர் அகப்பொருள் நெறி' என 133 நூற்பாக்களாக வடித்த நான், 'மெய்யுறு புணர்ச்சி' அகப்பொருட்கு ஆகும்; அறப்பொருட்கு ஆகாது' என வரையறுத்துக் கூறியுள்ளேன். இதுதான் திருவள்ளுவர் காணும் களவுக் கால உயர்நிலைக் காமம். இதுவே அவர்தம் இலக்கிய மற்றும் சமுதாயப் புரட்சி.

ஒரு பாடலுக்குத் திணை வரையறுக்கும்போது, அந்தப் பாடலில் வரும் கருப்பொருளையும் அடிப்படையாகக் கொள்ள வேண்டும் என்பது அகப்பொருள் மரபு.

'அணங்குகொல்' எனத் தொடங்கும் காமத்துப்பால் முதற்குறளில் 'ஆய்மயில்' இடம் பெறுகின்றது; மயில், குறிஞ்சி நிலக் கருப்பொருள். அதனால், காதலர்கள் சந்திக்கும் இடம் குறிஞ்சி நிலம் என்றாகிறது; தலைமகள் அந்த நிலத்திற்கு உரியவள் ஆகின்றாள். தலைமகனைக் 'கொண்கன்' என்று ஐந்து குறள்களிலும் (குறள்கள் 1186, 1265, 1266, 1283, 1285), துறைவன் (குறள். 1157), தண்ணந்துறைவன் (குறள். 1277) என இரண்டு குறள்களிலும் தலைமகன் வழங்குகின்றான். இவை, நெய்தல் நிலத் தலைமகனுக்குரிய பெயர்கள். ஆகவே, தலைமகன் நெய்தல் நிலத்திற்கு உரியவன் ஆகின்றான். குறிஞ்சி நிலத் தலைமகள், நெய்தல் நிலத் தலைமகன் ஆகிய இந்த இரண்டு பேருக்குந்தான் திருவள்ளுவர் முடிச்சு போடுகின்றார். ஆகவே, திருக்குறளில் வருவது காதல் மணம் மட்டும் அன்று, கலப்பு மணமும் ஆகும்.

மேலும், சாதி, மதம், இனம், நாடு போன்ற பிரிவினை உணர்வுகள் அற்ற ஓர் ஒன்றுபட்ட உலகத்தைக் காண எண்ணிய திருவள்ளுவர், காதல் மணத்தை – கலப்பு மணத்தை வரவேற்றுள்ளார் என்பதே திருக்குறளில் காணும் தனிச் சிறப்பு; அதுவே திருவள்ளுவரின் தனிப்பெரும் பெருமை.

திருவள்ளுவர் தம் நூலில், ஒருவனுக்கு உரிமையுடைய மனைவி – தன் மனைவி – என்பதைச் சுட்ட, மனைவியைச் சுட்டும் பெயருக்கு முன் பெரிதும் அடை கொடுக்காமல் வழங்கியுள்ளார். சான்றுகளாக, இல்லாள் (குறள். 52), இல்லவள் (குறள். 53), பெண் (குறள். 56), பெண்டிர் (குறள். 58), இல் (குறள். 59), மனை (குறள். 60) என வாழ்க்கைத் துணைநலம் என்னும் அதிகாரத்திலும், மனை (குறள். 901), பெண் (குறள். 902), இல்லாள் (குறள். 903), மனையாள் (குறள். 904) எனப் பெண்வழிச் சேறல் என்னும் அதிகாரத்திலும் வழங்கியிருப்பதைக் கொள்ளலாம்.

பிறன் ஒருவன் மனைவி என்பதைச் சுட்ட, பெண்ணைச் சுட்டும் பெயருக்கு முன்னால் அடை கொடுத்து வழங்கியுள்ளார்; சான்றுகளாகப் பிறன் பொருளாள் (குறள். 141), பிறன் இல் (குறள். 144), பிறன் இயலாள் (குறள். 147), பிறன் மனை (குறள். 148), பிறன் வரையாள் (குறள். 150) என வருவன

வற்றைக் கொள்ளலாம். இவை அனைத்தும் பிறன்இல் விழையாமை என்னும் அதிகாரத்தில் வருவன. இவ்வாறு வழங்குவதே திருக்குறளில் காணும் ஒழுங்கு முறை.

இதற்கு மாறாகப் பிறன்இல் விழையாமை அதிகாரத்தில், 'எளிதுஎன இல்இறப்பான் எய்தும் எஞ்ஞான்றும் / விளியா நிற்கும் பழி' (குறள். 145). 'பகைபாவம் அச்சம் பழிஎன நான்கும் / இகவா வாம் இல்இறப்பான் கண்' (குறள். 146) என்னும் இரண்டு குறள்கள் அமைந்துள்ளன. இந்தக் குறள் களுக்குத் திருவள்ளுவரின் ஒழுங்கு முறைக்கு ஏற்பத் 'தன் மனைவி' என்றுதான் பொருள் கொள்ள வேண்டும். அப்படியானால், பிறன்இல் விழையாமை என்னும் அதிகாரத்தில் இந்த இரண்டு குறள்கள் இடம் பெற்றுள்ளது ஏன்? என்னும் வினா எழலாம்.

பத்துப்பத்தாகப் பகுத்ததில் சில குறைபாடு களும் காணப்படுகின்றன எனவும் அதிகாரத் தலைப்பிற்குப் பொருந்தாத சில குறட்பாக்கள் இடம் பெற்றுள்ளன எனவும் திருக்குறளை ஆராய்ந்த இன்றைய ஆய்வாளர்கள் சிலர் கூறு வனவும் இங்கு எண்ணிப் பார்க்கத் தக்கன வாகும். இவை பிறரின் தொகுப்புப் பார்வையில் நேர்ந்த பிழைகள் ஆகலாம். அந்த எண்ணத்தோடு தான், 15–க்கு மேற்பட்ட இன்றைய திருக்குறள் உரையாளர்கள், திருக்குறளை முறைமாற்றி அமைத்து உரை கண்டுள்ளதைக் காண முடி கின்றது.

மிகு காமப் பிறழ்வுகளால் ஏற்படும் இழிநிலை களை, பிறன்இல் விழையாமை, பெண்வழிச் சேறல், வரைவின் மகளிர் என்னும் அதிகாரங் களில் தெளிவு செய்த திருவள்ளுவர், ஒத்த காமம் எப்படியெல்லாம் அமைய வேண்டும் என்பதைக் காமத்துப்பாலில் தெளிவு செய்துள்ளார். அவற்றுள் ஒன்றுதான் கணவன் மனைவியின் உடல் உறவு சார்ந்த சிக்கல்களுக்கு அவர் தரும் தீர்வுகள்.

மனைவியிடம் காம உணர்வு தோன்றாத நிலையில் கணவன் உடல் உறவு கொள்ளல் கூடாது; கணவனிடம் காம உணர்வு தோன்றாத நிலையில் மனைவி உடல் உறவு கொள்ளல் கூடாது. இருவரிடமும் காமம் சமன்மைப்பட்ட நிலையில் அல்லது காமம் சமன்மைப்படுத்தப்பட்ட நிலையில்தான் உடல் உறவு கொள்ள வேண்டும் என்பது காமத்துப்பாலின் ஊடுபொருளாக இருப் பதைக் காண முடிகின்றது. ஒருவரிடம் காம உணர்வு தோன்றாச் சூழலில் மற்றொருவர் உடல் உறவு கொள்ள முனைவாரேயானால் அது வன்காம உணர்வாகவே அமையும். (அது இன் றையச் சட்டப்படியும் குற்றமே ). இதனைப் பல குறட்பாக்களில் நுட்பமாக உணர்த்துகின்றார் திருவள்ளுவர்.

'பெண்ணினால் பெண்மை உடைத்தென்ப கண்ணினால் / காமநோய் சொல்லி இரவு' (குறள். 1280).

கண்வழித் தன் காம உணர்வைத் தலைமகள் வெளிப்படுத்துகிறாள்; அவள் உள்ளத்தைத் தலை மகன் கண்வழிக் காண்கின்றான். கண்ணினால் தன் காம நோயைத் தலைமகள் உணர்த்துவது, அவள்தன் பெண்மைக்கே பெண்மை சேர்ப்பதாக அவன் உணர்கிறான். அதன் பிறகே அவன் உறவுக்குத் தயாராகின்றான் என்பதை நுட்பமாக உணர்த்துகின்றார் திருவள்ளுவர்.

'பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம் / பெண்மை உடைக்கும் படை' (குறள். 1258).

கணவன் தன் மனைவியைத் தன்வயப்படுத்த முனைகின்ற தொடக்க முனைப்பை இக்குறள் காட்டுகின்றது. பலவகை மாயச் செயல்களைச் செய்யும் கள்வரான தன் கணவரின் பணிவு மிக்க பேச்சுகள் தன் பெண்மையை உடைப்பதாக அவள் உணர்கிறாள். இந்தப் பணிவான பேச்சுகள், அவளைத் தன்வயப்படுத்துவனவாகவும், உடல் உறவுக்கு உரம் கூட்டுவனவாகவும் அமை கின்றன. இவ்வாறு தன்நிலை உணர்த்திக் காமத் தைச் சமநிலைக்குக் கொண்டுவந்த பிறகே கண வனும் மனைவியும் உடல் உறவு கொள்ள முற்பட வேண்டும் என்பதுதான் திருவள்ளுவம்.

இவ்வாறின்றி, இருவரிடத்தும் காமம் சமனி லைப்படாமல் உடல் உறவு கொள்ளுதல் கூடாது என்பதை, 'ஒருதலையான் இன்னாது காமம் காப்போல / இருதலை யானும் இனிது' (குறள். 1196) என்னும் குறள் தெளிவாக்கு கின்றது. காமம் சமநிலைப்பட்ட பின்னரே உறவு கொள்வது இன்பம் பயக்கும் என்பதை இக்குறள் தெளிவாக்குகின்றது. காமம் சமநிலைப்படாமல் உடல் உறவு என்பது ஒருவரின் வன்மன உணர் வாக அமையும் என்பதையும் நுட்பமாக உணர்த்து கின்றார் திருவள்ளுவர். காமம் என்பது வன்மன உணர்வாக அமையாமல், மென்மன உணர்வாக அமைய வேண்டும் என்பதைத்தான்,

'மலரினும் மெல்லிது காமம் (குறள். 1289) என்னும் தொடர் சுட்டுகின்றது. ஆக, பின்னிரண்டு குறள்களும் காமம் வன்மனத்ததாக அமையக் கூடாது என்பதற்குத் தீர்வுகளாக அமைகின்றன. ●

# நியாயமான தேர்தலை நடத்த...

## விவாதக் கடிதங்களில் சில... சில... சில...

**தே**ர்தல் ஆணையம் மத்திய அரசின் கட்டுப்பாட்டிலிருந்து விடுபடும் வரை இந்தியாவில் நியாயமான தேர்தல் என்பது பகல் கனவாகத்தான் இருக்கும். டி.என். சேஷன் போன்ற தேர்தல் ஆணையர்களாலேயே இந்தியாவில் நியாயமான தேர்தலை நடத்த முடியாமல் போய்விட்ட கொடு மையான கீழ்நிலையில், மத்தியிலும், மாநிலங் களிலும் ஆட்சியில்லாத நிலையை உருவாக்கி னால்தான் நியாயமான தேர்தலை இந்தியத் தேர்தல் ஆணையத்தால் நடத்த முடியும்.

– **இரா. வளையாபதி**, தோட்டக்குறிச்சி

**நி**யாயமான தேர்தலுக்கு அருட்செல்வர் சொல்லியபடி மக்களின் வாக்களிக்கும் வயதும், வேட்பாளரின் வயதும் கூட்டப்பட வேண்டும். கட்சி களின் எண்ணிக்கைகளைச் சட்டத்தின் மூலம் இரண்டு அல்லது மூன்றுக்கு மேல் இல்லாமல் செய்ய வேண்டும். தேர்தலின் போது ஆட்சியி லிருக்கும் கட்சி ராஜினாமா செய்து தேர்தலை எதிர்கொள்ள வேண்டும். முழு அதிகாரமும் தேர் தல் ஆணையத்திற்கு வர வேண்டும். மக்களுக்கு இலவசங்களை அளிப்பதைத் தடைசெய்ய வேண்டும். ஓட்டுரிமை உள்ள அனைவரும் கட் டாயம் வாக்களிக்க வேண்டும் என்று விதிக்கப்பட வேண்டும். இவற்றை நடை முறைப்படுத்தினாலே நியாயமான தேர்தல் நடைபெற்று நல்லவர்கள் ஆட்சி அமைய வழிகோலும்.

– **மு. கணபதி**, பெருந்துறை

**தே**ர்தல் தேதி அறிவிக்கப்பட்ட நாளிலிருந்து முடிவுகள் அறிவிக்கப்படும் நாள் வரை மத்திய – மாநில அரசுகள் தங்கள் ஆட்சி அதிகாரத்தி லிருந்து விலகி இருப்பது நேர்மையான தேர்த லுக்கு வழிவகுக்கும். தேர்தல் ஆணையமே பார்லிமெண்ட்டிற்குப் பரிந்துரை செய்து சட்டம் இயற்றச் செய்யலாம். பதவியை விட்டு விலகி இருக்கும் பட்சத்தில் தேர்தல் பணியில் ஈடுபடும் அதிகாரிகள் அச்சமின்றி சுதந்திரமாக, நேர்மை யாகப் பணியாற்ற முடியும். ஆட்சியாளர்கள் பழிவாங்கும் செயல் அறவே ஒழிக்கப்படும்.

– **ப.அடைக்கலம்**, திருவில்லிப்புத்தூர்

**தே**ர்தல் ஆணையமே ஒரு நிர்வாகக் குழுவை உருவாக்கி அந்தக் குழுவின் கட்டுப் பாட்டில் காவல்துறை, அமலாக்கத்துறை, வருமான வரித்துறைகளைக் கொண்டுவர வேண்டும். சுருக்கமாகச் சொல்வதென்றால், தேர்தல் ஆணை யர் தேர்தல் முடியும் வரை சர்வாதிகாரியாகச் செயல்பட வேண்டும். அப்படியென்றால், அதற் கான தகுதியும், திறமையும், ஆளுமையும் இருந் தாக வேண்டும். இதெல்லாம் சாத்தியமானால் நியாயமான தேர்தலை நிச்சயமாக நடத்த முடியும்.

– **இரா. கல்யாணசுந்தரம்**, மதுரை.

**ச**கல அதிகாரங்களும் இருந்தும் தேர்தல் ஆணையம் ஆளும் கட்சிகளின் தலையீட்டால் தடுமாறும் நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்டது. தேர்தல் நடக்கும் ஒரு மாத காலத்திற்கு மத்தி யிலும், மாநிலங்களிலும் ஆட்சிகள் இல்லாத நிலையைத் தேர்தல் ஆணையம் உருவாக்கலாம் என்ற கருத்து ஏற்புடைத்தே! அப்போதுதான் ஆளுங்கட்சி, எதிர்க்கட்சி என்ற பாகுபாடின்றி சுமுகமான, நியாயமான தேர்தலைத் 'தேர்தல் ஆணையம்' நடத்த முடியும். மக்களும் வரவேற்பர்.

– **நவீன்குமார்**, நடுவிக்கோட்டை

**மு**தன்முதலில் தேர்தலில் போட்டியிடும் ஒரு கட்சியின் வேட்பாளர் தனது வீடு ரூ. 5 லட்சம் கடனில் இருப்பதாகக் கணக்குக் காட்டுகிறார். அவர் எம்.எல்.ஏ. ஆகி 5 ஆண்டுகள் கழித்துப் போட்டியிடும்போது ரூ.10 கோடி சொத்து இருப்ப தாகக் காட்டுகிறார். வருமானத்திற்கு மீறிச் சொத்து சேர்த்த தாகக் கூறி அவரது வேட்பு மனுவைத் தள்ளுபடி செய்ய முடியாத தேர்தல் கமி ஷன், எதற்காகக் கணக்குக் கேட்கிறது? எதிர்க் கட்சிகள் வீடுகளிலும், அலுவலகங்களிலும் பறிமுதல் செய்யப்படும் வருமான வரித்துறையும், தேர்தல் கமிஷனும் ஆளுங்கட்சியினரைக் கண்டு

கொள்வதே இல்லை. தேர்தல் கமிஷன் ஆளுங் கட்சியின் ஊதுகுழல் என்பது சரியே.

**– சீமான்ஜி பாரதி**, வெள்ளானைக்கோட்டை

**நா**ட்டில் வர, வரக் கட்சிகளின் எண் ணிக்கை அதிகமாகி வருகிறது. இது மிகவும் வேதனைக்குரியது. ஏதாவது ஒரு கூட்டணியில் சேரப் பேரம் பேசுகிறது. யார் அதிகம் பணம் தரு கிறார்களோ, அங்கே போய்ச் சேர்ந்து கொண்டு தேர்தல் சமயத்தில் தில்லுமுல்லு செய்கிறது. அதனால், இன்று நியாயமான தேர்தல் நடைபெறு வது கடினமாய் உள்ளது என்பது என்னுடைய கருத்து.

**– தங்கவேல் பழனிச்சாமி**, பெரியகள்ளி வலசு.

**இ**ன்று நாட்டில் 560 கட்சிகள் இருப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. ஆனால், பாரதிய ஜனதா, காங்கிரஸ், கம்யூனிஸ்ட் கட்சிகள் ஆகியனவே நாடு முழுவதும் உள்ளன. எனவே, நான்கு கட்சி களை மட்டும் வைத்துக் கொண்டு மாநிலங்களில் போட்டியிடும் கட்சிகள் தேசியக் கட்சிகளின் சின்னங்களில் போட்டியிடச் செய்யலாம். எல்லா வற்றிற்கும் மேலாக, தேர்தல் அறிவிக்கப்பட்ட வுடன் பதவியில் உள்ள கட்சிகள் பதவி விலக வேண்டும்.

**– தி. குமாரராஜா**, உடுமலைப்பேட்டை

**ந**டைமுறையில் தேவையில்லாத சட்டத்தை நீக்கிவிட வேண்டும். தற்போது தேவைப்படும் புதிய சட்டங்கள் இயற்றப்பட வேண்டும். தவறு செய்தவர் யாராக இருந்தாலும் தண்டிக்கப்பட வேண்டும். உலகில் உண்மைத் தன்மை குறைந்து கொண்டே வருகிறது. ஊருக்கு உபதேசம் செய்து விட்டு ஒவ்வோர் அரசியல் தலைவரும் செய்யும் கொடும் செயல்களை ஏடு எடுத்து எழுதினால் மாளாது. மதம் பிடித்தால் யானை காட்டை அழிக்கும். மனிதனுக்கு மதம் பிடித்தால் நாட்டை அழிப்பான்.

**– ஆ.ர. அருணகிரி**, ஆலாம்பாளையம்

**ஆ**ட்சிக்கும் – தேர்தலுக்கும் ஐந் தாண்டுகள் கால அவகாசம் தரும்போது, 130 கோடி மக்கள் வாக்களிக்கக் குறைந்தபட்சம் மூன்று தினங்கள் அளித்தால் என்ன? அனைத்துத் தரப்பினரிட மிருந்தும் பெரும்பான்மையான வாக்குகளைத் தேர்தல் ஆணையம் பெறலாமே. மக்கள் வாக்கு எனும் தேர்வு எழுத, அதில் தேர்ச்சி பெறுவோரைத் தக்க பொறுப்புமிக்க பேராசிரியராகத் தேர்தல் ஆணையம் இருந்தாக வேண்டும். இவ்வேளை அரசு அதிகாரத்தில் இருப்போர் மாணாக்கர் களாகக் (கல்வி பயில்வோராக) கருதப்பட வேண்டும்.

**– எஸ்.ஜி. இசட்கான்**, திருப்பூர்.

**இ**ந்தியாவில் மாநிலங்களின் தேர்தலா னாலும் சரி, மத்தியத் தேர்தல் ஆனாலும் சரி, தேர்தல் நடந்து முடியும்வரை ஆட்சியில் யாரும் இல்லாமல் ஜனாதிபதி ஆட்சி நடக்க வேண்டும். தேர்தலில் வெற்றி பெற்றவர்கள் ஆட்சி அமைக்க வேண்டும். புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர் நிறுத்தி யது போல், இனிமேல் ஏழைகள் எம்.பி., எம்.எல்.ஏ. ஆக வரமுடியாது. கோடீசுவரர்களும், கிரிமினல் களும்தான் ஆட்சிக்கு வரமுடியும். இப்போது நடப் பது உண்மையான ஜனநாயகத் தேர்தல் அல்ல.

**– தி.ஈ.தி. ஈசுவர்மூர்த்தி**, திருவில்லிப்புத்தூர்

**தே**ர்தல் நடத்தும் ஒரு மாதக் காலத்திற்கு மத்தியிலும், மாநிலங்களிலும் ஆட்சிகள் இல்லாத நிலையைத் தேர்தல் ஆணையம் உருவாக்க வேண்டும். அப்படிச் செய்தால், வருமான வரித் துறை, அமலாக்கத்துறை, காவல்துறை மட்டு மல்ல, தேர்தல் ஆணையம் நீதித்துறை யையும் அரசுக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரமுடியாத நிலை வரும். நியாயமான தேர்தல் நடத்த வழி கிடைக்கும்.

**– சீத்தலைச் சாத்தன்**, திருப்பத்தூர்

**ம**த்தியில் தேர்தலுக்கு முன் ஜனாதிபதி ஆட்சியும், மாநிலங்களில் கவர்னர் ஆட்சியும் இருந்தால் மட்டும் தேர்தல் ஆணையம் சுதந்திர மாகச் செயல்பட முடியாது. காரணம், ஜனாதிபதி யும், கவர்னர்களும் தேர்தல் ஆணையத்தை நிர்ப் பந்திக்கத் தொடங்குவார்கள். தேர்தல் ஆணையம் சுதந்திரமாகச் செயல்பட வேண்டுமானால், வாக் காளர்கள் மத்தியில் விழிப்புணர்வு ஏற்பட்டு, தேர் தல் ஆணையம் தொடங்கி, அமலாக்கப் பிரிவு, வருமான வரித்துறை, சி.பி.ஐ. ஏன் உச்சநீதி மன்றம் ஆகியவற்றைச் சுதந்திரமாகச் செயல்பட வைப்போம் என்ற உறுதி மொழியை அளிக்கும் வேட்பாளர்களுக்கு வாக்களிக்க வேண்டும்.

**– அ. சம்பத்**, திருவரங்கம்

**நி**யாயமான தேர்தலை நடத்த மாநிலமாயின் கவர்னரிடமும், மத்திய அரசாயின் குடியரசுத் தலைவரிடமும் தேர்தல் நடந்து முடியும்வரை ஆட்சி அதிகாரம் இருக்க வேண்டும். ஏனெனில்,

அமைச்சர் என்ற அதிகாரத்தில் மக்களும், அதி காரிகளும், காவல் துறையினரும் அவர்களுக் குரிய அச்சத்துடன்தான் இருப்பர். பதவி இல்லை யானால் பொதுவானவராகி விடுவார். எனவே, தேர்தல் எனக் குறித்துவிட்டதும், ஆட்சியைக் கலைப்பதுதான் எல்லோர்க்கும் பொதுவான நீதியாக இருக்கும்.

– **தெ. முருகசாமி**, புதுச்சேரி

**நி**யாயமாகத் தேர்தலை நடத்த, தேர்தல் ஆணையமே விளம்பரம் செய் தல், துண்டுப் பிரசுரம் அச்சடித்து விநி யோகித்தல், குறிப்பிட்ட தொகையைப் போட்டியிடும் கட்சியிடமிருந்து பெற் றுத் தனியான முகவர்கள் மூலம் செயல்படுத்த லாம். முக்கிய இடங்களில் பொதுமேடை அமைத்து, தேதி வாரியாக, கட்சி வாரியாகப் பிரச்சாரம் செய்ய அனுமதிக்கலாம்.

பொதுக்கூட்டங்களுடன் அனைத்துத் தொலைக்காட்சிச் சேனல்களிலும், கட்சி வாரி யாக, நேர ஒதுக்கீடு செய்து பேச அனுமதிக்க லாம். வாகனப் பேரணி, ஒலிபெருக்கி முதலிய வற்றை முற்றிலும் தடை செய்தே ஆக வேண்டும். இவை போன்றவற்றிற்கு நேர்மையாகப் பணி யாற்றிப் பணி நிறைவு பெற்ற அரசு அலுவலர்கள், குற்றச்சாட்டும் குறைபாடும் அற்ற மூத்த அரசியல் வாதிகள் முதலானோர் அடங்கிய குழு அமைத்து, வழிமுறை கண்டு நடைமுறைப் படுத்தலாம்.

– **த. நாகராஜன்**, சிவகாசி.

**தே**ர்தல்கள் அறிவிக்கப்பட்டவுடனே அவரவர் திறமை, நேர்மை, செயற்பாடு குறித்துத் தனியே பராமரிக்கப்படும் கோப்புகளின் அடிப்படையில் தேர்தலின்போது நேர்மையுடனும், நெஞ்சுரத் துடனும் பணியாற்றக்கூடியவர்கள் பட்டியலை மாநிலத் தலைமைத் தேர்தல் அதிகாரியின் துணையுடன் பரிசீலித்து, நடுநிலைமையுடன் செய லாற்றக் கூடியவர்களை மாவட்ட ஆட்சியராக நியமனம் செய்வது என்பது தேர்தல் ஆணையம் உடனடியாகச் செய்யக்கூடிய பணி. இதைச் சரி யாக அமுல்படுத்தினாலே தேர்தல்களை எவ்விதச் சுணக்கமுமின்றி நடத்தி முடிக்கலாம்.

– **மு. சண்முகம்**, தருமபுரி

**தே**ர்தல் நெருங்கும் சமயத்தில் தேர்தல் ஆணையம் நினைத்தால் மத்திய மாநிலங்களில் ஆட்சியினை இல்லாமல் செய்ய முடியும். இப்படி ஆட்சி இல்லாமல் செய்வதால் மட்டும் நியாயமான தேர்தல் நடக்கும் என்பதற்கு உத்திரவாதம் இல்லை. அதனால், இந்தத் தீர்ப்பைத் தேர்தல் ஆணையம் மக்களிடமே விட்டு அமைதி காக் கிறது. மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு என்பதால், தேர்தல் ஆணையம் காக்கும் அமைதி சிறந்ததே. இதனால், மக்கள் விரும்பும் கட்சிக்கு ஓட்டளித்து வெற்றிபெறச் செய்ய முடியும். எப்படி இருந்தாலும் மக்களிடம் மட்டுமே தீர்ப்பு இருப்பதால், தேர்தல் ஆணையம் செய்வது சரியே!

– **உஷா முத்துராமன்**, மதுரை

**தே**ர்தல் ஆணையத்திற்கு அளிக்கப்பட்ட அதிகாரம், தேர்தல் முடியும் வரையில்தான். பிறகு ஆளும் கட்சியின் அதிகாரம் தேர்தல் ஆணைய அதி காரிகளின் மேல் பாயலாம். ஆதலால் எதிர் எதிரான கட்சிகள், அதாவது ஆளும்கட்சிக் கூட்டணி, எதிர்க்கட்சிக் கூட்டணி இரண்டும் சம வாய்ப்புகளுடன் இயங்க வேண்டுமானால், தேர் தலுக்கு முன் மத்திய ஆட்சி, மாநிலங்களின் ஆட்சிகள் அனைத்தும் தேர்தல் நடைபெறும் நாட் களுக்கு முன்பாகவே ராஜினாமா செய்யப்பட வேண்டும். நியாயம் வழங்கும் தராசுத் தட்டுகள் சமமாக இருக்கும். இந்த அதிகாரத்தைத் தேர் தலுக்குப் பின் உடனடியாகச் சட்ட மாக்கப்பட வேண்டும். 2021, 2024–களில் நடைபெற விருக்கும் தேர்தல்களில் இது கடைப்பிடிக்கப்பட வேண்டும்.

– **முனைவர் டாக்டர் ஜே.ஜி. சண்முகநாதன்**, கோவை.

**அ**ரசியல் சாசனத்தால் உருவாக்கப்பட்ட தேர்தல் ஆணையம், வானளாவிய அதிகாரம் பெற்றதாக வெளித் தோற்றத்தில் காணப்பட்டா லும், எந்தவொரு அதிகாரமும் இல்லாததாகத் தான் நடைமுறையில் உள்ளது. காரணம், சட்டம் ஒழுங்கையோ, ஏனைய பாதுகாப்பையோ பராமரிக் கும் காவல் துறை, ஆளும் ஆட்சியின் அதிகாரத் திற்கு உட்பட்டதாக இருக்கும்போது தேர்தல் ஆணையத்தால் என்ன செய்ய முடியும்?

தேர்தல் ஆணையம் நேர்மையாகவும், நியாய மாகவும் செயல்பட வேண்டுமென்றால், நாடாளு மன்றத்திற்கோ, சட்டமன்றத்திற்கோ தேர்தல் அறிவித்த பின்பு ஆளும் அரசுகள் கலைக்கப்பட வேண்டும். காபந்து அரசாகக்கூடச் செயல்படக் கூடாது. குடியரசுத் தலைவரிடமும் ஒப்படைக்கக்

கூடாது. ஏனெனில், அவரை ஆளும்கட்சிதான் தேர்ந்தெடுக்கிறது. தலைமைத் தேர்தல் ஆணையரே ஆட்சியின் அதிகாரத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். தேர்தல் நடத்தை விதிகள் அமலுக்கு வரும் போதே ஆட்சி அதிகாரமும் ஆணையத்தின்கீழ் வரவேண்டும். அப்பொழுதுதான் முழு ஜனநாயகம் திகழும்.

**– புலவர் கருமலைத் தமிழாழன்**, ஒசூர்

**தே**ர்தல் சமயத்தில் மத்தியிலும், மாநிலங்களிலும் ஆட்சி இல்லாத சூழ்நிலையை உருவாக்கினால்தான் தேர்தல் ஆணையம் நியாயமான தேர்தலை நடத்த முடியும் என்ற கருத்து நூற்றுக்கு நூறு சரியானதும், வரவேற்கத்தக்கதும் ஆகும். ஆகவே, அதற்கான நடவடிக்கையைத் தேர்தல் ஆணையம் எடுக்க வேண்டியது மிகவும் இன்றியமையாததும், காலத்தின் கட்டாயமுமாகும். தேர்தலின்போது நடைபெறும் பலவிதமான முறைகேடுகளை ஒடுக்குவதற்கு இதுதான் தீர்வாக அமையும்.

**– உ.மு.ந. ராசன் கலாமணி,**
கோபிசெட்டிபாளையம்

**நி**யாயமான தேர்தல் நடத்தப்படவும், நாட்டில் உண்மையான ஜனநாயகம், மக்களாட்சி நடைபெறுவதற்கு அரசியல் சட்டத்தில் சில மாற்றங்களைச் செய்தே தீரவேண்டும். மத்திய ஆட்சி, மாநில ஆட்சி அனைத்தையும் ராஜிநாமாச் செய்ய ஆணையிட வேண்டும். எதிர்க்கட்சிகளைப் போலவே சமமாக இருத்தல் வேண்டும். தேர்தல் நடப்பதற்கு ஒரு மாதத்திற்கு முன்பே ஆட்சிகள் இல்லாத நிலையை ஆணையம் வருங்காலத்தில் நடைமுறைப்படுத்துவதே சிறந்த வழி எனலாம்.

**– லிங்கம் சின்னசாமி**, தாராபுரம்

**நி**யாயமானத் தேர்தல் நடக்க வேண்டுமானால், தேர்தல் அறிவிப்பு வெளியான நாளிலிருந்து தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்படும் வரை மாநிலங்களுக்கான சட்டசபைத் தேர்தல் எனில் ஆளுநர் ஆட்சியும், பாராளுமன்றத் தேர்தல் எனில் குடியரசுத் தலைவர் ஆட்சியும் அமலில் இருக்க வேண்டும். ஆட்சி, கட்சிகளின் வசமிருப்பின் அதிகாரத்தை முறைகேட்டிற்குப் பயன்படுத்த வாய்ப்புகள் அதிகம்.

**– மேலை. தமிழ்க்குமரன்**, மேலைச்சிவபுரி.

# ஓம் சக்தி

ஆருயிர்களுக்கு எல்லாம் – நான்
அன்புசெயல் வேண்டும்.
– வள்ளலார்

மலர் : 37 ஜூன் 2019 இதழ் : 5

நிறுவனர் : **நா. மகாலிங்கம்**

ஆசிரியர் & வெளியிடுபவர்: **ம. மாணிக்கம்**

*Editor & Publisher* : **M. MANICKAM**

அச்சிடுபவர் : **த. ராஜ்குமார்**

*Printer* : **T. RAJKUMAR,**

**Rukmani Offset Press**

ருக்மணி ஆப்செட் பிரஸ்,
E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
கோவை – 641 021.

இணையாசிரியர் : **பெ. சிதம்பரநாதன்**

கதை, கவிதைகளில் வரும் பெயர்களும்,
சம்பவங்களும் கற்பனையே.

படைப்புகளைச் சுருக்கவோ, திருத்தி அமைக்கவோ
ஆசிரியருக்கு உரிமை உண்டு.

'ஓம் சக்தி'யில் பிரசுரமாகும் படைப்புகளின் கருத்துகள்
அவற்றின் எழுத்தாளர்களுக்கு உரியவையே தவிர,
பத்திரிகை அவற்றிற்குப் பொறுப்பேற்காது.

**தனிப் பிரதி ரூ.15/–**
**ஆண்டு சந்தா ரூ. 265/–**
**(தீபாவளி மலர் உட்பட)**
**ஆயுள் சந்தா ரூ. 2000/–**
(10 ஆண்டுகள்)

சந்தா தொகையை "SAKTHI SUGARS LTD. A/c OMSAKTHI" என்ற பெயரில் D.D.–யாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், ஓம் சக்தி**
**69–ஏ, ஆரோக்கியசாமி சாலை (மேற்கு),**
**ஆர்.எஸ்.புரம், கோவை – 641 002**
**போன் : 0422–4322471, 0422–4322423**

வெளியிட்டோர் : **சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**

E-mail : omsakthieditorial@gmail.com






## நூல் விமர்சனம்

### சுருக்கமான தென் இந்திய வரலாறு

**தொகுப்பாளர்** : நொபோரு கராஷிமா, தமிழில் : ப. சண்முகம், வெளியீடு : அருட்செல்வர் நா. மகாலிங்கம் மொழிபெயர்ப்பு மையம், NPTC - MCET வளாகம், உடுமலை ரோடு, பொள்ளாச்சி – 642 003, பக். : 480, விலை ரூ. 700/–, செல் : 99761 44451.

**ஜ**ப்பானிய வரலாற்று ஆய்வாளர் நொபோரு கராஷிமா தென்னிந்திய வரலாற்றாய்வில் அதிக ஈடுபாடு கொண்டவர். இந்தியக் கல்வெட்டுகளில் அதிகக் கல்வெட்டுகளின் இருப்பிடமாகத் தென்னிந்திய மொழிக் கல்வெட்டுகள் இருப்பதை உணர்ந்து, அவற்றை ஆய்ந்து, தொல் பழங்காலத்தி லிருந்து கட்டமைத்துச் செழுமைப்படுத்திய வரலாற் றைத் தர வேண்டும் என்பது கராஷிமாவின் விருப்பம். அதற்குத் துணையாக ஒய். சுப்பராயலு, முனைவர் ப. சண்முகம் ஆகிய வரலாற்றறிஞர்களைத் துணைக் கொண்டு இவ்வரலாற்று நூலைப் படைத்துத் தந்திருக்கிறார். இந்நூலில், திராவிடர்கள் யார், சிந்து வெளி நாகரிகம், தென்னிந்திய வரலாற்றுத் தொடக் கம், சாளுக்கியர், பல்லவர், சேர, சோழ, பாண்டிய ஆட்சிகள், விஜயநகர அரசு உருவாக்கம், மராட்டிய, முகலாய, பிரிட்டிஷ் அரசுகளின் தாக்கம் எனப் பல கோணங்களில் வரலாற்று நிகழ்வுகள் கல்வெட்டுகள் மற்றும் படங்களுடன் விரிவாக ஆராயப்பட்டுள்ளன. இவற்றை எளிய தமிழில் வழங்கியிருக்கிறார் முனை வர் ப. சண்முகம். வர லாற்றாய்வாளர்களுக்கு மிகச் சிறந்த வழிகாட்டி நூல்.

### நரஹரி

ஆசிரியர் : ரிஷபன், வெளியீடு : ஸ்ரீராம் பப்ளி கேஷன்ஸ், ஏ–9, திருமங்கை பிளாட்ஸ், 61, மேற்கு அடையவளைந்தான் வீதி, ஸ்ரீரங்கம், திருச்சி – 620 006, பக். 64, விலை ரூ. 50/–. செல் : 9442502781.

**பு**துக்கவிதையில் ஸ்ரீநரசிம்ம அவதாரப் பெரு மைகளைக் கூறும் நூல் நரஹரி. நரசிம்மரிடம் நேரில் உரையாடுவது போல உள்ள இருபத்தெட்டுக் கவிதை கள். ஒவ்வொரு கவிதைக்குமான நரசிம்ம மூர்த்தி யின் அவதாரச் சித்திரங்கள் மனத்தில் ஆழக் குடி கொள்ளுமாறு உள்ளன. "வார்த்தைக்கு எட்டா உன்னை வடிவமைக்க முயற்சித்தேன்", "ஆயுதம் ஏந்தாத அவதாரம் நீ", காணும் பொருளெல்லாம் உன் னையே காட்டுதே", "கல் திரைக்குள் கனிந்திருந்த கதாபாத்திரம் நீ", "விதிகளுக்குக் கட்டுப்பட்டே வினையாற்றுவாய்" என்றெல்லாம் உள்ளம் உருகிச் சுவைமிகு வரிகளால் ஸ்ரீநரசிம்ம மூர்த்திக்குத் தமிழ்ப் பாமாலை சூட்டியிருக்கிறார் நூலாசிரியர் ரிஷபன். பக்தி ரசம் சொட்டும் நூல்.

– **எம்.எஸ்.**

# வாசகர் கடிதங்கள்

**2019** மே மாத ‘ஓம் சக்தி’ இதழின் அட்டைப் படம் அருமை. “கையில் ஒரு வீணை, கண்முன் இன்னொரு வீணை” என்னும் விளக்கம் சரியே! காட்சிப்படுத்திய ஓவியர் ஸ்யாமுக்குப் பாராட் டுக்கள்!

– **உஷா முத்துராமன்**, திருநகர்.

**மே** மாத ‘ஓம் சக்தி’ இதழில் ‘அரசியல்வாதி கள் ஓய்வு பெறுவதற்கு வயது?’ என்று சுரங்கம் பகுதியில் வெளியாகியிருந்த அருட்செல்வரின் கட்டுரை, கருத்துப் புதையல். அரசியல்வாதிகள் சிந்திக்க வேண்டும்.

– **ஏ. பாஸ்கர்**, சேலம்.

**ம**னத்தை நெகிழ வைத்தது ‘செவித்திறனற் றோரைப் பேச வைக்கும் சாதனைப் பள்ளி’ பற்றிய கட்டுரை. அரிய சேவை வணக்கத்திற்கும், வாழ்த்துதலுக்கும் உரியது.

– **என்.ஜே. கந்தமாறன்**, சென்னை.

“**தி**ராவிட நாகரிகம் மானுட வளர்ச்சியின் ஒரு மைல்கல்” என்றே ரோமிலா தாப்பர் கண்டார் என்ற புரிதல் ஏற்புடையதே. இதற்கு வழிகோலிய முனைவர் ர. பூங்குன்றனுக்கு நன்றி உரித்தாகுக!

– **எஸ். ஜி. இசட்கான்**, திருப்பூர்.

**ப**ழகிப் பார்த்ததில் இவர்கள்... தொடரில் சிலம்பொலி சு. செல்லப்பனின் திறமை, ஆற்றல், வாக்கு வன்மை, எளிமை இவற்றை மரபின் மைந் தன் தன் அனுபவத்தோடு பகிர்ந்து கொண்டது ‘வாவ்’ என்று எங்களை ஆச்சரியப்படுத்தியது.

– **ஆர்.கே. லிங்கேசன்**, மேலகிருஷ்ணன்புதூர்.

**மே** மாத ஓம் சக்தி இதழில் வெளியாகி யிருந்த ஐ. கிருத்திகாவின் ‘மதம் துறந்த மனம்’ மற்றும் ஆட்டனத்தியின் ‘கிருஷ்ணவேணி அக்கா...’ ஆகிய இரண்டு சிறுகதைகளும் நன் றாக இருந்தன. விவாதப் பகுதியும் சுவாரசியமாக இருந்தது.

– **இரா. கதைப்பித்தன்**, இராஜபாளையம்.

**பெ**ண்ணின் பெருமையை ஆண்கள் உணர்ந்து மதித்து நடந்து கொள்ள வேண்டும் என்பதனைக் கவிதை மூலம் அருமையாக வலி யுறுத்தியிருக்கிறார் சுப. திருஞானம்.

– **த. நாகராஜன்**, சிவகாசி.

**பே**ரா. இரா. மதிவாணன் எழுதியிருந்த “இன்றைய தமிழில் எதிர்பாராத பிழைகள்” கட்டுரை அருமை. இனியாவது பிழையின்றித் தமிழ் எழுதுவோம்!

– **அ. முரளிதரன்**, மதுரை.

‘**கை**யில் ஒரு வீணை, கண்முன் இன்னொரு வீணை’ என்ற அட்டைப் படத்திற்கான விளக்க மும், அதற்கான அட்டைப்படமும் மே மாத ‘ஓம் சக்தி’க்கு இரட்டிப்புச் சுவையைத் தந்தன.

– **இரா. வளையாபதி**, தோட்டக்குறிச்சி.

**வ**ள்ளலாரைப் பற்றியும், ம.பொ.சி. பற்றியும் தமிழறிஞர் பெ.சு. மணி எழுதியிருந்த கட்டுரை நல்ல கருத்துச் செறிவுள்ளதாக அமைந்திருந்தது.

– **தி.ஈ.தி. ஈசுவர்மூர்த்தி**, ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**ம**றைந்த திரைப்பட இயக்குநர் மகேந்திரன் அவர்களோடு ஒரு காலத்தில் அணுக்கமாக இருந் தவன். அவர் ‘இனி இல்லையே’ என்ற கட்டு ரையை ‘ஓம் சக்தி’யில் படித்தபோது கண்ணில் நீர் வரச் செய்தது.

– **சுப்ரமண்ய வெங்கடாசலம்**, புதுக்கோட்டை.

“**செ**வித்திறனற்றோரைப் பேச வைக்கும் சாதனைப்பள்ளி” – இது போன்ற ஒரு நிகழ்வை வெளியிட்ட ‘ஓம் சக்தி’ இதழைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

– **ஆ. ர. அருணகிரி**, ஆலாம்பாளையம்.

**தே**சபக்தனின் இந்தியா – பாக் யுத்தங்கள் மற்றும் அவற்றின் ஜனநாயகம் குறித்துப் படித்த போது, உள்ளங்கைப் புண்ணுக்குக் கண்ணாடி தேவையா? என்றிருந்தது. பாகிஸ்தானில் என் றுமே சர்வாதிகாரம் என்பது ஊரறிந்த உண்மை.

– **கதிர் தியாகு**, விருத்தாசலம்.

“**இ**ன்றைய தமிழில் எதிர்பாராத பிழைகள்” என்ற கட்டுரை வாசகர்களுக்கும், செய்தி ஊடகங் களுக்கும் வழிகாட்டுவதாக இருந்தது.

– **இரா. கல்யாணசுந்தரம்**, மதுரை.

# தேச வளர்ச்சிக்கான ஒரு தியானம்




திரு. நரேந்திர மோடி அவர்கள், குஜராத்தில் 12 ஆண்டுக்காலம் முதல்வராக இருந்தவர். அப்போதே பிரதமர் பதவிக்கு 2014–இல் கட்சியால் தேர்ந்தெடுக்கப்பட்டுப் போட்டியிட்டார். காங்கிரஸ் கட்சிக்குக் கடுமையாக எதிர்வினையாற்றினார்.

காங்கிரஸ் கட்சியில் 44 எம்.பி.க்கள் மட்டுமே வெற்றி பெற்றார்கள். ஆனால், மோடியின் பா.ஜ.க.விற்கு 284 எம்.பி.க்கள் வெற்றி பெற்றனர்.

சென்ற ஐந்தாண்டுக் காலமாகப் பிரதமர் மோடி செய்த சாதனைகளில் குறிப்பிடத்தக்கவை 8 கோடி ஏழை, எளியவர்களுக்கு இலவச சமையல் எரிவாயு வழங்கினார். 35 கோடி ஏழைகளுக்கு வங்கிக் கணக்குத் தொடங்கினார்.

'முத்ரா' கடன் 12 கோடிப்பேருக்கு ரூ. 6 லட்சம் கோடி வழங்கினார். 50 கோடி மக்களுக்கு அதாவது, 10 கோடி குடும்பங்களுக்கு ரூ. 5 லட்சம் வீதம் இலவச மருத்துவ வசதி செய்து தந்தார். அனைத்துக் கிராமங்களும் மின்வசதி பெற்றன.

ஒற்றைக் குடும்ப ஆட்சிக்கு எதிராகக் கடுமையாக விமர்சனம் செய்தார். ஊழலே இல்லாத அமைச்சரவையை உருவாக்கினார். பண மதிப்பு இழப்புக்கு இவர் எடுத்த நடவடிக்கை, ஆரம்பத்தில் விமர்சிக்கப்பட்டது. ஆனால், சென்ற வருடம் வரவேற்கப்பட்டது.

சரக்கு மற்றும் சேவை வரி விதிப்பில் மக்களின் எதிர்பார்ப்பிற்கு ஏற்றாற்போல, பல முறை அந்த வரிவிகிதங்களை மாற்றியமைத்தார். கருப்புப் பணத்தை ஒழிக்க முடியவில்லை என்றாலும், பாகிஸ்தானிலிருந்து வந்த கள்ளப் பணத்தை முழுவதுமாக ஒழித்தார்.

மேக் இன் இந்தியா, டிஜிட்டல் இந்தியா, ஸ்டார்ட் அப் இந்தியா, தூய்மை இந்தியா எனப் புதிய புதிய அணுகுமுறைகளை அறிமுகப்படுத்தினார்.

பாகிஸ்தான் தூண்டுதலால் புல்வாமா பகுதியில் வாகனங்களில் வந்த இந்திய ராணுவத்தார் 40 பேரை வெடி வைத்துக் கொன்றதற்கு எதிராக, இந்திய ராணுவம் பாகிஸ்தானுக்குள் பிரவேசித்து 300 தீவிரவாதிகளை அழித்தது.

இப்படி, சென்ற 5 ஆண்டுகளில் மோடிஜி செய்த சாதனைகள் போதாது. ஆனாலும் போற்றுதலுக்குரியவை. நலிந்த மக்களுக்கு நம்பிக்கை ஊட்டிய அளவுக்கு வசதியானவர்களுக்கு நடுக்கத்தையும் உண்டாக்கியுள்ளார்.

புதிய பிரதமரை வரவேற்கிறோம், வாழ்த்துகிறோம்.

– இ.ஆர்.

எழுத்தாளர் தோப்பில் முகம்மது மீரான், 'ஓம் சக்தி' பத்திரிகையோடு 25 ஆண்டுக் காலம் தொடர்பில் இருந்தவர். தீபாவளி மலர்களில் தவறாமல் அவருடைய கதைகள் இடம் பெற்றன. சென்ற வருட தீபா வளி மலரில்தான் அவருடைய படைப்பு இடம்பெற முடியாமல் போய் விட்டது. காரணம், அவருடைய உடல்நலக் குறைவு.



அவருடைய நாவலுக்கு 'சாகித்ய அகாடமி' விருது கிடைத்தது. அது கொண் டாடுவதற்குரிய அவருக்கான அங்கீகாரமாகும்.

தோப்பில் அவர்களோடு எனக்கு ஒரு சிறு மனத்தாங்கல் உண்டு. கவிஞர் ஹெச்.ஜி. ரசூல் அவர் கள் 'மைலாஞ்சி' என்ற கவிதைத் தொகுப்பை

# எழுத்தாளர் தோப்பில் முகம்மது மீரானுக்குக் கண்ணீர் அஞ்சலி!

'ஓம் சக்தி'யை உரக்கப் பாராட்டும் படைப் பாளி. அதற்கான காரணம், மனித பலகீனங்களை வியாபாரமாக்கும் பத்திரிகைகளோடு சேராமல், இலக்கியத் தரத்தோடு 'ஓம் சக்தி' திகழ்வதுதான் என்பார்.

'ஓம் சக்தி'யில் அவருடைய ஒவ்வொரு கதையும் மனித நேயத்தையும், மனித நல்லிணக் கத்தையும் நோக்கிய படைப்புகள் என்றால், அது மிகையல்ல.

தொடக்க காலத்தில் வற்றல் வியாபாரியாக வாழ்க்கை நடத்தியவர் தோப்பில். 75 ஆண்டுகள் வாழ்ந்து மறைந்துள்ளார். இன்னும் 10 ஆண்டு களாவது வாழ்ந்திருந்தால் அது அவருக்குப் பலன் என்பதைவிட, தமிழுக்குப் பலனாக அமைந் திருக்கும்.

படைப்பிலக்கியம் என்பது வாசகனை வசப் படுத்துவது மட்டுமல்ல, வாழ்க்கையை நிஜப்படுத் துவதும், அதை நோக்கி அவனை நகர வைக்கத் தூண்டுவதும், சக மனிதர்களைச் சமமாக நேசிப் பதும்தான். அதில் எழுத்தாளர் தோப்பில் முகம்மது மீரான் இம்மியளவும் தடம் புரளவில்லை.

22 ஆண்டுகளுக்கு முன்பு அவருடைய 53–ஆவது வயதில் 'சாய்வு நாற்காலி' என்ற வெளியிட்டவர். அதில் நபிகள் நாயகத்தின் மகள் ஆயிஷா, நபிகளிடம் ஒரு கேள்வி கேட்கிறாள். "எல்லா தீர்க்கதரிசிகளும் ஆண்களாக இருந் திருக்கிறார்கள். ஒரு பெண் தீர்க்கதரிசிகூட இல்லையா அத்தா?" என்பது தான் ஆயிஷாவின் கேள்வி.

இது இஸ்லாம் மதப் பற்றாளர்களுக்கு மத்தி யில் கடும் விமர்சனத்திற்கு உள்ளானது. இதன் பிறகு ரசூல் எழுதிய சில கட்டுரைகளால் அவர் மதப் பிரஷ்டம் (மத விலக்கு) செய்யப்பட்டார். அப் போது 'ஓம் சக்தி'யில் அவர் தரப்பு நியாயங்களை எடுத்துச் சொல்லி, கவிஞர் ரசூலுக்காக எழுத் தாளர் பொன்னீலனோடு சேர்ந்து நானும் போராடி னேன். ரசூலுக்கு ஆதரவு திரட்டும் வகையில் தோப்பிலோடு தொடர்பு கொண்டேன்.

ஆனால், தோப்பில் ரசூலுக்கு ஆதரவாக இல்லை. வெளிப்படையாக மதத்தை அவர் விமர் சிப்பதைத் தோப்பில் விரும்பவில்லை. இதுதான் எனக்கு ஏற்பட்ட மனத்தாங்கல். ஆனாலும், எல் லாச் சமயத்தாரையும் சமமாக நேசித்தவர் தோப் பில் என்பதற்கு அவருடைய படைப்புகளே சான்று.

அவருடைய ஆன்ம சாந்திக்கு 'ஓம் சக்தி' பிரார்த்தனை செய்கிறது.

– இ.ஆர்.

**சென்னைக் கம்பன் கழகம் – அ.ச.ஞா. விருது**

*2018–இல் வெளியான கம்பன் பற்றிய கம்பராமாயண ஆய்வு நூல்கள் வரவேற்கப்படுகின்றன. பரிசுத் தொகை ரூ. 5000/–*

***3 படிகள் – 30.06.2019–க்குள் அனுப்புக...***

முகவரி : **செயலாளர், சென்னைக் கம்பன் கழகம்,**
52/3, சௌந்தர்யா குடியிருப்பு, அண்ணா நகர் (மே) விரிவு, சென்னை – 600 101

கட்டுரை

*இலக்கியத்தைக் 'காலக்கண்ணாடி' என்பார்கள். இக்கண்ணாடி, ரசம் பூசப்பட்டு எதிரே உள்ளவற்றைப் பிரதிபலிக்கும் கண்ணாடி. இன்னொரு கண்ணாடி, உள்ளே இருப்பதை அப்படியே வெளிக்காட்டுகிற ரசம் பூசப்படாத கண்ணாடி. இலக்கியம் காலத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடி. சங்க காலம் என்பது உயர்ந்த நாகரிகமுள்ள சமுதாயம் என்பதைக் காட்டுகிற இலக்கிய வரிகளை முனைவர் பொ.மா. பழனிசாமி அவர்கள் பறித்துக் கொடுத்த பலாக்கனிகளாக வாசகர்கள் சுவைக்கலாம்.*

– இ.ஆர்.

# சங்க இலக்கியத்தில் மானுட மதிப்புகள்



தமிழர்களின் வாழ்வு முறை, போர்த்திறன், அரசர்களின் வீரம், அகவாழ்க்கை, புறவாழ்க்கை, புலவர்களின் புலமைத்திறம் முதலியவற்றை மிக விரிவாகப் பேசுபவை சங்க இலக்கியங்களாகும். தமிழர்கள் அகம், புறம் என வாழ்க்கையை இரு கூறாகப் பகுத்துக்கொண்டு நல்ல குடும்பச் சூழலையும், அரசியல் அமைப்பையும் கொண்டு வாழ்க்கையில் உயர்ந்திருந்தனர்.

ஆனால், இன்றைய சூழலில் நவீனமயமாதல், நகரமயமாதல், தொழில் மயமாதல், மேற்கத்திய மயமாதல் முதலிய காரணங்களால், நாம் காலங் காலமாகப் பின்பற்றி வந்த நல்ல மானுட மதிப்பு களில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இம்மாற்றம் பொருளாதார வளர்ச்சியைக் கொடுத்தாலும், தனி மனித சமூக வாழ்வியில் மதிப்புகளைச் சிதைத்து விட்டது எனலாம்.

அவ்வாறு இழந்த நமது பாரம் பரியமிக்க பண்பாட்டையும், மதிப்பையும் மீட்டெடுக்க வேண்டிய நிலையில் இப்போது நாம் உள்ளோம்.



முனைவர் பொ.மா.பழனிசாமி

தலைவியும், தலைவனும் அன்பு கொள்வது, அன்பு கொண்டவரையே மணப்பது, சுற்றம் ஒத்துக்கொள்ளாத போது உடன்போக்கு மேற் கொள்வது, அகவாழ்க்கையாகத் தொடங்கிய பின்பு பொருளாதார அளவில் ஏற்றம் வந்தாலும், தாழ்வு வந்தாலும் அன்பினை விட்டுவிடாது ஏற்று வாழ்கின்ற அன்பு நிறை வாழ்வே அகநிலையில் மதிப்புமிக்க வாழ்வாகக் கருதப்பட்டது.

செவிலித்தாயும் நற்றாயும் தன் மகள் இனி தாக இல்லறம் நடத்துவதைக் கண்டு பெரு மைப்படும் நிகழ்வை, "தேன் மயங்கு பாலினும் இனிய அவர் நாட்டு / உவலைக் கூவல் கீழ் மான் உண்டு எஞ்சிய கலிழி நீரே" (ஐங். 203) என்ற பாடல் விளக்கக் காணலாம்.

தலைவி, தலைவனுடன் இணைந்து தனிக் குடித்தனம் கொண்டு வாழ்கிறாள். அங்கு பொரு ளாதாரப் பற்றாக்குறை உண்டு. ஏனெனில், தலைவியின் பிறந்த வீடு செல்வச்செழிப்பானது. தலைவி தேனும், பாலும் தந்து வளர்க்கப் பெற்ற வள். ஆனால், தலைவனின் வீட்டில் தண்ணீரை மட்டும் உணவாகக் கொண்டு பிறந்த வீட்டில் ஏதும் பெறாமல் வறுமையிலும் செம்மையாக வாழ்ந்து காட்டுகிறாள் தலைவி. எனவே, இல்லற மதிப்பு இங்கு உயர்ந்து நிற்கக் காணலாம்.

கலித்தொகையில் ஒரு தலைவன், **"ஒன்றன் கூறாடை உடுப்பாரே ஆயினும் / ஒன்றினார் வாழ்க் கையே வாழ்க்கை"** (கலித். 18) என மனம் ஒன்றி வாழும் வாழ்க்கையைப் பெரிதென மதித்து வாழ் கிறான். அணிந்து கொள்வதற்கு ஒரே ஆடை இருக்க, அதனை ஒரு பகுதியைத் தலைவனும், மற்றொரு பகுதியைத் தலைவியும் அணிந்து கொள்ளும் வறுமைச் சூழல் வந்தபோதும் மனம் கலந்த வாழ்க்கையே இனிமையானது என்ற ஒத் திசைவு மதிப்பு இங்கு உயர்ந்து நிற்கிறது.

தலைவியை அரவணைத்து அன்பை நல்கும் தலைவனுக்குத் தோழி இயற்கையுடன் கூடிய மானுட மதிப்பை இவ்வாறு வெளிப்படுத்து கின்றாள். "நாங்கள் எங்கள் தோழியரோடு சென்று ஒரு நாள் புன்னை விதையை வெள்ளிய மணலுடன் அழுத்தி விளையாடிய பின் அதனை மறந்து போனோம். பின்பு அவ்விதை வேரூன்றி முளைத்து நின்றது.

அதனைக் கண்டு மகிழ்ந்த நாங்கள், நெய்யோடு கலந்த இனிய பாலை நீராக ஊற்றி இனிதாக வளர்த்தோம். வளர்த்த அச்செயல் கண்டு அன்னை எங்களை நோக்கி, 'நீங்கள் வளர்க்கும் இப்புன்னை மரம் உங்களைவிடச் சிறந்ததாகும். அது உங்களோடு பிறந்த சகோதரி யாகும் தகுதியுடையது காண்டீர்' என அப்புன்னை யின் பெருமை கூறினாள்.

எனவே, சகோதரியாகும் அப்புன்னையின் அருகில் தலைவனாகிய உன்னோடு நகைத்து விளையாடி மகிழத் தலைவி நாணுகின்றாள். நீ தலைவியை அரவணைத்து நல்குவையாயின் இவ ளுடன் உரையாடுவதற்கு அமைந்த இம்மரத்தின் நிழல் போன்று பிற மரங்களும் இங்குள்ளன காண்பாயாக" எனத் தோழி தலைவனுக்குக் கூறு கின்றாள். இதனை,

**"விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி / மறந்தனம் துறந்த காழ்முனை அகைய / நெய்பெய் தீம்பால் பெய்து இனிது வளர்த்தது / நும்மினும் சிறந்தது நுவ்வை ஆகும் என்று அன்னை கூறினள் / புன்னையது நலனே, அம்ம நாணுதும், நும்மொடு நகையே / ... ... ... ... துறை கெழு கொண்க ! நீ நல்கின் இறைபடு நீழல் பிறவுமார் உளவே !"** (நற். 172) என இயற்கையை யும் மதிக்கும் மதிப்பினைச் சங்க மக்கள் கொண் டிருந்தனர் எனலாம்.

'குரங்கு தேனை அறியாமல் உண்டு, தன் தொழிலாகிய மரம் ஏறும் தொழிலை மறந்து அருகில் இருந்த சந்தன மரத்தின் நிழலின் மணற் பரப்பில் உறங்கியதைப் போன்று தலைவா, நீயும் களவொழுக்கமாகிய தலைவியின் இன்பம் நுகர்ந்து உன் தொழிலாகிய அறம் செய்தலையும் மறந்து தலைவியையும் மணக்காமல் காலம் கடத்துவது நல்லதல்ல. எனவே, தலைவியின் துயரை வரைவினால் மாற்றுக' எனத் தோழி கூறுகின்றாள். இதனை,

**"பாறை நெடுஞ் சுனை, விளைந்த தேறல் / அறியாது உண்ட கடுவன் அயலது / கறி வளர் சாந்தம் ஏறல் செல்லாது / நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும் / குறியா இன்பம் எளிதின் நின்மலைப் / பல்வேறு விலங்கும், எய்தும் நாட ! / குறித்த இன்பம் நினக்கு எவன் அரிய?"** (அகம். 2) என்ற பாடல் வரி விளக்கி நிற்கின்றது. ஒவ்வொரு மனிதனும் சக மனிதனோடு அன்பு கலந்து வாழ்ந்தாக வேண்டிய கட்டாயச் சூழ்நிலை யில் உள்ளான். இப்பண்பினை மனிதன் எப் போதும் வளர்த்து வருவதுடன் உலகிற்குக் கொடையாகவும் கொடுத்துள்ளான். இதனை,

**"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின் / நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்"** (நற். 355) என்ற வரிகளால் அறியலாம். உண்மையான அன்பு எனும் மானுட மதிப்பு என்பது ஒவ்வொருவரின் ஆழ்மனதில் அமைந்து விளங்கும்போது பிறர் நமக்குச் செய்யும் தீங்கு நமக்குப் புலப்படாது.

நம் நண்பன் நம் எதிரிலேயே நமக்கு நஞ்சினை ஊற்றிக் கொடுக்கும்போது அவன் நெஞ்சம் கலங்கக்கூடாது என்று எண்ணி அந்நஞ்சையும் உண்பதே உண்மையான நாகரிகம் என்பர். இதே கருத்தைத்தான், **"பெயக்கண்டும் நஞ்சுண்ட மைவர் நயத்தக்க நாகரிகம் வேண்டு பவர்"** (திருக். 580) என்பார் வள்ளுவர்.

மனித வாழ்க்கை இன்பமும் துன்பமும் கலந்தது. இனிய வாழ்வுக்கும் பொருள் தேவை. பொருளீட்ட நெருங்கிய உறவையும் சிறிது காலம் பிரிய வேண்டி வரும். ஆயினும் அதற்கு மனம் இடம் கொடுக்காமல் அறிவுக்கும் நெஞ்சின் ஆசைக்கும் இடையேயான போராட்டமாக அமைவதும் உண்டு. இரு களிற்று யானைகள் வலிமையுடன் பற்றி ஈர்க்கும் தேய்ந்த புரிகளைக் கொண்ட பழைய கயிறுபோல் அழிந்து போக வேண்டியது தானோ என்பதை, **"தேய்புரி பழங் கயிறுபோல வீவது கொல் என வருந்திய உடம்பே"** (நற். 284) என்ற பாடலால் அறியலாம்.

ஏழைகளின் துன்பத்தைப் போக்கிக் கருணை கொண்டு கண்ணோட்ட முடையவராய் வாழ்வதே உண்மையான செல்வம் நிறைந்த வாழ்க்கை. எது செல்வம் என்பதனை நற்றிணை,

**"நெடிய மொழி தலுங் கடிய ஊர்தலும் / செல்வம் அன்று தன் செய்வினைப் பயனே / சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர் / புன்கண் அஞ்சும் பண்பின் / மென்கண் செல்வம் செல்வம் என்பதுவே"** (நற். 210) என்றவாறு விளக்குகின்றது.

தமிழ்நாட்டுப் பெண்கள் தங்கள் திருமணத்திற்குப் பிறகு புகுந்த வீட்டில் கணவன் மற்றும் தமது வீட்டாருக்கு இனிமையாகச் சமைத்துத் தானே பரிமாறுவர். தலைவி சமையல் செய்யும் முறையும் அவள் சமைத்த அவ்வுணவைக் கணவன் உண்ணும்போது பாராட்டுகிற தன்மையும் குறித்தமைந்த இல்லற நேயமிக்க பாடல்,

**"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல் / கழுவுறு கலிங்கம் கழாஅது டீஇ / குவளை உண்கண் குய்ப்புகை கமழத் / தாழ்துழந் திட்ட தீம்புளிப் பாகர் / இனிது எனக் கணவன் உண்டலின் / நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே"** (குறுந். 167) என்பதாகும். இல்லற மேன்மை நிறைந்த மனித நேயத்தை இப்பாடல் வழி அறியலாம்.

விருந்தோம்பலில் சிறந்து விளங்கிய தமிழகப் பெண்கள் தலைவன் இல்லத்தில் இல்லாதபோது விருந்தோம்பல் செய்வது இல்லை. கண்ணகி, கோவலன் தன்னைவிட்டுப் பிரிந்திருந்த காலத்தில் விருந்தினரை உபசரிக்க முடியவில்லையே என்று நினைத்து நினைத்து வருந்துகின்ற மனித நேய மதிப்பை, **"அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்/ துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்/ விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை"** (சிலம்பு. கொலை. 71 – 73) என்ற பாடல் வரிகள் வழி அறிய முடிகின்றது. 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்' என்ற வள்ளலாரின் வைர வரியை இவ்விடத்தில் எண்ணிப் பார்க்கலாம்.

பெண்களின் நற்பண்புகளில் ஒன்று விருந்தோம்பல் என்பதை, **"விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும் / பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்"** (தொல். 1102) என்ற தொல்காப்பிய நூற்பா விளக்கக் காணலாம். இதுவரை அகம் சார்ந்த மதிப்புகள் பேசப்பட்டன.

புகழ், வீரம், கொடை, மானம் முதலிய பண்புகள் குறித்த மதிப்புகள் புறம் சார்ந்தவை. பழந்தமிழர்கள் மேற்கண்ட மாட்சிமை மிக்க பண்புகளுடன் வாழ்ந்தனர்.

தமிழர்கள் பிற உயிர்களைக் குறிப்பாகச் சக மனிதர்களை மிகவும் நேசித்தனர். இதனை, **"உண்டா லம்ம இவ்வுலகம் இந்திரர் / அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத் / தமியர் உண்டலும் இலரே; முனிவிலர் / துஞ்சலும் இலர், பிறர் அஞ்சுவது அஞ்சி / புகழெனின் உயிரும் கொடுக்குவர், பழியெனின் / உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்"** (புறம். 182) என்ற பாடல் வழி உணர முடிகிறது.

நன்றி மறப்பது மனிதத் தன்மையல்ல. சக மனிதர்களின் உதவியின்றி ஒரு தனி மனிதன் மட்டும் வெற்றியடைய முடியாது. இதனை, **"ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும் / மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும் / குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும் / வழுவாய் மருங்கில் கழுவாயும் உளஎன / நிலம்புடை பெயர்வது ஆயினும் ஒருவன் / செய்தி கொன்றார்க்கு உய்தி இல்என / அறம் பாடிற்றே ஆயிழை கிழவ"** (புறம். 34) என்ற பாடல் உணர்த்துகின்றது. செய் நன்றி மறத்தல் என்பது மிகக் கொடுமையானது என்பது இதனால் புலப்படக் காணலாம்.

அக்காலக் கவிஞர்கள் தம் வறுமை நீங்க அரசர்களை நாடிச் சென்று பாடிப் பரிசுகள் பெற்று வருவர். அவ்வாறு பெற்ற பரிசுகளைத் தான் மட்டும் வைத்து உண்ணாது, சுயநலத்திற்காக வைத்துக் கொள்ளாது, தம்மைப் போன்று வறுமை யில் வாழும் எல்லோருக்கும் கொடுத்துப் பிறர் நலம் நாடும் மதிப்பு அதிகம் காணப்பட்டது. இதனை,

**"நின்நயந்து உறைநர்க்கும் நீநயந்து உறைநர்க்கும் / பன்மாண் கற்பின்நின் கிளைமுத லோர்க்கும் / கடும்பின் கடும்பசி தீர யாழநின் / நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும் / இன்னோர்க்கு என்னாது என்னோடும் சூழாது / வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும் / எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே"** (புறம். 163) என்ற பாடல் வழி அறியலாம்.

பெருஞ்சித்திரனார் என்ற ஏழைப் புலவர் தம் மனைவியிடம் கூறும் அறிவுரை, வெறும் அறிவுரை அல்ல. பிறரிடம் கொண்ட கருணையும், மனைவி யிடம் கொண்ட நம்பிக்கையும் இவ்விடத்தில் மானுட மதிப்புகளாகப் பரிணாமம் பெறுகின்றன.

நமக்கேற்படும் நன்மையும், தீமையும் பிறரால் மட்டும் வருவதல்ல. நமது செயலாலும்தான். நாம் மேலான வாழ்வு வாழ வேண்டும் எனில், அவரவர் சுய பரிசோதனை செய்துகொள்ள வேண்டும். கணியன் பூங்குன்றனார்,

**"யாதும் ஊரே, யாவரும் கேளிர் / தீதும் நன்றும் பிறர்தர வாரா / நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன / சாதலும் புதுவது அன்றே வாழ்தல் / இனிதென மகிழ்ந்தன்றும் இலமே, முனிவின் / இன்னா தென்றலும் இலமே ... ... ... ... / நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர் / முறைவழிப் படூஉம் புணைபோல் ஆருயிர் / பெரியோரை வியத்தலும் இலமே / சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே"** (புறம். 192) என்ற பாடல் வழி வாழ்வியல் மதிப்புகளை வெளிப் படுத்துகின்றார்.

சங்க கால மக்கள் இயற்கையோடு இயற்கை யாக வாழ்ந்தனர். அவர்கள் வாழும் இடம் அம்மக் களின் நற்பண்பால் உயர் மதிப்புப் பெறுகின்றது. இதனை, **"நாடா கொன்றோ காடா கொன்றோ / அவலா கொன்றோ மிசையா கொன்றோ / எவ்வழி நல்லவர் ஆடவர் / அவ்வழி நல்லை வாழிய நிலனே"** (புறம். 187) என்னும் பாடல் விளக்கி நிற்கக் காணலாம். சான்றாண்மை உடையவர் களைப் பின்பற்றி இவ்வுலகம் செல்ல வேண்டும். அதன்வழி மக்கள் மேம்பாடு அடைய வேண்டும் என்பதே இப்பாடலின் கருத்தாகும்.

'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' என்பது சங்க மரபு. மன்னன் முன்மாதிரியாக, உயர் சிந்தனை உடையவனாக, நடுநிலை ஆட்சி நடத்துபவனாக, குடிகள் மீது அன்புடையவனாக, எல்லோராலும் மதிக்கக் கூடியவனாக இருந்தான். அதனால், மக்கள் 'திருவுடை மன்னனைக் காணின் திருமாலைக் கண்டேனே' என்று விரும் பும் அளவிற்கு இருந்தனர். மக்களுக்காக மன்னர் இருந்தனர் என்பதை, **"அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்"** (பொருநர். 230).

**"அஞ்சினர்க்கு அளித்தலும் வெஞ்சினம் இன்மையும் / ஆண் அணி புகுதலும், அழிபடை தாங்கலும் / வாள் மீக் கூற்றத்து வயவர் ஏத்த / கருதியது முடித்தலும் காமுறப் படுதலும் / ஒருவழிப் படா அமையும் ஓடியது உணர்தலும்"** (சிறுபாண். 210 – 214) ஆகிய பாடல்களின் வழி அறிய முடிகின்றது. மேலும் மன்னன் தன்னை நாடி வருபவர்களுக்கு எளிமை உடையவனாகவும், வருபவர்களின் குறைகளைத் தீர்த்து மகிழ்ச்சி யுடன் வழியனுப்புபவனாகவும் அரண்மனை வாயில் அடையாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்பவனாகவும் இருந்தான் என்பதை,

**"முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டு நர்க்கும் / வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி / இடைத்தெரிந்து உணரும் இருள் தீர்காட்சிக் / கொடைக்கடன் இறுத்த கூம்பா உள்ளத்து"** (பெரும்பாண். 443 – 447). **"அடையா வாயில் மிளை சூழ் படப்பை"** (பெரும். 401) ஆகிய பாடல் வரிகள் விளக்கக் காணலாம். மன்னர்கள் மக்கள் நலனுக்காகத் தன்னை அர்ப்பணித்தவர் களாக இருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

நாடு என்றால் அது மக்களால்தான் பெயர் பெற முடியும். மக்கள் மகிழ்ச்சியாக இருந்தால் தான் சமூகத்தில் மானுட மதிப்புகள் வளரும். தன்னைப் போலப் பிறரும் சிறப்புப் பெற வேண்டும் என்பதில்தான் மானுட மதிப்புப் பயன்படுத்தப்படு கின்றது. தன்னிடம் உள்ளதைப் பகிர்ந்து கொள் கிற பண்பு, வறுமையிலும் செம்மை, நடுவு நிலைமை, பதவி உயர்ந்தாலும் எளிமையாக இருத் தல், ஒருவர்மேல் ஒருவர் காட்டும் அன்பு, பிற உயிர்களின் மேல் இரக்கம், பொதுநலப் பண்பு முதலிய மானுட மதிப்புச் சார்ந்த பண்புகள் சங்க இலக்கியங்களில் பரக்கக் காணலாம். ●

# பிரச்னையைச் சரியான முறையில் அணுகக் கற்றுக்கொள்... 6

“இந்தியாவை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டுமானால், சுவாமி விவேகானந்தரைப் படியுங்கள். அவரிடம் எல்லாமே ஆக்கபூர்வமானவை; அவரிடம் எதிர்மறையாக எதுவும் இல்லை” என்று கவியரசர் ரவீந்தரநாத் தாகூர் கூறினார்.

சுவாமி விவேகானந்தரிடம் குறுகிய மனப்பான்மை, எதிர்மறைக் கருத்துகள் ஆகியவை ஒருபோதும் இருந்ததில்லை. அவர், மற்றவர்களும் குறுகிய மனப்பான்மையைக் கைவிட்டு, நடைமுறையில் நன்மை தரக்கூடிய செயல்களில் ஈடுபட வேண்டும்; பரந்த மனப்பான்மையுடன் வாழ வேண்டும் என்று வலியுறுத்தினார்.

ஒரு சமயம் கர்நாடக மாநிலத்தில் ‘பெல்காம்’ என்ற இடத்தில், சுவாமி விவேகானந்தர் தங்கியிருந்தார். அப்போது அவருக்கு 29 வயது. அங்கு அவரை அறிஞர்கள், உயர் அதிகாரிகள், தெய்வபக்தி உள்ளவர்கள், தெய்வபக்தி இல்லாதவர்கள், பண்டிதர்கள், பாமரர்கள் என்று சமுதாயத்தில் அனைத்து நிலைகளிலும் உள்ள பலர் சந்தித்து உரையாடினார்கள்.

அவ்விதம் விவேகானந்தரைச் சந்தித்துப் பேசுவதற்காக வந்தவர்களுக்கிடையில், அவ்வப்போது கலந்துரையாடல்கள் நடைபெற்றன. இந்த உரையாடல்களின்போது சிலர் நியாயமில்லாத ஏதேனும் ஒரு கருத்தை உறுதியாகப் பிடித்துக் கொண்டு ‘நான்பிடித்த முயலுக்கு மூன்று கால்கள்’ என்று முரட்டுத்தனமாகப் பேசினார்கள்.

சிலர் தங்கள் கருத்து தவறு என்று தெரிந்த பிறகும், ‘அதுதான் சரி’ என்று விவாதித்தார்கள்.

அவ்விதம் ஒரு முடிவுக்கும் வராமல் ஒரு நாள் மனம்போன போக்கில் பண்டிதர்கள் சிலர், தங்களுக்குள் காரசாரமாக விவாதம் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் படிப்பினை தரும் வகையில் சுவாமி விவேகானந்தர் பின்வரும் ஒரு கதையைக் கூறினார்:

“ஓர் அரசன் தன் நாட்டை ஆட்சி செய்து வந்தான்.

திடீரென்று ஒரு நாள் அவனுடைய நாட்டை, பக்கத்து நாட்டு அரசன் படையெடுத்து வந்து முற்றுகையிட்டான்.

உடனே அரசன் எல்லோரையும் அழைத்து, “பகைவர்களின் படை விரைந்து வந்து கொண்டிருக்கிறது! அவர்களை எப்படி எதிர்கொள்வது? இப்போது நாம் என்ன செய்யலாம்?” என்று ஆலோசனை கேட்டான்.

அங்கிருந்த பொறியியல் வல்லுநர்கள், “நம் தலைநகரைச் சுற்றிலும் பெரிய ஒரு மண் சுவர் எழுப்பி, அதைச் சுற்றி ஓர் அகழி அமைக்க வேண்டும்” என்றார்கள்.

தச்சர்களோ, “மண் சுவர் பயனற்றது, மழை வந்தால் கரைந்துவிடும்.





எனவே மரத்தினால் சுவர் அமைக்க வேண்டும்” என்று கூறினார்கள்.

இதைக் கேட்ட தாழ்த்தப்பட்டவர்கள், “இரண்டும் பயனற்றவை. தோலால் தலைநகரத்தைச் சுற்றிலும் சுவர் அமைப்பது போன்று பாதுகாப்பானது வேறு எதுவுமில்லை” என்றனர்.

அப்போது கொல்லர்கள், “நீங்கள் சொல்வது எதுவுமே சரியில்லை. இரும்புச் சுவரைப் போன்று ஒரு பாதுகாப்பை வேறு எதனாலும் தர முடியாது. இரும்பினால்தான் மதிற்சுவரைக் கட்ட வேண்டும்” என்று கூக்குரலிட்டனர்.

அப்போது அங்கே வந்த சட்ட நிபுணர்கள், “நாம் பகையரசனிடம் ‘நீங்கள் இப்படி வலுவில் வந்து எங்கள் நாட்டின் மீது படையெடுப்பது முறையல்ல. இது சட்டத்திற்குப் புறம்பானது. எதையும் சட்டப்பூர்வமாக அணுகுவதுதான் சிறப்பு. எனவே நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்து, நீதிமன்றம் வழங்கும் தீர்ப்பின்படி நீங்கள் நடப்பதுதான் நியாயமாகும்’ என்று அவர்களுக்கு அறிவுரை சொல்ல வேண்டும்” என்று வாதிட்டார்கள்.

கடைசியாக அரசாங்கப் பூஜாரிகள் வந்தார்கள். அவர்கள் அது வரையில் ஆலோசனை கூறிய எல்லோரையும் பார்த்து ஏளனமாகச் சிரித்தார்கள். அவர்கள், “நீங்கள் எல்லோரும் பைத்தியக்காரர்கள் போல் பேசுகிறீர்கள்! முதலில் யாகங்கள் செய்து தேவர்களை மகிழ்விக்க வேண்டும். அப்படிச் செய்தால் நம்மை யாராலும் வெல்ல முடியாது!” என்றார்கள்.



இப்படியெல்லாம் அவர்கள் நாட்டைக் காப்பாற்றுவதற்குப் பதில் வீண் வாக்குவாதம் செய்வதிலும், தங்களுக்குள் சண்டையிடுவதிலும் காலத்தை வீணாக்கிக் கொண்டிருந்தார்கள்.

இதற்குள் பகை அரசன் புயல்போல் தன் படைகளுடன் தலைநகரத்திற்குள் புகுந்தான். அவன் எந்த எதிர்ப்பும் இன்றி, மிகவும் சுலபமாகத் தலைநகரத்தைக் கைப்பற்றி, அதை இடித்துத் தரை மட்டமாக்கினான்.

நம்மில் பலர் இப்படித்தான் நடந்து கொள்கிறோம்” என்று சுவாமி விவேகானந்தர் கதையைச் சொல்லி முடித்தார்.

‘உண்மை எது?’ என்று நாம் சரியாகத் தெரிந்துகொள்ளும் பொருட்டு, மற்றவர்களுடன் கலந்துரையாடலில் ஈடுபடுவது நல்லது. ஆனால் தெரிந்து வேண்டுமென்றே வீண் வாக்குவாதங்களிலும், வீம்புப் பேச்சுக்களிலும் ஈடுபடுவது வரவேற்கத்தக்கதல்ல.

ஒரு பிரச்னை என்று வரும்போது, அதைத் தீர்ப்பதற்கு ஆக்கபூர்வமான ஒரு வழியைக் கண்டறிந்து செயல்படுத்திப் பிரச்னையைத் தீர்ப்பதுதான் – வெற்றி பெறுவதுதான் அறிவுடைமையாகும். இதற்குமாறாக புரிந்துகொள்ளாமல் விவாதம் செய்வது, திக்குத் தெரியாத காட்டில் நுழைவது போன்றது. கொள்கைவெறி அழிவுக்குக் காரணமாக அமையுமே தவிர, ஒருபோதும் ஆக்கப்பூர்வமான எந்த நன்மையையும் தராது.

– முற்றும் –

# இம்மாதராசி பலன்

**"என்ன நடக்கலாம் என்பதை அனுமானிப்பவன் சோதிடன்
என்ன நடக்கும் என்பதைத் தீர்மானிப்பவன் இறைவன்!"**

'ஜோதிடத் திலகம்'
**க. தில்லையம்பலம்**

**1.6.2019 அன்று கோள்கள் நிலை**

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் | சுக்கிரன் சூரியன் | புதன் செவ்வாய் ராகு |
| | 04.6.2019 சுக். – மிதுனம்<br>15.6.2019 சூரி. – மிதுனம் | | |
| | 22.6.2019 செவ். – கடகம்<br>20.6.2019 புதன் – கடகம்<br>28.6.2019 சுக். – கடகம் | | |
| கேது சனி (வ) | குரு (வ) | | |

## மேஷம்



**மே**ஷ ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் ரத்த சம்பந்தம் உடைய உறவினர்கள், புத்திர வர்க்கத்தார், அரசாங்கம், ஹேஷ்ய பேர நடவடிக்கைகள் மூலம் பண வரவு, நன்மை ஏற்படலாம். மாதத்தின் பிற்பாதியில் தொழில் உத்தியோக வழி நன்மையும், பொருளாதார ஏற்றமும் காண்பீர்கள். மாற்று மதக்காரர்களைச் சந்திக் கலாம். புதிய முயற்சிகளுக்கு ஏற்ற காலம். ஆனால், போக்குவரத்துகளிலும், கடன் கொடுப்பது, வாங்குவது சம்பந்தமாகவும் கவனமுடன் இருக்க வேண்டும். ஒரு சிலருக்குக் குறுகிய காலப் பயணங்கள் ஏற்படலாம். 8–ஆம் வீட்டில் குரு சஞ்சரிப்பதால் சுபகாரிய முயற்சிகளில் இன்னும் சில காலம் தடைகள் இருந்து வரும். எல்லாக் காரியங்களிலும் அவ்வப்போது தடை, தாமதங்கள் ஏற்படுவது சகஜம்.

சனி வக்கிரம் பெற்று 9–இல் சஞ்சரிப்பதும், கேதுவுடன் சேர்க்கை பெறுவதும் குடும்பத்தில் இருக்கும் வயதானவர்களுக்கு நன்மையான அமைப்பல்ல. சுக்கிரன் 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் சுக போக இச்சைகள் அதிகப்படலாம். அதே சமயம் சுக்கிரன் – செவ்வாய் – இராகு சேர்க்கை ஏற்படுவதால் வண்டி, வாகனப் பீடை ஏற்படலாம். இள வயதினர் காதல் வயப்பட்டுத் தவறான காரியங்களில் இறங்கக்கூடும். பாதகமான திசா புத்தி நடைமுறையில் இருப்பின் சகோதர வர்க்கத்தார் பாதிப்பை அடைவர். ஒரு சிலர் அறுவைச் சிகிச்சை செய்து கொள்வர். புதிய முயற்சிகளில் மாதத்தின் முற்பாதியில் இறங்க வேண்டாம்.

## ரிஷபம்



**ரி**ஷப ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் குடும்பத்தில் சில சச்சரவுகள் நேரலாம். வீண் சலனங்களாலும், குழப்பங்களாலும் மன உளைச்சலுக்கு ஆளாவீர்கள். புதன் – செவ்வாய் – ராகு – சூரியன் – சுக்கிரன் முதலிய கிரகங்கள் தன ஸ்தானத்தில் சஞ்சரிப்பதால் பண வருவாய் இருந்தாலும் தேவையற்ற செலவுகளும் ஏற்படக்கூடும். வாய் வார்த்தையிலும், குடும்பச் சூழ்நிலைகளைக் கையாள்வதிலும் மிகுந்த எச்சரிக்கை தேவை. குரு வக்கிரம் பெற்று 7–இல் சஞ்சரிப்பதால் சில எதிர்ப்புகளைச் சந்திக்க நேரிடும். ஒரு சிலருக்குத் தகப்பன் – மகன் உறவு பாதிக்கப்பட வாய்ப்புண்டு.

8–இல் கேது, சனி இணைவு பெற்றுச் சஞ்சரிப்பதால், தொழில் உத்தியோகத் துறைகளில் சங்கடங்கள் நேரலாம். சிலர் தங்களின் தொழில், உத்தியோகங்களை விட்டுவிட்டு மாற்று வழிகளைப் பற்றிய சிந்தனைவயப்படுவர். அட்டமத்துச்

சனி தொழில் வழியில் நிம்மதிக் குறைவையும், நிதர்சனமற்ற போக்கையும் ஏற்படுத்தும். திருமணம் முதலிய சுப காரியங்கள் எதிர்வரும் நவம்பர் 2–ஆம் தேதி வரை நடைபெற வாய்ப்புண்டு. இரண்டில் சூரியன் – செவ்வாய் – ராகு இணைவு பெற்றுச் சஞ்சரிப்பதால், அரசாங்க உபத்திரவங்களோ, கண்களில் உபத்திரவங்களோ ஏற்படலாம். 22–ஆம் தேதிக்குப் பின் செவ்வாய் 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் வீண் பயமும், கலக்கமும் ஏற்படக்கூடும்.




**மி**துன ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் முற்பாதியில் 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், சுபச் செலவை ஏற்படுத்தும். வீண் அலைச்சல் உண்டாகும். ஒரு சிலர் அரசாங்கத்திற்குத் தண்டத் தீர்வை கட்டுவர். மாதத்தின் பிற்பாதியில் சூரியன் பிற கிரகங்களுடன் சேர்க்கை பெற்றுச் சஞ்சரிப்பதால், குழப் பம் அடைவர். உஷ்ண ரோகம் ஏற்படும். வீண் கோபதாபங்களுக்கும் கலக்கத்திற்கும் ஆளாவர். செவ்வாய் 22–ஆம் தேதி முதல் 2–இல் நீசம் பெற்றுச் சஞ்சரிப்பதால், கடன் மூலமாகவும், நண்பர் மூலமாகவும் பிரச்சனைகள் வரக்கூடும். ஒரு சிலருக்கு நண்பர்கள் விரோதிகள் ஆவர். விரோ திகள் நண்பர்கள் ஆவர். காசு கொடுத்தால் வாங்க முடியாது. வாங்கினால் கொடுக்க முடியாது.

7–இல் சனி, கேது சஞ்சரிப்பதால், போக்குவரத்துக்களில் எச்சரிக்கை தேவை. கூட்டுத் தொழில், கூட்டாளிகள் விஷயங்களில் யோசித்துச் செயல்பட வேண்டும். குரு 6–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் ஜனன ஜாதகத்தில் குரு வக்கிர நிலையில் சஞ்சரிப்பவர்களுக்கு நன்மை உண்டாகும். சுப காரியங்கள் ஈடேறும். அரசாங்க நன்மை ஏற்படும். ராசி மீது ராகு சஞ்சரிப்பதால், இன்னும் சில காலம் உணவுப் பழக்கவழக்கங்களிலும், வேற்று மதக்காரர்களிடம் பழகுவதிலும் கவனம் வேண்டும். அஜீரணக் கோளாறுகள், தொண்டைப்புண், கட்டி முதலியவை சிலருக்குத் துன்பத்தை ஏற்படுத்தும்.




**க**டக ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதி அனுகூலமானது. புதிய முயற்சிகளுக்கு ஏற்புடைய காலம். தன வரவும், பொருள் வரவும், நண்பர்கள் உதவியும் ஏற்பட வாய்ப்புண்டு. மாதத்தின் பிற்பாதி சிறப்பாக இருக்காது. தெரிந்தே ஏமாற்றம் அடைவீர்கள். கெட்ட திசா புத்தி நடைமுறையில் இருப்பின், அரசாங்கத் தண்டனை, வீண் உபத்திரவம் ஏற்படும். சிறைவாசம்கூடச் சிலருக்கு ஏற்படலாம், கவனம் தேவை. 22–ஆம் தேதிக்குப் பின்னர் செவ்வாய் உங்கள் ராசி மீது சஞ்சரிக்க இருப்பதால் சினமடைவீர்கள். உடல் நலிவு ஏற்படும். தொழிற்பீடையுண்டாகும்.

குரு வக்கிரம் பெற்று 5–இல் சஞ்சரிப்பதால் யோக பலன்களை அடைய இயலாது. சுப காரிய முயற்சிகள் தள்ளிப்போகும். சனி – கேது 6–இல் சஞ்சரிப்பதால் எதிர்ப்புகள் ஏற்படும். எதிராளிகள் மீது கவனம் வேண்டும். வயிற்றில் உபாதைகள் ஏற்படலாம். அறங்காவல் துறை, தர்ம ஸ்தாபனங்கள் நடத்துபவர்களுக்கு அதிக நன்மையுண்டு. சுக்கிரன் – ராகு சேர்க்கை பெறுவதால் அற்ப சுகங்களுக்கு ஆசைப்பட்டுச் சிலர் மறைவாகப் பாவம் செய்வர். அவ்வாறான செய்கைகள் மூலம் பிற்காலத்தில் பாதிக்கப்படுவீர்கள். மாதத்தின் பிற்பாதியில் அதிக கவனமுடன் எக்காரியத்திலும் இறங்க வேண்டும்.




**சி**ம்ம ராசி அன்பர்களுக்கு இம்மாதம் மிகவும் நன்மையை ஏற்படுத்தும் விதத்தில் சூரியனின் சஞ்சாரம் உள்ளது. மாதத்தின் முற்பாதியில் தொழில் உத்தியோகத் துறைகளில் ஆதாயத்தையும், சுப காரிய ஈடுபாடுகளையும் தன லாபத்தையும் ஏற்படுத்த வாய்ப்புண்டு. மாதத்தின் பிற்பாதியில் நண்பர்கள் சந்திப்பும், அனுகூலமும், மாற்று மதத்தவர்களின் உதவியும், அரசாங்கம், அதிகார வர்க்கத்தில் உள்ளவர்களால் ஆதாயத்தையும் அடைவீர்கள். புதிய முயற்சிகளில் தாராளமாக ஈடுபாடுகள் கொள்ளலாம். நூதன நட்பு ஏற்படும்.

5–இல் சனி – கேது சஞ்சரிப்பதால் குழந்தைகளின் நலன்கள் குறித்துக் கவலைகள் இருந்து வரும். இன்னும் ஒரு சில ஆண்டுகளுக்கு இந்தக் கவலை இருந்து வரும். சனி வக்கிரம் பெற்றிருப்பதால் வாழ்க்கைத் துணைவரோடு எல்லா விதங்களிலும் ஒத்துப்போவது நல்லது. குரு 4–இல் வக்கிரகதியில் சஞ்சரிப்பதால் இடம், வீடு, வியாபாரம் தொடர்பாகச் செலவுகள் செய்து மேம்படுத்த முயற்சிக்கலாம். திருமணம் முதலிய சுப காரியங்கள் எதிர்வரும் ஐப்பசி மாதத்திற்கு மேல் கைகூடி வரும். 22–ஆம் தேதியில் செவ்வாய் 12–ஆம் வீட்டில் நீசம் பெறுவதால் கெட்ட திசை நடைமுறையில் இருப்பின், அரசாங்கம் உங்களது சொத்துக்களைப் பிடுங்கிக் கொள்ளும் அல்லது ஞாபக மறதியில் இழப்பு வரும்.

## கன்னி



**க**ன்னி ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் உங்களது முயற்சிகளில் அவ்வப்போது தடைகள் ஏற்படலாம். தர்ம காரியங்களில் செலவு செய்ய வேண்டிய கட்டாயம் ஒரு சிலருக்கு ஏற்படும். சன்மார்க்க நெறிமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். மாதத்தின் பிற்பாதியில் 10–இல் சூரியன் சஞ்சரிப்பதால் தொழில் துறையில் சில சங்கடங்கள் உங்களுக்கு மனக் கலக்கத்தை ஏற்படுத்தக்கூடும். தொழில் தொடர்பாகப் பயணங்கள் மேற்கொள்ளலாம். 22–ஆம் தேதியில் செவ்வாய் 11–இல் நீசம் பெறுவதால் நண்பர்கள் வழியிலோ, சகோதர வர்க்கத்தார் வழியிலோ செலவு வரும்.

சனி – கேது 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், ஆயுதம், அக்னி இவற்றால் மட்டுமின்றி, விஷ பீடையும் ஏற்படக்கூடும், கவனம் வேண்டும். குரு 3–ஆம் வீட்டில் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் பண வரவு ஏற்படும். சுக்கிரன் 10–ஆம் வீட்டில் ராகு சம்பந்தம் பெற்றுச் சஞ்சரிப்பதால் தொழில் செய்யும் இடங்களில் பெண்களால் பிரச்சனைகள் ஏற்படக்கூடும். பிறரது காரியங்களில் தலையிட வேண்டாம். பயணங்கள் செய்யும் காலங்களிலும் பெண்களிடம் கவனமாக இருக்க வேண்டும். புதிய முயற்சிகளில் இம்மாதம் இறங்க வேண்டாம், தோல்வியாகும்.

## துலாம்



**து**லாம் ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் எதிர்பாராத செலவுகள், சம்பவங்கள் ஏற்பட வாய்ப்புண்டு. உங்களுக்கு வேண்டிய நண்பர்கள் மூலம் அவ்வாறான செலவுகள் ஏற்படலாம். மாதத்தின் பிற்பாதியில் காரியங்களில் தடைகள் பல உண்டாகும். சிலர் ஆன்மீகப் பயணங்கள், தொலை தூரப் பயணங்களை மேற்கொள்ள வாய்ப்புண்டு. கர்ப்பிணிகள் இம்மாதம் கவனத்துடன் இருக்க வேண்டும். செவ்வாய் 22–ஆம் தேதி முதல் நீசம் பெறுவதால், களத்திர வழியில் பிரச்சனைகள் ஏற்படலாம். குரு 2–ஆம் வீட்டில் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் வரவேண்டிய நிலுவைத் தொகைகள் வந்தடையும்.

சனி – கேது 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், வசதிகளை அதிகப்படுத்திக் கொள்வீர்கள். உடன் பிறந்த சகோதர வர்க்கத்தாருடன் சிலர் மனக் கசப்பை அடைவர். திருமணம் முதலிய சுப காரியங்கள் முயற்சிக்க அனுகூலமான பலன்களை அடையலாம். புதிய முயற்சிகளை வரும் ஆடி மாதம் தொடங்கலாம், இம்மாதம் நல்லதல்ல. ராகு 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் வெளிநாடு சென்று கல்வி பயிலவோ அல்லது தொழில் செய்யவோ ஏற்ற காலம். அடுத்த ஒன்றரை ஆண்டுகளுக்கு இந்த யோகமுண்டு. சுக்கிரன் 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், நூதனப் பொருள் வாங்குவீர்கள். பூசை, புனஸ்காரங்கள் செய்ய நன்மையுண்டு.

## விருச்சிகம்



**வி**ருச்சிக ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் 7, 8–ஆமிடங்களில் சூரியன் சஞ்சரிப்பதால், ஸ்தான சலனம் ஏற்படும். செலவும், விரயமும் உண்டு. புதிய சூழ்நிலையில் வாழ வேண்டிய சூழ்நிலை உருவாகும். சூரியன், செவ்வாய், ராகு இணைவு பெற்றுச் சஞ்சரிப்பதால், இளைஞர்கள், மாணவர்கள் வண்டி வாகனங்களைக் கையாள்வதில் கவனம் வேண்டும். அதிவிரைவு ஆபத்தாக முடியும். வழக்கு, விவகாரம், நீதிமன்ற நடவடிக்கைகளில் சிலர் இறங்கக்கூடும். அது போல் உங்களது பொறுமை சோதனைக்குள்ளாக்கப்படும்.

ராசி மீது குரு சஞ்சரிப்பதால் கட்டுப்பாடான சூழ்நிலைகளில் வாழ வேண்டிய நிலை சிலருக்கு ஏற்படும். திருமணக் காரியங்கள் இன்னும் சில மாதங்கள் கழித்து முயற்சிக்க நன்மையுண்டாகும். 2–இல் சனி – கேது சஞ்சரிப்பதால், சொல் பலிதம் ஏற்படும். பண வரவு நேரிட்டாலும் செலவினங்களுக்கும் குறைவிருக்காது. சுக்கிரன் 8–இல் சஞ்சரிப்பதால் சிலர் ஆடம்பரப் பொருள்களை விற்கக்கூடும். யோக திசை நடைபெற்றால், திரண்ட செல்வம் எதிர்பாராத வகையில் ஒரு சிலருக்குக் கிடைக்கும். இப்பலன் நடப்பது அரிதாயினும், ஒரு சிலருக்கு ஏற்படலாம்.

## தனுசு



**த**னுசு ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் உங்கள் முயற்சிகள் பலன் கொடுக்கும். தொழில், உத்தியோகத் துறைகளில் அனுகூலமான போக்குத் தென்படும். ஒரு சிலர் தேவையைக் கருதிக் கடன் வாங்கும் வாய்ப்புண்டு. மாதத்தின் பிற்பாதியில் சூரியன் – ராகு – செவ்வாய் முதலிய பாபக் கிரகங்கள் 7–ஆமிடத்தில் சஞ்சரிப்பதால், எதிர்ப்புகள் தோன்றலாம். அரசாங்கத்தால் பிரச்சனைகள் வேற்று மதக்காரர்கள் மூலமான பிரச்சனைகள் வர வாய்ப்புண்டு.

சமயோசிதமாக நடந்து கொள்ள வேண்டும்.

22–ஆம் தேதி முதல் 8–இல் செவ்வாய் நீசம் பெறுவதால், குழந்தைகள் மீது கவனம் வேண்டும். பிறர் மீது கோபதாபங்களை ஏற்படுத்திக்கொள்ளக் கூடாது. எல்லை மீறி உங்களைச் சிலர் சோதிப்பர். பொறுமை அவசியம். ராசி மீது சனி – கேது சஞ் சரிப்பதால், உடல் நலனில் தொடர்ந்து அக்கறை செலுத்தி வர வேண்டும். கேது மனக்குழப்பத்தை அதிகரிக்கச் செய்யும். சுக்கிரன் 7–இல் இராகு வுடன் இணைவு பெறுவதால், பெண்களால் எதிர்ப்பு வரும். குடும்பத்தில் கோபதாபங்கள் ஏற் படவும் வாய்ப்புண்டு. 12–இல் குரு சஞ்சரிப்பதால் உங்கள் அந்தஸ்தைக் காப்பாற்றிக்கொள்ளப் போராட வேண்டும். திருமணக் காரியங்கள் தாமத மாகும்.

## மகரம்



**ம**கர ராசி அன்பர் களுக்கு, இம்மாதத்தின் முற் பாதியில் திருப்திகரமான பலன்கள் ஏற்பட வாய்ப்பில்லை. குறிப்பாகச் சிலர் குழந்தை களால் மனக்கஷ்டம், பணக் கஷ்டம் முதலியவற்றை அடை வர். மாதத்தின் பிற்பாதியில் தொழில், உத்தியோகத் துறை களில் நன்மையுண்டு. அதேசமயம் உடல் நலத் திலும் அக்கறை வேண்டும். ஒரு சிலர் நுண் கிருமிகளின் தாக்கத்தால், குறிப்பாகக் குழந்தை களுக்குக் காய்ச்சல் முதலியன ஏற்படும். வயிற்றுப் பகுதியிலோ, தொண்டைப் பகுதியிலோ இந்த ராசிக் காரர்களுக்குப் பாதிப்பு வரக்கூடும். ஒரு சிலர் கோர்ட்டு, வில்லங்க விவகாரங்களில் வெற்றியை அடைவர். எதிரிகள் நசித்துப் போவர்.

சுக்கிரன் – ராகு சேர்க்கை ஏற்படுவதால், உடல் நலிவுகள் ஏற்பட்டால் ரத்தப் பரிசோதனை செய்து கொள்வது நல்லது. 12–ஆம் வீட்டில் சனி – கேது சஞ்சரிப்பதால் எதிலும் பெரிய அளவில் பற்றுதல் இல்லாமல் சிலர் விரக்தியடைவர். ஒரு சிலர் தங்களின் கல்வி, தொழில் கருதி வேற்றிடம் செல்வதற்கு வாய்ப்புண்டு. திருமணம் முதலிய சுப காரியங்கள் கூடிய விரைவில் ஈடேறலாம். ஜனன ஜாதகத்தில் சுபக் கிரக திசா புத்திகள் நடைபெற வேண்டும்.

## கும்பம்



**கு**ம்ப ராசி அன்பர் களுக்கு, இம்மாதம் 4, 5–ஆமி டங்களில் சூரியன் சஞ்சரிப்ப தால் அதிக அலைச்சலும், தேக நலிவுகளும், காரியத் தடைகளும் ஏற்படக்கூடும். மாதத்தின் முற்பாதியில் சுப காரியச் செலவுகள் உண்டு. மாதத்தின் பிற்பாதியில் எதிர்பாராத சம்பவங் களால் கலக்கம் ஏற்படலாம். 22–ஆம் தேதி முதல் செவ்வாய் நீசம் பெற்று 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்ப தால், சுவாசக் கோளாறுகள், தொழில்வழிப் பிரச் சனைகள் ஏற்படக்கூடும். குரு வக்கிரம் பெற்று 10–இல் சஞ்சரிப்பதால் தற்காலிகமாகப் பொரு ளாதார ரீதியான சில நன்மைகளை அடையலாம்.

லாபஸ்தானத்தில் சனி வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், பணியாட்கள் விஷயங்களில் அதிருப்திகள் ஏற்படக்கூடும். சுக்கிரன் 5–இல் சஞ்சரிப்பதால் இள வயதினர் நன்மை அடைவர். அதிர்ஷ்டம் உண்டு. ராகு சேர்க்கை பெறுவதால் போட்டித் தேர்வுகளில் நன்மை ஏற்படலாம். மருத்துவம் தொடர்புடைய கல்வி கற்பவர்களுக்கு நன்மை உண்டாகும். கேது 11–இல் சஞ்சரிப்பதால் பெரியோரின் தொடர்புகள் அவர்களது அருளாசி யால் எவ்விதத் துன்பத்திலிருந்தும் விடுபட்டு விடு வீர்கள். திருமணம் முதலிய சுப காரியங்களுக்குச் சில மாதங்கள் பொறுத்திருக்க வேண்டும்.

## மீனம்



**மீ**ன ராசி அன்பர் களுக்கு, இம்மாதம் சூரியன் மாதத்தின் முற்பாதி வரை 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் நல்ல தோற்றம், நல்ல செய் கையை வெளிப்படுத்துவீர்கள். தொழில், உத்தியோகத் துறை களில் நன்மை உண்டு. பொருள் வசதியும் திருப்தி தரும். மாதத்தின் பிற்பாதியில் உடல் உபாதை, அலைச்சலை ஏற்படுத்தும். செவ்வாய் 5–இல் நீசம் பெறுவதால், 22–ஆம் தேதி முதல் சிலர் பொய் சொல்ல வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாவர். அடிக்கடி மனநிலை, முடிவுகளை மாற்றிக்கொள்வீர்கள்.

குரு 9–இல் வக்கிரம் பெற்றுள்ளதால் பணம், பொருள் முடக்கமாகும். சனி – கேது 10–இல் சஞ்சரிப்பதால் பொதுத்துறை, அறங்காவல் துறை, தர்ம ஸ்தாபனங்கள் தொடர்புடையவர்கள் மேன்மை அடைவர். ராகு – சுக்கிரன் 4–இல் சஞ்சரிப்பதால், குடும்பத்தில் வீண் குழப்பங்கள் ஏற்படலாம். ஒரு சிலரது சகோதர வர்க்கத்தார் சிறிய பாதிப்புகளை அடைவர். இந்த ராசி அன்பர்கள் போக்குவரத்துக்களிலும், வாகனங் களைக் கையாள்வதிலும் எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டும். திருமணக் காரியங்கள் வரும் நவம்பர் மாதத்திற்குள் நிறைவேறும். புதிய முயற்சிகளை மாதத்தின் முற்பாதியில் செய்ய நன்மை உண்டாகும். ●

கட்டுரை

# தமிழுக்கும் புதனுக்குமான தொடர்பு

நடராஜன் ஸ்ரீதர்
&
பேரா. சந்திரமோகன் ரெத்தினம்



தலைப்பினைப் பார்த்ததும் ஏதோ பஞ்சாங்கத்தைப் பற்றியோ அல்லது ஜோதிடத்தைப் பற்றியோ எழுதப் பட்டுள்ள கட்டுரை இது என்று வியக்க வேண்டாம். இக் கட்டுரை, புதன் கோளில் உள்ள பெரும் பள்ளத்தாக்குகளுக்குத் தமிழ் அறிஞர்களின் பெயர்கள், இந்திய அறிஞர் களின் பெயர் கள் சூட்டப்பட் டுள்ளதை விளக் கும் விதமாகவே எழுதப்பட் டுள்ளது.

**புதன் கிரகம்:** புதன் கிரகமா னது சூரியனை, முதல் சுற்று வட்டப் பாதையில் சுற்றி வருகிறது. 87.97 நாட் களுக்கு ஒருமுறை சூரிய னைச் சுற்றி வருகிறது. சூரிய குடும்பத்தில் உள்ள கோள்களில் மிகக் குறைவான காலத்தில் சூரியனைச் சுற்றி வரும் கோள் புதன் ஆகும். 15,320 கிலோ மீட்டர் சுற்றளவு கொண்ட சிறிய கோள் புதன்.

புதன் கோளானது இரவில் மிகக் குளிரா கவும், பகலில் மிக வெப்பமாகவும் காணப் படும் விசித்தரமான கோள் ஆகும். பகலில் மிக அதிகமாக 427 டிகிரி செல்சியஸ் வெப்பநிலையும், இரவில் மிகக் குளி ராக – 180 டிகிரி செல்சியஸ் வெப்ப நிலையும் கொண்டி ருக்கும். இப்புதன் கோளுக்கு நிலவுகள் இல்லை.



**புதன் கோளில் பள்ளங்கள் :** புதன் கோளில் பெரும் பள் ளங்கள் காணப்படு கின்றன. புதன் கோளை வரைபட மாக்கல் செயல் முறைக்கு உட்படுத் தும் போது அவ் வகையான பள் ளங்களுக்குப் பெயரிடப் படுகிறது.

இதன் காரண மாகப் பூமியில் வாழ்ந்த எழுத் தாளர்கள், கவிஞர்கள் மற்றும் இசைக் கலை ஞர்களின் பெயர் களைப் பரிந்துரைத்து அப்பள்ளங்களுக்குப் பெயர் சூட்டியுள்ளனர். ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகப் பிரபலமாக இருந்த கலைஞர்களின் பெயர்களை அப் பள்ளங்களுக்குச் சூட்டி யுள்ளனர்.

2017–ஆம் ஆண்டு தகவலின்படி புதன் கோளின் 397 பள்ளங் களுக்குப் பெயர்கள் சூட்டப்பட்டுள்ளன. அப்பெயர்களில் இந்தி யர்களின் பெயர்

களையும், தமிழ் அறிஞர்களின் பெயர்களையும் இங்குக் காணலாம்.

**ஆண்டாள் :** 109 கிலோ மீட்டர் குறுக்களவு கொண்ட பள்ளமானது புதன் கோளின் மேற்பரப்பில் 47.52s 37.71°W என்ற அச்சில் அமைந்துள்ளது. இப்பள்ளத்திற்கு ஆண்டாள் என்னும் பெயர் சூட்டப்பட்டுள்ளது. தமிழகத்தில் வாழ்ந்த மிகப்பெரும் தமிழ்ப் புலவரான ஆண்டாள் அவர்களுக்கு இந்த அங்கீகாரம் கிடைத்துள்ளது. 1976–ஆம் ஆண்டு இப்பெயரானது அங்கீகரிக்கப்பட்டது.

**தியாகராாசர் :** தியாகராாசர் தமிழகத்தில் வாழ்ந்த மிகப் பெரும் இசைக்கலைஞர். 97 கிலோ மீட்டர் அகலம் கொண்ட ஒரு பள்ளத்திற்கு இவர் பெயர் சூட்டப்பட்டுள்ளது. புதன் கோளின் மேற்பரப்பில் 3.89N 148.9°W என்ற அச்சில் இப்பள்ளம் அமைந்துள்ளது. 1976–ஆம் ஆண்டு இப்பெயரானது அங்கீகரிக்கப்பட்டது.

**ஏனைய இந்திய அறிஞர்களின் பெயர்கள் :**

**அஸ்வகோஷர் :** 90 கிலோ மீட்டர் அகலம் கொண்ட இப்பள்ளமானது சமஸ்கிருதத் தத்துவவியலாளர் மற்றும் புலவரான அஸ்வகோஷரின் பெயரைத் தாங்கி நிற்கிறது. புதன் கோளில் 10.4, 21w என்ற அச்சில் இந்தப் பள்ளம் அமைந்துள்ளது. 1976–ஆம் ஆண்டு இப்பெயர் அங்கீகரிக்கப்பட்டது.

**காளிதாசர் :** 170 கிலோ மீட்டர் அகலம் கொண்ட இந்தப் பள்ளம் புதனின் மேற்பரப்பில் 18.1s 179.2°W என்ற அச்சில் அமைந்துள்ளது. இப்பள்ளமானது இந்தியாவில் வாழ்ந்த மிகப்பெரும் புலவரான காளிதாசரின் பெயரைக் கொண்டுள்ளது. 1976–ஆம் ஆண்டு இந்தப் பெயர் அங்கீகரிக்கப்பட்டது.

**மன்சூர் :** 100 கிலோ மீட்டர் அகலம் கொண்ட இந்தப் பெரும் பள்ளம் 47.8N 162.6°W என்ற அச்சில் அமைந்துள்ளது. இப்பள்ளம் 17–ஆம் நூற்றாண்டில் இந்தியாவில் வாழ்ந்த உஸ்தாத்மன்சூர் என்னும் கலைஞரின் பெயரைத் தாங்கியுள்ளது. 1979–ஆம் ஆண்டு இப்பெயரானது அங்கீகரிக்கப்பட்டது.

**ஷெர்கில் :** 77 கிலோ மீட்டர் அகலம் கொண்ட இந்தப் பள்ளம் 45° 15’36”S, 134° 44’ 24”E என்ற அச்சில் அமைந்துள்ளது. இந்தியப் பெண் ஓவியர் அம்ரிதா ஷெர்கில் என்பவரின் நினைவாக இப்பெயர் சூட்டப்பட்டுள்ளது. 2008–இல் இப்பெயரானது அங்கீகரிக்கப்பட்டது.

**சூர்தாஸ் :** 16–ஆம் நூற்றாண்டில் இந்தியாவில் வாழ்ந்த பார்வையற்ற பாடகர் மற்றும் கவிஞரான சூர்தாஸின் பெயர், 131 கிலோ மீட்டர் அகலமான பள்ளத்திற்குச் சூட்டப்பட்டுள்ளது. 46.98s 93.57°W என்ற அச்சில் இப்பள்ளம் அமைந்துள்ளது. 1979–ஆம் ஆண்டு இப்பெயர் அங்கீகரிக்கப்பட்டது.

**தான்சேன் :** இந்தியாவில் வாழ்ந்த ஹிந்துஸ்தானி இசைக் கலைஞர் தான்சேன். 27 கிலோ மீட்டர் அகலமுள்ள ஒரு பள்ளத்திற்கு இவர் பெயர் சூட்டப்பட்டுள்ளது. 4.11N 71.67°W என்ற அச்சில் இப்பள்ளம் அமைந்துள்ளது. 1976 ஆம் ஆண்டு இப்பெயரானது அங்கீகரிக்கப்பட்டது.

**தாகூர் :** ரவீந்திரநாத் தாகூர் இந்தியாவில் வாழ்ந்த மிகப்பெரிய கவிஞர், எழுத்தாளர் மற்றும் பல்திறன் கலைஞர். அவரின் பெயர் புதனின் மேற்பரப்பில் 111 கிலோ மீட்டர் அகலமுள்ள பள்ளத்திற்குச் சூட்டப்பட்டுள்ளது. 3.05s 64.57°W என்ற அச்சில்

இப்பள்ளமானது அமைந்துள்ளது. 1976 ஆம் ஆண்டு இப்பெயரானது அங்கீகரிக்கப் பட்டது.


ஆண்டாள்

**உஸ்தாத்இசாசி ராசி :** உஸ்தாத் இசாசிராசி இந்தியாவில் வாழ்ந்த முகலாய கட்டடக் கலை நிபுணர். தாஜ் மகாலைக் கட்டிய நிபுணர்களில் இவரும் ஒருவர் என வரலாறு களில் குறிப்பிடப்பட் டுள்ளது. புதன் கோளில் 31.91s 166.11°W என்ற அச்சில் 139 கிலோ மீட்டர் அகலம் கொண்ட பள்ளத்திற்கு இவரது பெயர் சூட்டப்பட் டுள்ளது. 1979 ஆம் ஆண்டு இப்பெயர் அங்கீ கரிக்கப்பட்டது.


வால்மீகி

**வால்மீகி :** ராமாயணத்தைச் சமஸ்கிருதத்தில் எழுதிய இந்தியப் புலவர் வால்மீகி. இவரது பெயரில் புதன் கோளில் ஒரு பள்ளம் உள்ளது. புதன் கோளில் 23.58s 141.41°W என்ற அச்சில் 210 கிலோ மீட்டர் அகலம் கொண்ட பள்ளத்திற்கு வால்மீகியின் பெயர் சூட்டப்பட்டுள்ளது. 1976 ஆம் ஆண்டு இப்பெயர் அங்கீகரிக்கப்பட்டது.

**ராஜா ரவிவர்மா :** ராஜா ரவிவர்மா மலையாள ஓவியர் மற்றும் கலைஞர். புதன் கோளில் 80.04N 18.97°W என்ற அச்சில் 30 கிலோ மீட்டர் அகலம் கொண்ட பள்ளத் திற்கு ராஜா ரவிவர்மாவின் பெயர் சூட்டப்பட் டுள்ளது. 2013 ஆம் ஆண்டு இப்பெயர் அங்கீகரிக்கப் பட்டது.

**வியாசர் :** வியாசர் அல்லது வேதவி யாசர் இந்தியப் புலவர்களுள் முக்கியமானவர். சமஸ்கிருதத்தில் மகாபாரதத்தையும் படைத்தவர். இவரது பெயரில் புதன் கோளில் 49.79N 84.62°W என்ற அச்சில் 297 கிலோ மீட்டர் அகலம் கொண்ட பெரும் பள்ளம் ஒன்று உள்ளது. இப்பெய ரானது 1979–ஆம் ஆண்டு அங்கீகரிக்கப் பட்டது.

எத்தனையோ அறிஞர்கள் இம்மண்ணில் தோன்றியிருந் தாலும் சில அறிஞர்கள் பெயர் கள் பூமியைத் தாண்டியும் வரலாறு கடந்தும் நிற்கின்றன என்பதற்கு புதன் கோளில் அவர்களுடைய பெயர்கள் சூட்டப்பட்டு இருப்பது ஒரு சிறந்த உதாரணம்.

மேலும் இந்தியப் பாரம்பரியம் இங்குக் குறிப்பிட்டுள்ள அறிஞர் களோடு மட்டும் நின்றுவிடவில்லை. வரலாற்றில் எண்ணிலடங்கா அறிஞர்களும், வரலாற்றைத் தாண்டி யும் பல அறிஞர்களும் சமூகத்திற்குச் சேவைகள் புரிந்து வந்துள்ளனர். அப்படிப்பட்ட அறிவார்ந்த அறிஞர் களையும் அவர்களுடைய பெருமை களையும் என்றென்றும் மதித்துப் போற்றுவோம். - 'முழுமை அறிவியல் உதயம்', மார்ச், 2019.

●

கட்டுரை

◆ மீனாட்சி பாலகணேஷ் ◆



# கிருஷ்ணனுக்குக் காதுகுத்துதல்

**நா**லாயிர திவ்வியப் பிரபந்தத்தில் முதலாவதாக வருபவை பெரியாழ்வாரின் பாசுரங்கள். அவற்றில், அவர் தன்னைக் கண்ணனின் தாய் யசோதையாகக் கருதிப் பாடிய பாடல்கள் மிகவும் இனிமையானவை. இவற்றில் இரண்டாம் பத்தில் மூன்றாம் திருமொழிப் பாடல்கள் கண்ணனுக்குக் காது குத்துவதற்காகக் கண்ணனை யசோதை அழைப்பதாகப் பாடப்பட்டவையாகும்.

யசோதைக்குத் தன் செல்லக் குழந்தையான கிருஷ்ணனின் காதுகளில் துளையிட்டு, அழகான காதணிகளை அணிவித்துப் பார்க்க ஆசை! குடும்பமே சேர்ந்து நடத்த வேண்டியது இந்தக் காதுகுத்தும் விழா! ஆனால் தினந்தோறும் நந்தகோபன் பசுக்களை மேய்ச்சலுக்கு ஓட்டிச் சென்றுவிட்டுத் திரும்ப மாலையில் வீடுவந்து சேர மிகுந்த தாமதமாகி விடுகிறது.

குழந்தை கிருஷ்ணனோ, யார் சொல்லையும் கேளாமல் காடுமேடெல்லாம் கண்டபடி சுற்றியலைந்து விளையாடிவிட்டு வருகிறான். கம்சன் எனும் கொடியவனுடைய பிடியில் என்று அவன் அகப்பட்டுக் கொள்வானோ என யசோதையின் தாயுள்ளம் தவிக்கிறது.

அவன் காதினைக் குத்தித் தோடணிவிப்பது அவனைக் காக்கும் என அன்னை யசோதை நம்பினாளோ என்னவோ, ஆய்ப்பாடிப் பாலர்களையும் இடைப்பெண்களையும் அழைத்துக் கிருஷ்ணனுக்குக் காதுகுத்த ஏற்பாடும் செய்துவிட்டாள். நந்தகோபன் வரும்போது வரட்டும். தன் குழந்தைக்குச் செய்ய வேண்டிய நல்ல காரியங்களை இனியும் தள்ளிப் போடலாகாது என்று எண்ணிக் கொண்டாள் அவள்.

"கேசவ நம்பீ! உன்னைக் காதுகுத்த
ஆய்ப்பாலர் பெண்டுகள் எல்லாரும் வந்தார்;
அடைக்காய் திருத்திநான் வைத்தேன்"

என்று வெற்றிலைபாக்கு அனைத்தையும் தயாராக வைத்துக்கொண்டு ஆசையோடு காத்திருக்கிறாள் அன்பான யசோதை. அடைக்காய் மாத்திரமல்ல. அறுசுவைப் பணியாரங்களும் விருந்தும்கூட அவள் இல்லத்தில் இன்று அனைவருக்கும் அளிக்கப்படும்.

இந்தக் கிருஷ்ணன் வளர்ந்த நான்கைந்து வயதுச் சிறுவன். மற்ற குழந்தைகளுக்குக் காதுகுத்துவதனைப் பார்த்திருக்கிறான். அவர்கள் படும் வலி, வேதனையைக் கண்டிருப்பதால், இதனை எப்படியாவது தவிர்த்துவிட வேண்டும் என்பதிலேயே முனைப்பாக இருக்கிறான்.



ஆகவே எல்லாரும் வந்து குழுமி யிருப்பது தெரிந்ததும், அவர்கள் வரவின் காரணத்தை அறிந்ததும் கூடத்தில் ஒரு மூலையில் இடுப்பில் கைகளை ஊன்றியவண்ணம் எட்டி நின்றுகொண்டு வராமல் சண்டித்தனம் செய்கிறான். அவனுடைய இந்தப் பிடிவாதமும் பார்க்கவொரு அழகாகத்தான் இருக்கிறது அன்னைக்கு!

யசோதை அவனுக்கு ஆசை காட்டுகிறாள்: "என் கண்ணல்லவோ நீ! பார் இந்த அழகான தங்கக் கடுக்கன்களை! உனக்காகவே செய்துவைத்தது. எரிச்சல் ஏற்படாமல் உன் காதில் இதன் திரியை இடுவேனடா குழந்தாய்! இதை அணிந்து கொண்டால் உன் கண்களுக்கும் இது மிகவும் நல்லதப்பா! நாராயணா! கிட்டேதான் வந்துபாரேன்!" என்று நயமாக வேண்டுகிறாள்.

"நண்ணித்தொழும் அவர் சிந்தை பிரியாத நாராயணா! இங்கே வாராய்" என்று கெஞ்சுகிறாள். அவனோ சிறிது கூட மசியவில்லை!

அவனை மீறி அன்னையால் அவன் காதுகளைக் குத்திவிட இயலாது! அடுத்த உபாயத்திற்குப் போகிறாள் அன்னை! "மாதவா, உன் காது மிகச் சிறிதேதான் வலிக்கும்; அது உனக்குத் தெரியவே தெரியாது" என ஆசை காட்டுகிறாள்.

'வெய்யவே காதில் திரியை இடுவன்

......................................

மாதவனே! இங்கே வாராய்."

வலியை எண்ணி இதனை மறுத்தபடி நிற்கிறான் அவன்.

ஆய்ப்பாடியில் இவன் வயதொத்த மற்றக் குழந்தைகள் அழகான குண்டலங்களை அணிந்துள்ளனர். ஆய்ப்பாடியின் தலைவனான நந்தகோபன் மகனல்லவோ இவன். இவன் ஏன் இப்படிப் பிடிவாதம் செய்கிறானோ தெரியவில்லை. "கோவிந்தா, இக்காதணிகளை அணிந்துகொண்டால், உனக்கு நான் சுவையான பலாப்பழம், நீ விரும்பி அருந்தும் என் முலைப்பால் எல்லாம் தருவேன்; உன்னைக் கையெடுத்துக் கும்பிடுகிறேன், வா அப்பனே!" என வேண்டுகிறாள்.



அவள் வேண்ட வேண்ட இச்சிறு குட்டன் உதடுகளை மடித்தபடி, தலையை இப்படியும் அப்படியுமாக ஆட்டி அன்னையின் அழைப்பை மறுத்தவண்ணமாக நிற்கிறான். பொழுது சென்று கொண்டிருக்கிறது. மனக்கண்ணில் இக்காட்சியைக் காணும் பெரியாழ்வாருக்கு, மூங்கிலை ஒத்த வேய்ந்தடந்தோளாராகிய பெண்கள் விரும்பும் அழகான இளைஞன் கருங்குழல் விஷ்ணுவாக அவன் தெரிகிறான்.

**தாயாகிக் கூறுகிறார்:** "உன் காதில்" மட்டும் இந்தத் திரியை இடவிட்டாயானால், பண்ணிவைத்துள்ள பெரிய பெரிய சுவைமிகுந்த அப்பங்களை உனக்காகத் தருவேனே" எனப் பேரம் பேசிப் பார்க்கிறாள் யசோதை என் கிறார்!

"பேர்த்தும் பெரியன அப்பம் தருவன்

பிரானே! திரியிட ஒட்டில்;

வேய்ந்தடந் தோளார் விரும்பு கருங்குழல்

விட்டுவே! நீ இங்கே வாராய்." (விட்டு-விஷ்ணு)



கிருஷ்ணன் அசைவதாயில்லை. கிட்ட நெருங்கி அவனைப் பிடிக்கப் போனால் சிட்டாகப் பறந்துவிடுவான் எனத் தெரியும். ஆகவே அவனிடமே அவனைப் பற்றி உயர்வாகப் பேசு கிறாள். "நீ மண்ணைத் தின்றபோது நான் அடித்தேன்; நீ உரத்துக் கதறி அழு தாய். பூச்சிபொட்டைத்தின்று விட் டாயோ எனப் பயந்து உன் வாயைத் திறக்கச் சொன்னேன். உலகங்களை யெல்லாம் அதில் கண்டேனே குழந் தாய்! நீ சாமானியனல்லவப்பா! உன் காது புண்ணே ஆகாதபடிக்கு நான் அதில் இந்தத் தோட்டை இடுகிறேன். ஒரு கணநேரம் பொறுத்துக் கொள் ளடா!" எனக் கெஞ்சுகிறாள்.



மெல்லக்கிட்டே சென்று அந்தப் பிஞ்சு முகத்தைத் தடவிக் கொடுத்து, பட்டுக்கன்னத்தில் முத்தமிட்டு, கட்டி யணைத்து மடியிலிருத்தி, ஒருவழியாக எவ்வாறோ ஒரு காதில் துளையிட வாகாக ஊசிபோல அமைந்த திரு குடைய காதணியையும் இட்டுவிட் டாள் யசோதை.

சினம்பொங்கத் துள்ளியெழுந்த கிருஷ்ணன், காதணியைக் கணப் போதில் பிடுங்கி வீசி எறிந்து விடு கிறான். "அம்மா! எனக்கு ஒன்றும் வேண்டாம்" என ஓட்டமாக அங்கி ருந்து ஓடலானான். ஓடி மறையவில்லை அக்கள்ளன். கைக்கெட்டாத தொலை வில் நின்று பழிப்புக் காட்டுகிறான்.

அன்னைக்கு ஆற்றாமை பொங்கு கிறது. 'என்ன குழந்தை இவன்' என அங்கலாய்த்துக் கொண்டு கூறுகிறாள்: "திரிவிக்கிரமா! நான், நீ தலைகூடச் சரி யாக நிற்காத சிறு குழந்தையாக இருக் கும்போதே காதினைக் குத்தாமல் விட்டுவிட்டேனே! அது என்னுடைய தவறுதான். பெரியவனானபின், நீ இப்படிச் செய்வாய் எனத் தெரியாமல் போய்விட்டதே!" எனத் தன்னையே நொந்து கொள்கிறாள்.

"தலைநிலாப் போதே உன்காதைப் பெருக்காதே
விட்டிட்டேன், குற்றமே அன்றோ?"

"அம்மா! இப்படியெல்லாம் கூற வேண்டாம். அன்றொரு நாள் நான் மண்ணைத் தின்று விட்டாதாகக் கருதி, என் வாயைத் திறக்கச் சொல்லிப் பார்த்தாயே! அதில் மண்ணின் சுவடே காணாதபோதும், "இவன் மண் தின்ற தைப் பாருங்கள், பெண்களே!" எனச் சொல்லி எல்லார் முன்பும் என்னைப் போட்டு அடித்தாயே, அது ஏன்?" எனக் கேட்கிறான்.

இதற்கு அன்னை என்ன கூறுவாள்? பேச்சை மாற்ற முயன்று கூறுகிறாள்: "கண்ணா, வாமன நம்பீ! பாம்பின் பகைவனான கருடனைக் கொடியாக உடையவனே! நீ எல்லார் துன்பங்களை யும் போக்குபவன். பேசிக் கொண்டே இருந்தால் காதுத் துளைகள் தூர்ந்து போய்விடும். வா, வா, அதில் திரியை இட்டு விடுகிறேன்" என்கிறாள்.

சிறு குழந்தைகள் பேரறிவு

மிக்கவர்கள். சில பொழுதுகளில் அவர்கள் கூறும் சொற்களுக்கு மறுமொழி கூறுவதற்கு இயலாது நமக்கு வாயடைத்துவிடும். வேறு எதையாவது கூறிப் பேச்சையே மாற்ற முயலுவோம். யசோதையும் அவ்வாறே ஓர் இக்கட்டில் மாட்டிக் கொண்டு தவிக்கிறாள்!

"அம்மா, நீ பேச்சை மாற்றாதே! என்னை அடிப்பதில்லையென உறுதிமொழி கொடு," எனக் கண்ணன் கூற, அவளும், "நான் சொல்லுகேன் மெய்யே! என் குழந்தாய்!" என்கிறாள். கண்ணன் தன்தாய் வகையாக மாட்டிக் கொண்டுவிட்டாள் என அறிந்ததும் விடாது மேலும் மேலும் வழக்காடுகிறான்.

"நான் வெண்ணெய் திருடினேன் என்று மற்ற பெண்கள் கூறியதைக் கேட்டுக் கொண்டு, அதை உண்மை என நம்பி என் கையைப் பிடித்திழுத்து என்னை உரலுடன் வைத்துக் கட்டினாயே! அது என்ன நியாயம்?" என எதிர்க்கேள்வி கேட்கிறான்.

"சிரீதரா! (ஸ்ரீதரா!) இவ்வாறு பல கதைகளையும் பேசிக் கொண்டிருந்தால் உன் காது தூர்ந்துவிடுமடா குழந்தாய்! மற்ற பெண்கள் உன்னைக் கண்டு 'கூழைக்காதன்' எனக் கூறி ஏளனம் செய்வார்களே! அவ்வாறெல்லாம் ஆகு முன்பே, நான் உன் காது பெருக வேண்டி இத்திரியை இடுகிறேனே" எனக் கெஞ்சுகிறாள்.

"செய்தன சொல்லிச் சிரித்து அங்கு இருக்கில்
சிரீதரா! உன்காது தூரும்
கையில் திரியை இடுகிடாய், இந்நின்ற
காரிகையார் சிரியாமே."

அன்னை பாய்க்கடியில் புகுந்தால் இவன் கோலத்திற்கடியில் புகுகிறான். பின்னும் கேட்கிறான்: "என் காதுகள் வீங்கி எரிந்தால் ஏளனம் பேசும் அந்தப் பெண்களுக்கும் உனக்கும் என்னவாயிற்றாம்? அதனால் உனக்கென்ன குறை?"

"கண்ணா! குழந்தைப் பருவத்தில் உன் காதைக் குத்தினால் உன் தலை நோகுமே என அதனைச் செய்யாமல் விட்டது என் தவறுதான். இருடீகேசா! பார்! உன்னொத்த ஆய்ப்பாடிச் சிறுவர்கள் யாவரும் தமது காதுகளில் துளையிட்டுப் பெருக்கிக் கொண்டு நடமாடுவதைக் கண்டபின்பும் இவ்வாறெல்லாம் நீ கேட்கலாமோ?" என்றாள் அன்னை.

"சேரியிற் பிள்ளைகள் எல்லாரும் காது
பெருக்கித் திரியவும் காண்டி;
ஏர்விடை செற்று இளங்கன்று எறிந்திட்ட
இருடி கேசா எந்தன் கண்ணே."

(இருடிகேசா – ரிஷிகேசா)

கேட்டுக் கொண்டிருந்த கண்ணன், 'இதென்ன இவள், தான் சொல்வதையே விடாப்பிடியாகச் சொல்லிக் கொண்டிருக்கிறாள்,' என ஆடாது அசையாது நிற்கிறான். அவன் மெல்லத் தழைந்து வருகிறான் என அவள் எண்ணிக் கொண்டாள்.

இப்போது கண்ணன் தனது அன்னையிடம் கேட்கும் கேள்வி ஆச்சரியத்தினைத்தான் விளைவிக்கின்றது!

"வா என்று என் கையைப் பிடித்திழுத்துக் கட்டாயமாக என் காதில் இந்தக் கடுக்கனை எனக்கு வலிக்க வலிக்க அணிவிப்பதால் உனக்கு என்ன ஆகப் போகிறதாம்? எனக்குக் காது வலிக்கும். நான் வரமாட்டேன், நீ என்ன வேணுமானாலும் செய்து கொள்" எனப் பிடிவாதமாக மறுத்து விடுகிறான்.

யசோதை என்னவோ இவன் இன்னும் சிறுகுழந்தை என எண்ணிக் கொண்டு, "உனக்கு மிகவும் பிடித்தமான நாவல்பழங்களைத் தேடிக் கொண்டுவந்து வைத்திருக்கிறேன் பாரடா! சகடாசுரனைக் கொன்ற தாமோதரனே! பிடிவாதம் வேண்டாமடா" எனக் கெஞ்சியும் கொஞ்சியும் பார்க்கிறாள்.

"வாஎன்று சொல்லி என்கையைப் பிடித்து
வலியவே காதிற் கடிப்பை
நோவத் திரிக்கில், உனக்கு இங்கு இழுக்குற்றென்?
காதுகள் நொந்திடும்; கில்லேன்;
............................................
தாமோதரா! இங்கே வாராய்."

(பெரியாழ்வார் திருமொழி – இரண்டாம் பத்து)

பின்பு எவ்வாறாவது ஒரு வழியாகத் தன் சிறுகுட்டனைச் சமாதானம் செய்து அவன் காதுகளைக் குத்தியிருப்பாள் யசோதை!!

இதில் ஓர் அழகான செய்தி என்னவென்றால், திருமாலடியார்கள் உயர்வாகக் கருதும் கிருஷ்ணனின் பன்னிரு திருநாமங்களைக் கொண்டு இப்பாடல்களை அமைத்துள்ளதுதான்! ●

கட்டுரை

ஜஸ்டிஸ் ஏ.கே. ராஜன்

# தை முதல் நாளே - தமிழ்ப் புத்தாண்டு

ஒரு வருடம் அல்லது ஆண்டு என்பது – பூமி சூரியனை ஒருமுறை சுற்றி வரத் தேவையான காலமாகும். பூமி சற்று சாய்வாகவும் சுற்றுவதால் சூரியனின் கதிர்கள் பூமியின் மீது விழும் கோணம் மாறிக் கொண்டே இருக்கும். அதன் விளைவாகச் சூரியன் பூமியின் கடக ரேகை, மகர ரேகை இடையே சென்று வருவது போன்று நிகழ்வுகள் அமைகின்றன.

பூமியின் மீது சூரியக் கதிர்கள் விழும் கோணத்தைப் பொறுத்து இவ்வுலகில் தட்பவெப்ப நிலை மாறிக் கொண்டே வரும். அதன் அடிப்படையில் பண்டைத் தமிழர்கள் காலங்களை ஆறு வகைப்படுத்தினர். இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என ஆறு வகைப் படுத்தினர்.

இளவேனில் என்பது தை – மாசி மாதங்கள்; முதுவேனில் பங்குனி – சித்திரை மாதங்கள்; கார்காலம் வைகாசி – ஆனி மாதங்கள்; முன்பனிக் காலம் புரட்டாசி – ஐப்பசி மாதங்கள்; பின் பனிக்காலம் கார்த்திகை – மார்கழி மாதங்கள்.

தை மாதம் முதல் நாள் சூரியன் மகர ரேகையிலிருந்து வடக்கு நோக்கிய பயணத்தைத் தொடங்கும். அந்த நாளே தமிழ்நாட்டில் பொங்கல் திருநாளாகக் கொண்டாடப்படுகிறது. இந்தியாவின் மற்ற பகுதிகளில் மகர சங்கராந்தி என்ற பெயரில் கொண்டாடப்படுகிறது.

சூரியன் பூமத்திய ரேகைக்கு வரும் நாள் மார்ச் மாதம் 21 மற்றும் செப்டம்பர் மாதம் 21. மார்ச் 21–ஆம் நாள் பங்குனி மாதம் ஏழாம் நாளாக





இருக்கும். செப்டம்பர் 21–ஆம் நாள் புரட்டாசி மாதம் 4–5 நாளாக இருக்கும்.

எனவே, சூரியன் பூமத்திய ரேகையில் பயணத்தைத் தொடங்கும் நாளை வருடத்தின் முதல் நாளாகவோ அல்லது மாதத்தின் முதல் நாளாகவோ கொள்ள இயலாது.

இந்தியக் கலாச்சாரத்தின்படி, ஒரு நாளின் தொடக்கம் பகல் பொழுதின் தொடக்கம்தான். ஐரோப்பியர்களுக்கு நாளின் தொடக்கம் நடு இரவு. இந்தியக் கலாச்சாரத்தின்படி சூரியன் கிழக்கே உதித்து, மேலே சென்று மேற்கில் மறைவது வரையிலான பகல் பொழுது நாளின் முதற் பகுதி. மேற்கே மறைந்த சூரியன் மீண்டும் கிழக்கே உதிக்கும் வரையிலான இராக் காலம் நாளின் இரண்டாம் பகுதி.

ஒரு நாளின் தொடக்கமோ, மாதத்தின் தொடக்கமோ, வருடத்தின் தொடக்கமோ காலையில்தான் வரும். நாளின் நடுவிலோ, இரவின் நடுவிலோ இருக்க இயலாது.

வருடத்தின் தொடக்கம் மகிழ்ச்சியுடனும் கொண்டாடப்படுகிறது. முற்காலத்தில் தமிழர்கள் விவசாயத்தின் பலனை அடைந்து வரும் நாட்களில் மனநிறைவுடன் இருப்பர்; அப்போதுதான் மனதில் மகிழ்ச்சியுடன் விழாக் கொண்டாட இயலும். அதாவது அறுவடை முடிந்து விவசாய வேலை குறைவாக இருக்கும் நாள்களே கொண்டாடத் தகுந்த நாள்கள்.

விவசாயத்தில் நல்ல மகசூல் கிடைத்த பின் அதற்குக் காரணமான சூரியனுக்கு நன்றி பாராட்டும் வகையில் விழாவாகக் கொண்டாடும் பழக்கம் ஏற்பட்டிருக்கலாம். இவை அனைத்தும் தை மாதம் முதல் நாளுடன் ஒத்துப் போகும்.

தமிழகத்தின் பொங்கல் திருநாளும், வடவர்களின் மகர சங்கராந்தியும் ஒன்றாகவே இருப்பதால், வருடத்தின் தொடக்கம் அந்த நாளாகவே இருந்திருக்க வாய்ப்புண்டு. அதாவது தை மாத முதல் நாளையே வருடத்தின் முதல் நாளாக, புத்தாண்டாகக் கருதுவதற்குக் காரணங்கள் அதிகமாகவே காணப்படுகின்றன.

சித்திரை மாத முதல் நாளுக்கு இதுபோன்று இயற்கையுடன் தொடர்புடைய அல்லது சூரிய ஓட்டத்துடன் தொடர்புடைய எந்தக் காரணியும் காணப்படவில்லை.

இக்கருத்திற்கு ஒப்பளிப்பது போல 'மனு தர்ம சாஸ்திரத்தில்' முதல் அத்தியாயத்தில் 67–ஆம் சுலோகம் காணப்படுகிறது.

"மனிதர்களின் பன்னிரண்டு மாதம் கூடிய ஒரு வருடம் தேவர்களுக்கு ஒரு ராப்பகல். அதில் தை மாதம் முதல் ஆனி மாதம் வரையிலும் உத்தராயணமாகிய இந்த ஆறு மாதங்களும் பகல். ஆடி மாதம் முதல் மார்கழி மாதம் வரையில் தக்ஷிணாயணமாகிய இந்த ஆறு மாதங்களும் இரவு."

அதாவது தேவர்களின் பகல் பொழுதின் தொடக்கம் தை மாதம் முதல் நாள். இரவுப் பொழுதின் தொடக்கம் ஆடி மாதம் முதல் நாள். ஒரு நாளின் தொடக்கம் பகல் பொழுதின் தொடக்கமே. தேவர்களின் ஒரு நாளே மனிதர்களின் ஒரு வருடம்.

எனவே 'தேவர்களின்' பகல் பொழுதின் தொடக்கம் 'தை' மாத முதல் நாள் எனவும், இது மகர சங்கராந்தி என வடநாட்டிலும் 'பைசாகி' என்று பஞ்சாப் பகுதியிலும் குறிப்பிடப்படுகிறது.

சூரியன் வடக்கு நோக்கிப் பயணிப்பதை சமஸ்கிருதத்தில் 'உத்திர அயனம்' அல்லது 'உத்தராயணம்' என்று சொல்லப்படுகிறது.



வடக்கு நோக்கிப் பயணிக்கும் சூரியன் ஆடி மாதம் முதல் நாள் கடக ரேகையிலிருந்து தெற்கு நோக்கிப் பயணிக்கத் தொடங்கும். அது 'தக்ஷிணாயணம்.' தெற்கு நோக்கிய பயணம் என்று அறியப்படுகிறது. வடக்கு நோக்கிய பயணம் ஆறு மாதங்கள், தெற்கு நோக்கிய பயணம் ஆறு மாதங்கள்.

ஆக, ஒரு வருடத்தில் சூரியன் மகர ரேகையிலிருந்து கடக ரேகைக் குச் சென்று மீண்டும் மகரரேகைக்கு வந்து விடுகிறது. இக்காலமே ஒரு வரு டம் ஆகும்.

எனவே, வருடத்தின் தொடக்கம் ஒன்று சூரியனின் வடக்கு நோக்கிய பயணத்தின் தொடக்கமாக இருக்க லாம். அல்லது தெற்கு நோக்கிய பய ணத்தின் தொடக்கமாக இருக்கலாம்.

தெற்கு நோக்கிய பயணத்தின் தொடக்கம் என்றால் ஆடி மாதம் முதல் நாளாக இருக்கும். வடக்கு நோக்கிய பயணத்தின் முதல் நாள் என்றால் தை மாதம் முதல் நாளாக இருக்கும்.

எனவே, வருடத்தின் முதல் நாள் அல்லது புத்தாண்டு நன்நாள் ஒன்று ஆடிமாத முதல் நாளாகவோ அல்லது தை மாத முதல் நாளாகவோதான் இருக்க முடியும்.

ஆகவே, மனிதர்களின் ஆண்டின் தொடக்கமானது தேவர்களின் காலைப் பொழுதின் தொடக்க மாகவே இருக்க வேண்டும்.

எனவே, இயற்கையுடன் இயைந்து வாழும் புத்தாண்டுத் தொடக்கம் தை மாத முதல் நாள்தான் என்ற முடிவுக்கே வர இயலும்.

ஆகவே, தை மாத முதல் நாளே தமிழ்ப் புத்தாண்டின் தொடக்கம் என்பதை அறுதியிட்டுக் கூறலாம்.

சித்திரை மாதத்து முதல் நாளுக்கும், சூரியனின் பயணத்திற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. சித்திரை முதல் நாளில் சூரியன் பூமத்திய ரேகைக்கும் கடக ரேகைக்கும் இடை யில் பயணித்துக் கொண்டிருக்கும். அதாவது உத்தராயணக் காலத்தின் இடைப் பகுதியாக இருக்கும்.

இயற்கையுடனும் சூரியனின் ஓட்டத்துடனும் இணைத்துப் பார்க்கும்போது, புத்தாண்டு தை மாத முதல் நாள்தான் என்பது புலனாகும். இயற்கையுடன் இணைந்து பயணிக் கும் தமிழர்களின் புத்தாண்டு அதா வது தமிழ்ப் புத்தாண்டு தை மாத முதல் நாள்தான்.

●

கட்டுரை



# பேரா. இரா. மதிவாணன்

# சிந்துவெளி நாகரிகம் யாருக்குத் தடுமாற்றம்?

சிந்துவெளி நாகரிகம், திராவிட நாகரிகம் என்று 1925 கால அளவிலேயே ஜான் மார்சல் நிறுவிக் காட்டினார். இது ஆரிய நாகரிகம் என்பதற்கான சான்றுகள் எவையும் இல்லை என்று ரோமிலா தாப்பர் கூறினார். நாரசோவ் தலைமையில் அமைந்த சோவியத் ஆராய்ச்சிக் குழுவினர் எழுத்தடுக்குக் கணக்கீட்டின்படி கணிப்பொறி வாயிலாகச் சொற்கட்டுகளை ஆராய்ந்து, உலக மொழிக் குடும்பங்களில் சிந்துவெளி முத்திரைகளில் உள்ள சொற்கட்டுகள் திராவிட மொழிக் குடும்பத்துக்கே உரியவை என்று அறிவியல் வழியாக உலக அறிஞர்களுக்குத் தெரிவித்தார்.

இது திராவிட நாகரிகமா என்னும் ஐயம் அறிஞர் ர. பூங்குன்றனாருக்கு எப்படித் தோன்றியது? யாருக்கும் இல்லாத தடுமாற்றம் இவருக்கு எப்படி வந்தது?

வீட்டைச் சாணத்தால் மெழுகுவது, கோலம் போடுவது, தாயக் கட்டம் ஆடுவது, புலி வேடம் ஆடுவது, தாய்த் தெய்வ வழிபாடு, நெற்றியில் தங்கத் தகடு கட்டுதல், தங்கத்தை எடையிடும் எடைக் கற்கள் தமிழ் நாட்டிலும் சிந்துவெளியிலும் ஒரே அளவினதாக இருத்தல், கோட்டை வாயிலில் அரைவட்ட வடிவான அகழி அமைத்தல் முதலியவை தமிழர் நாகரிக ஒற்றுமையைக் காட்டவில்லையா?

ரோமிலா தாப்பர் இந்துத்துவக் கொள்கையாளரின் எதிர்ப்புகளுக்கே அஞ்சாதவர். புராணச் செய்திகளை வரலாறாக்க முயன்றவர்களை எதிர்த்து, கேள்வி கேட்கலாமா, கேள்வி கேட்கக் கூடாதா? இதுதான் என்னுடைய கேள்வி என்று ஆணித்தரமாகப் பேசியவர். அவரிடம் எந்தத் தடுமாற்றமும் இருந்ததில்லை. எகிப்து எழுத்துகளைப் படிப்பதற்கு முன்பே அந்த நாகரிகத்தை எகிப்திய நாகரிகம் என்று உலகம் ஒப்புக் கொண்டது. எனவே, எழுத்தைப் படித்த பிறகுதான் நாகரிகத்தை அறிய வேண்டும் என்பதில்லை.

சிந்துவெளி எழுத்து ஏன் படிக்கப் படவில்லை? என்பதற்கான காரணத்தை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். உலக மொழி எழுத்துகள் எல்லாம் பட எழுத்துகளிலிருந்து நேரடியாகத் தனி எழுத்துகளானவை. M என்ற ஆங்கில எழுத்து நீரலை போன்ற வடிவுடைய படம். பாபிலோனிய மொழியில் தண்ணீரை மேம் என்பார்கள். அதனால் இந்த ஆங்கில எழுத்துக்கு எம் என்னும்



ஒலிப்பு தரப்பட்டது. பட எழுத்து தனி எழுத்து ஆனதற்கு இது தக்க சான்றாகும்.

சிந்துவெளி எழுத்து பட எழுத்தி லிருந்து தனி எழுத்து ஆகாமல், அசை எழுத்து நிலைக்குப் போய்விட்டது. இதனை, சிலபிக் எழுத்து என்று ஆராய்ச்சியாளர் கூறினர். தமிழில் நேரசை, நிரையசை எனப் பொருள் படுவதே அசை எழுத்தாகும்.

இந்த உண்மை தெரியாததால், அசுகோ பர்போலா, ஐராவதம் மகாதேவன் முதலிய அறிஞர்கள் பட எழுத்தாகவும், கருத்து எழுத்தாகவும் படிக்க முயன்று தோல்வியுற்றனர். சிந்துவெளி எழுத்து இந்திய எழுத்து களுக்கு முன்னோடி. இந்திய எழுத்து கள் அனைத்தும் இடமிருந்து வலமாக எழுதப்படுபவை. சிந்துவெளி எழுத்து வலமிருந்து படிக்க வேண்டும் என் னும் தவறான கொள்கையால், யாரும் அதனைப் படிக்க முடியவில்லை. சிந்துவெளி மக்கள் வலமிருந்து இட மாக எழுதியிருந்தால், அதனை திடீ ரென இடமிருந்து வலமாக எழுதும் முறையாக மாற்றியிருக்க முடியாது, எழுதும் திசையை மாற்றிக் கொண்ட மொழி உலகில் எதுவும் இல்லை.

சிந்துவெளி நாகரிகம் மறைந்த பிறகு கி.மு. 1400 அளவில் வட செமித்திக் மொழி பேசுவோர் மட்டும் வலமிருந்து இடமாக எழுதும் அரா பிய முறையை அறிமுகப்படுத்தினர்.

எனவே, சிந்துவெளி நாகரிக காலத்தில், உலகில் எந்த மொழியும் வலமிருந்து இடமாக எழுதப்பட வில்லை என்பதை டாபுல் ஆப்பர் என்பவர் எழுதிய ‘வாய்சஸ் இன் ஸ்டோன்’ என்னும் ஆங்கில நூலா லும் அறியலாம்.

கடந்த 30 ஆண்டுகளாக நான் சிந்துவெளி எழுத்துகளை அசை எழுத் துகளாகப் படித்து, அம்முத் திரைகளில் வணிகர்களின் பெயர்கள் தமிழில் எழுதப்பட்டிருப்பதை 6 ஆங்கில நூல்களிலும் 4 தமிழ் நூல் களிலும் வெளிப்படுத்தி இருக்கிறேன்.

சிந்துவெளி எழுத்தும் அதிலிருந்து ஐந்திரனார் காலத்தில் தமிழ் பிராமி என்னும் தமிழி எழுத்தும் உருவாகி யதையும் தமிழி எழுத்துத் தோன்றிய காலத்தில், 2 எழுத்துகளையும் கலந்து எழுதிய எழுத்துச் சான்றுகள் தமிழ் நாட்டில் கிடைத்திருப்பதையும் நான் சுட்டிக் காட்டி இருக்கிறேன்.

கடந்த 10 ஆண்டுகளாகப் பல்கலைக் கழக மாணவர்களுக்குச் சிந்துவெளி எழுத்தையும், தமிழி எழுத் தையும் கற்பித்துச் சான்றிதழ் வழங்கி யுள்ளேன். இதுவரை 500 மாணவர் கள் சிந்துவெளி எழுத்துகளைப் படிக் கும் திறன் பெற்றுள்ளனர். அவர் களுள் சேஷாத்திரி என்னும் மாணவர் உலக அறிஞர்களோடு இணைய வாயி லாக வாதம் புரிந்தார். ஐராவதம் மகா தேவன் அவர்களோடும் வாதம் செய்தார்.

அமெரிக்காவில் பார்மர் என்னும் அறிஞர் சிந்துவெளி எழுத்துகள் கிறுக்கல் கோடுகள் என்று கூறியதை அறிந்து, அவற்றை முழுதும் தமிழாக அறிஞர் மதிவாணன் படித்திருக்கிறார் என்று தெரிவித்தார். அப்படியானால், உங்கள் நாட்டில் எத்தனை பேர் அதை ஏற்றுக் கொண்டார்கள் என்று பார்மர் விடையளித்தார். படித்தால் தான் ஏற்றுக் கொள்ள முடியும் என்று சேஷாத்திரி மறுமொழி கூறினார்.

அறிஞர் பூங்குன்றன் போன்றோர் சிந்துவெளி எழுத்தை யாராவது இந்தியாவில் படித்திருந்தால், அதை வெளிநாட்டார் ஏற்றுக் கொண்டார் களா எனக் கேட்கிறார்கள். சிந்து வெளி எழுத்தையும் நாகரிகத்தையும் ஆராய்வதற்கு என்று இந்தியாவில் எந்தப் பல்கலைக் கழகத்திலும் தனித்த துறை ஏற்படுத்தப்படவில்லை என்பது மாபெரும் குறையாகும்.

அருட்செல்வர் பொள்ளாச்சி நா. மகாலிங்கம் ஐயா அவர்கள், சென்னைப் பல்கலைக் கழகத்திலும்,

தமிழ்ப் பல்கலைக் கழகத்திலும் சிந்துவெளி நாகரிக ஆய்வுக்குத் தனித்த துறை அல்லது இருக்கை உண்டாக்குவதற்கு இசைந்தால், தான் ஒரு கோடி ரூபாய் தருவதாகத் தெரிவித்தார். எந்தப் பல்கலைக் கழகமும் முன்வரவில்லை. என்றாலும், நான் 5000 சிந்துவெளி எழுத்துச் சான்றுகளையும் படித்துக் காட்டியுள்ளேன்.

இருமொழி எழுத்துச் சான்று கிடைத்தால்தான் சிந்துவெளி எழுத்தைப் படிக்க முடியும் என்னும் கருத்துக்கு வலிவு சேர்ப்பது போல், யாழ்ப்பாணத்துக்கு அருகில் ஆனைக்கோட்டை என்னும் இடத்தில் பேராசிரியர் இந்திரபாலரால் அகழ்ந்தெடுக்கப்பட்ட வெண்கல முத்திரையைக் கோவேத – கோவேந்தன் என்னும் தமிழ்ச் சொல் இருப்பதை அறிஞர் பூங்குன்றன் ஒப்புக் கொண்டுள்ளார்.

நான் அதைத் தீவுகோ எனப் படித்துக் காட்டினேன். அப்படியானால், சிந்துவெளி எழுத்தை யாரும் படிக்கவில்லை என்று ஏன் கூறுகிறார் என்று தெரியவில்லை. என் நூல்களை முழுமையாகப் படித்த பிறகு நிறை குறைகளைச் சொல்லலாம். நான் படித்த முறை சரிதான் என்பதை நானே சரிபார்த்துவிட்டேன்.

அவ்வை என்பதற்கு ஆண்பாலான அவ்வன் என்னும் ஒரு சொல்லை சிந்துவெளி முத்திரையில் கண்டேன். அதே சொல் பாண்டிச்சேரி பல்கலைக் கழகப் பேராசிரியர் இராசன் என்பவர் கண்டுபிடித்த புலிமான்கோம்பையில் உள்ள நடுகல்லிலும் அவ்வன் பதவன் எனப் பொறிக்கப்பட்டிருப்பதைக் கண்டேன்.

எனவே, அவ்வன் என்னும் சிந்துவெளிப் பெயர்ச்சொல் சரியாகத்தான் என்னால் படிக்கப்பட்டிருக்கிறது என முடிவு செய்து கொண்டேன். திங்களன் பண்ணப்பன் என்னும் சொல்லை சிந்துவெளி முத்திரையில் படித்தேன். இந்து ஆங்கில நாளிதழில் மராட்டிய மாநிலத்தைச் சார்ந்த தடகளப் போட்டி வீரன் ஒருவனின் பெயர் திங்களய்யா என்று இருப்பதைக் கண்டேன்.


ஐராவதம் மகாதேவன்


ரா. பூங்குன்றன்


ரோமிலா தாப்பர்


நா. மகாலிங்கம்

எனவே, திங்களன் என்னும் சிந்துவெளிச் சொல் இன்றும் இயற்பெயராக நீடிக்கிறது என்பதையும் நான் படித்தது சரிதான் என்பதையும் அறிந்து கொண்டேன்.

எகிப்திய எழுத்துச் சான்றுகளை சம்போலியன் என்னும் ஆசிரியர் முழுதும் படித்துக் காட்டினார். அவர் படித்துக் காட்டியதை 50 ஆண்டுகளுக்குப் பிறகுதான் உலகம் ஒப்புக் கொண்டது. நான் படித்ததையும், உலகம் ஒப்புக் கொள்ளும் என்னும் நம்பிக்கை எனக்கு உண்டு. எனவே, சிந்துவெளி நாகரிகம் யாருடையது என்னும் தடுமாற்றம் யாருக்கும் வர வேண்டியதில்லை. ●

ஆர்னிகா நாசர்

சிறுகதை



# வாசியுங்கள் வாரிசுகளே!

எழுத்தாளர் நூருல் ஆலமின் நாற்பதாம் நாள் பாத்தியா முடிந்திருந் தது. பாத்தியா ஓதிய அறையில் மல்லி கைப்பூ பந்தல் அமைக்கப்பட்டிருந்தது. பூக்கள் உதிர்ந்து கிடந்தன. புகைந்த ஊதுவத்தியின் எச்சங்கள் சுவ ரோரம் காணப்பட்டன.

இறந்துபோன எழுத்தாள ரின் அன்பு மனைவி ஸஹீரா அக்தா இத்தாவில் அமர்ந் திருந்தாள். ஆலமின் மகள், மகன் மற்றும் அவர்களது குடும்பத்தினர் வீட்டின் முன்னறையில் அமர்ந்திருந் தனர். வீட்டின் அழைப்பு மணி ஒலித்தது.

மகன் பஹ்மி கதீம் எழுந்து போய்க் கதவைத் திறந்துவிட்டான். அட்வகேட் முகமது அஹ்ஸன் நின்றிருந் தார்.

"அஸ்ஸலாமு அலைக் கும்!"

"வஅலைக்கும் ஸலாம்!"

"உள்ளே வரலாமா?"

"வாங்க அட்வகேட்!"

சோபாவில் வந்து அமர்ந் தார் அட்வகேட். எழுத்தாள ரின் மகள் நயாப் சுல்தானா வைப் பார்த்து முறுவலித்து அழகிய முகமன் பரிமாறிக் கொண்டார்.



உயிலைப் படித்து முடித்ததும் நயாப் சுல்தானா தாம்தூம் என்று குதித்தாள். "செத்த பிறகும் எங்கப்பன் சட்டாம்பிள்ளை வேலை பாத்திருக்கான். என் புருஷன் புள்ளகுட்டிகளைக் கவனிப்பேனா, இந்தாளு கிறுக்கல்களைப் படிச்சுத் தொலைப்பேனா?"

"சூடா டீ குடிக்கிறீங்களா அட்வ கேட்?"

"உங்க தந்தையாரின் உயிலைப் படிச்சு முடிச்சிட்டுக் குடிக்கிறேன். உங்க தந்தையாரின் சொத்துகளைப் பட்டியலிடுகிறேன். உங்க தந் தையாரின் 40 தொகுதி இஸ்லாமிய நீதிக்கதைகளை மாநில அரசு அரசுடமை பண்ணிக் கொடுத்த ரூ. 1.5 கோடி பணம். முஸ்லிம் அமைப்புகளும் தொகுப்பு களை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க வெளிநாட்டுப் பதிப்பகங்களும் கொடுத்த பணம் ரூ. 1.5 கோடி. இது தவிர ரூ. 40 லட்சம் பெறு மானமுள்ள சென்னை பிளாட்." பட்டியல் ஒப்பித் தார்.

"உங்க தந்தையார் மொத்தச் சொத்தையும் மூன்றாகப் பிரித்து மனைவி, மகன், மகளுக்கு அளித்துள்ளார். மனைவியின் பங்கு அவரது கண்ணுக்குப் பின் மகனுக் கும், மகளுக்கும் சரி பாதி யாய்ப் பிரித்துக் கொடுக்கக் கூறியுள்ளார்!"

சுல்தானாவும் கதீமும் துள்ளிக் குதித்தனர்!

"அவசரப்படாதீங்க. உங்கள் தந்தையார் உயிலில் ஒரு

முக்கியமான நிபந்தனையை விதித்தார். அதனை நிறைவேற்றினால்தான் உங்கள் இருவருக்கும் பங்கு கிடைக்கும்!"

"அதென்ன நிபந்தனை? இமயமலை ஏறி எங்கத்தா உருவம் பொறித்த கொடியை நாட்ட வேண்டுமா?" கிண்டலித்தாள் சுல்தானா.

"எங்கத்தா ஒரு எகனைக்கு மொகனைக்குப் பேர்வழி. நேரடியா ஊட்ட மாட்டார். தலைக்குப் பின்னாடி கையைச் சுத்தித்தான் ஊட்டுவார். நிபந்தனையைச் சொல்லுங்கள்!"

"உங்கத்தாவின் முழு உயிலையும் வாசித்துக் காட்டிவிடுகிறேன்!"

கதீமும் சுல்தானாவும் முனைப்பாயினர்.

"உலகத்தின் அனைத்து ஜீவராசிகள் மீதும் சாந்தியும் சமாதானமும் நிலவட்டும். மதுரையில் பிறந்து திண்டுக்கல்லில் வளர்ந்து சிதம்பரத்தில் வாழ்ந்தேன். எனக்கு மதுரையும் சிதம்பரமும் பிடிக்கும் அளவுக்குத் திண்டுக்கல் பிடித்ததில்லை. எப்போதுமே என்னை மதுரைக்காரனாகத்தான் உணர்ந்திருக்கிறேன். ஆறு வயதிலிருந்து பதினெட்டு வயதுவரை இலக்கியம் வாசித்து நல்ல கதை சொல்லியாகத் திகழ்ந்தேன். அதன்பின் எழுத்து வடிவத்திற்குத் தாவினேன். அதன்பின் 42 வருடம் வெகுஜன எழுத்தாளனாக விளங்கினேன்.

எனது வெற்றிக்கு முன் சாரதியாகவும் வெற்றிக்குப் பின்னால் கிரியா ஊக்கியாகவும் என் மனைவியே இருந்தாள். குடும்பப் பணி, இலக்கியப் பணியில் பங்கேற்புத் தவிர, இரு அழகிய குழந்தைகளையும் பெற்றுக் கொடுத்தாள். மகள் மகனைப் படிக்க வைத்துப் பணிக்கு அனுப்பித் திருமணம் செய்து கொடுத்துவிட்டேன். பேரன் பேத்திகளும் வந்தாயிற்று.

எனது மரணப் படுக்கையில் நான் வாழ்ந்த வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கிறேன்.

வாழ்ந்த வாழ்க்கையில் எதாவது மனக்குறை இருக்கிறதா?

இருக்கிறது. அதென்ன என்று தானே கேட்கிறீர்கள்?

இதுவரை 2000 சமூகச் சிறுகதைகள், 200 விஞ்ஞானச் சிறுகதைகள், 250 நாவல்கள், 1000 திருமறை நபிமொழி இஸ்லாமிய நீதிக்கதைகள் எழுதிவிட்டேன். எனக்குக் கோடிக்கணக்கான வாசக, வாசகியர் இருக்கின்றனர். தமிழ் நாட்டில் ஒரு House hold பெயராக எனது பெயர் துலங்குகிறது. மதநல்லிணக்கத்தையும் தேசிய ஒருமைப்பாட்டையும் எனது பெரும்பாலான கதைகள் வலியுறுத்துகின்றன. உலகின் எந்த மூலையில் வாசிக்கும் தமிழ் வாசிப்போருக்கும் எனது எழுத்து பரிச்சயம். ஆண் – பெண் உறவுச் சிக்கல்களைக் களைய ஆலோசனைகள் வழங்கி அவை இருபது தொகுதிகளாக வெளிவந்துள்ளன.

இத்தனை பெருமைகள் இருந்தும் என்ன பயன்? நான் வாசித்துக் காட்டிய கதைகளைத் தவிர, மீதி அனைத்துக் கதைகளையும் என் மகளும் மகனும் வாசித்ததில்லை.

பல தடவை படியுங்கள்... படியுங்கள் என இறைஞ்சி இருக்கிறேன். நிர்தாட்சண்யமாக மறுத்துவிட்டனர். சில நேரங்களில் எட்டுப் பக்கக் கதையைக் கொடுத்தால் முதல் பக்கம் மட்டும் படித்துவிட்டுப் போட்டுவிடுவர்.

பல சினிமாக்கள் என் கதைகளைக் காப்பியடித்து எடுக்கப்பட்டிருக்கின்றன. திருடிய சினிமா டைரக்டர்கள் மீது என் மகனுக்கும் மகளுக்கும் கோபம் வரவில்லை. காரணம் கதையைப் படித்திருந்தால்தானே, அது என்ன விதத்தில் திருடப்பட்டிருக்கிறது என்பதனை அவர்கள் உணர முடியும்.

ஆகையால், நான் ஒரு முடிவுக்கு வந்தேன். ஒரு காரியத்தைக் கட்டாயப் படுத்திச் செய்யச் சொல்வது சரியல்ல தான். ஆனால் இதனைத் தவிர எனக்கு வேறு வழி தெரியவில்லை.

*கீழே நான் எழுதிய கதைகளின் முழுப் பட்டியலும், அவை எந்தெந்தத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளன என்பதையும் குறிப்பிட்டுள்ளேன்.*

*என் கதைகள் அனைத்தையும் என் மகள், மகன் வாசித்தால்தான் அவர்களுக்கு என் சொத்தில் பங்கு. கதைகள் முழுமையையும் வாசிக்க, உயிலின் தேதியிலிருந்து மூன்று வருடங்கள் அவகாசம் தருகிறேன்.*

*நீங்கள் என் கதையைப் படித்ததற்கான ஆதாரம் தேவை.*

*அட்வகேட் 25 சிறுகதைகளைக் கொடுத்து ஒரு வாரம் அவகாசம் தருவார். எட்டாம் நாள் உங்களைத் தனித் தனியாக அழைத்துக் கதைத் தலைப்பினைச் சொல்லுவார். நீங்கள் படித்த கதையின் சுருக்கத்தைக் கூற வேண்டும்.*

*நீங்கள் படித்த கதைகளைக் கேட்டு 'டிக்' செய்து கொள்வார் அட்வகேட்.*

*கதையைப் பிறர் வாசிக்கச் சொல்லி நீங்கள் கேட்கக் கூடாது. மொத்தத்தில் கதை வாசிப்பில் குறுக்குவழி கூடாது. உங்களை இறைவன் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதை நினைவில் வையுங்கள்.*

*முதல் வருடம் சிறுகதைகள் மொத்தமும் பற்றிய 1000 அப்ஜக்டிவ் கொஸ்டின்கள் அடங்கிய தேர்வு வைப்பார் அட்வகேட். குறைந்தபட்சம் நீங்கள் 50 மார்க் எடுக்க வேண்டும்.*

*இரண்டாம் வருடம் நாவல்கள் மொத்தமும் பற்றிய 100 ஆப்ஜக்டிவ் கொஸ்டின்கள் அடங்கிய தேர்வு வைப்பார் அட்வகேட். குறைந்தபட்சம் நீங்கள் தலா 50 மார்க் எடுக்க வேண்டும்.*

*மூன்றாம் வருடம் விரிவான பதில்கள் தேவைப்படும் கேள்விகள் இருபது கொடுக்கப்படும். அதனை எழுதி தலா அறுபது அறுபது மார்க் எடுக்க வேண்டும் நீங்கள்.*

*யுஜிஸி நெட் எக்ஸாம் போலப் பரிட்சை வைத்திருக்கிறானே அப்பன் என்று என்மீது கோபப்படாதீர்கள். எனக்குக் கோடி வாசகர்கள் இருக்கலாம். ஆனால் மகனும் மகளும் வாசகர்களாய் இருப்பது ஸ்பெஷலோ ஸ்பெஷல் இல்லையா? சீர்திருத்தங்கள் வீட்டிலிருந்தேதானே ஆரம்பிக்க வேண்டும் செல்லங்களா?*

*நீங்கள் இருவரும் என் கதைகள் முழுவதையும் படித்துவிட்டு 'எங்கப்பன் பீற்றின அளவுக்குக் கதைகள் தரமாய் எழுதவில்லை. எல்லாம் குப்பை' என விமர்சனம் பண்ணினாலும் சந்தோஷமே.*

*மூன்று வருடங்களுக்குப் பின் நீங்கள் இருவரும் என்னுடைய கதைகளை முழுமையாகப் படித்துவிட்டீர்கள் எனச் சான்றுரைத்து அத்தாட்சிக் கடிதம் கொடுப்பார் அட்வகேட். அதன் பின் சொத்து உங்கள் கைகளுக்கு வந்துவிடும்.*

*எனது மொத்தப் படைப்புகளைப் பற்றி நான்கு வரி விமர்சனக் கடிதம் எழுதி, நான் புதைக்கப்பட்டிருக்கும் கபர் பக்கம் வீசி விடுங்கள்.*

*மூன்று வருடம் என்னுடைய கதைகளை வாசிப்பதுடன் நின்று விடாதீர்கள். இன்னும் பல படைப்பாளிகளை வாசிக்க ஆரம்பியுங்கள். தகப்பன் படைப்புகளையும் பிறர் படைப்புகளையும் ஒப்பிட்டுப் பார்க்கத் தொடர் வாசிப்பு உதவும். நான் எழுதியது போல் உயில் நீங்கள் எழுதத் தேவைப்படாமல் சிறு வயதிலிருந்தே உங்கள் குழந்தைகளுக்கு வாசிப்புப் பழக்கத்தை ஏற்படுத்துங்கள்.*

*என்னைப் போல என் குழந்தைகள் கதை எழுதவில்லையே என்கிற வருத்தம் எனக்குண்டு. மகனே! நீ பல் மருத்துவராக இருக்கிறாய். கதைகள் எழுதாவிட்டாலும் பரவாயில்லை. பல் மருத்துவம் சம்பந்தப்பட்ட தமிழ் நூல்கள் எழுதிப் பிரபலமாகு. என்னுடைய எழுத்து ஜீன் உனக்குள் கட்டாயம் ஒளிந்திருக்கும். இதய ஜன்னலைத் திறந்துவை. உனது*

எழுத்துப் பறவை கூண்டை விட்டு வெளியே வந்து சிறகடிக்கும்.

கட்டாயப்படுத்தி உங்களைக் கதைப் படிக்கவைத்தத் தந்தையை மன்னித்து விடுங்கள். கதையும் படிக்க மாட்டோம், சொத்தும் வேண்டாம் என நீங்கள் முடி வெடுத்தால், சொத்தினைக் கையாளும் முழு உரிமையை என் பிரிய மனைவிக்கு அளிக்கிறேன்.

கதை வாசித்துச் சொத்துப் பிரிக்கப் பட்டால், அட்வகேட்டுக்கு சர்வீஸ் சார்ஜ் 5 சதவீதம் கொடுத்துவிடுங்கள்.

முதலில் நன்னடத்தையைச் சார்ந் திருங்கள். அதன்பின் மதத்தைச் சாருங்கள்.

மறுமை நாளில் சந்திப்போம். வஸ்ஸலாம்.”

இறைவனை நோக்கிப் பறந்துவிட்ட ஆன்மிகப் பறவை – நூருல் ஆலம் முறுவலித்தான்.

உயிலைப் படித்து முடித்ததும் நயாப் சுல்தானா தாம்தூம் என்று குதித்தாள். “செத்த பிறகும் எங்கப்பன் சட்டாம் பிள்ளை வேலை பாத்திருக்கான். என் புருஷன், புள்ளகுட்டிகளைக் கவனிப் பேனா, இந்தாளு கிறுக்கல்களைப் படிச்சுத் தொலைப்பேனா?”

பஹ்மி கதீம், “மூணு வருஷத்துக்கு டென்டிஸ்ட் வேலை ஹோகயாவா? எம்.டி.எஸ்ஸுக்குப் பிறகு பி.ஹெச்டி ரெண்டு மூணு வருஷத்துல பண்ணி முடிச்சிடலாம். முடிச்சிட்டா டீன் போஸ்ட், விசி போஸ்ட் கூடக் கிடைக் கும். என் பங்குப் பணத்தைவிடப் பல மடங்கு தொழில்ல சம்பாதிக்கலாம்.”

அட்வகேட் அரைமணி நேரம் காத் திருந்து, “அப்பாவின் நிபந்தனையை ஒத்துக்கிறதுன்னா இந்தத் தாள்ல ரெண்டு பேரும் கையெழுத்துப் போடுங்கள்!”

தயங்கித் தயங்கி இருவரும் கையெழுத்திட்டனர்.

**அ**டுத்த மூன்று வருடங்களில்...

வாராவாரம் சனிக்கிழமை மாலை ஆறு மணிக்குக் கதீமும் சுல்தானாவும் அட்வகேட் முன் கூடுவர். கதையின் தலைப்பை அட்வகேட் கூறுவார். முத லில் மகள் கதைச் சுருக்கம் கூறிவிட்டு அறையைவிட்டு வெளியேறுவாள். அதன்பின் மகன் கதைச் சுருக்கம் கூறுவான்.

முதலில் அசுவாரசியமாக இருந்த கதீமும் சுல்தானாவும் பாஸ்பரஸ் துண் டாகினர். கதையின் நிறைகுறைகளை ஆணித்தரமாக அலச ஆரம்பித்தனர்.

அட்வகேட்டுக்குக் கூட உற்சாகம் தொற்றிக் கொண்டது. “உங்கத்தா உமறுப்புலவர் போல. உமறுவின் குணங்கள் எல்லாம் உங்க தந்தைக்கும் உள்ளது. சீறாப்புராணத்துக்குச் சம மானதுதான். உங்கத்தாவின் நாற்பது தொகுதி இஸ்லாமிய நீதிக்கதைகள். ஆயிரம் ஆலிம்கள் செய்ய முடியாத பணியை ஒற்றை ஆள் செய்திருக்கிறார்.

மூன்று வருடம் தேர்வுகள் எழுதித் தேர்ச்சி பெற்றனர்; பஹ்மி கதீமும் நயாப் சுல்தானாவும். சொத்தைப் பிரித் துக் கொடுக்கத் தாளில் கையெழுத் திடச் சொன்னார் அட்வகேட்.

நூருல் ஆலமின் மகனும் மகளும் கையெழுத்திடாமல் பொங்கி அழு தனர். “எங்கத்தா தனது 42 வருட இலக் கிய வாழ்வில் பல உன்னதப் படைப் பிலக்கியங்களை உலக சமுதாயத்துக்கு வார்த்துவிட்டுப் போயிருக்கிறார். அவர் ஒரு வாழும் சரித்திரம். அவரது படைப்புகளைப் பிரசுரமான அந்தந்தக் காலகட்டத்தில் படிக்காமல், சொத்துக் காக மிகத் தாமதமாகப் படித்தோமே என்கிற குற்றஉணர்ச்சி எங்களுக்குள் மேலோங்குகிறது. இதுவரை அவரை எங்கள் தந்தையாக நேசித்தோம். இனி அவரை ஓர் உலகத்தரம் வாய்ந்த மெகா எழுத்தாளராக நேசிப்போம். இஸ்லா மிய நீதிக்கதைகளை வாசித்தவுடன் எங்களின் பணத்தாசை பறந்தோடி விட்டது. எங்களுக்குச் சொத்தில் பங்கு வேணாம்!”

அட்வகேட் சிரித்தார். பின் ஒரு தாளை எடுத்தார். “இது ரெண்டாவது



உயில். என் பிள்ளைகள் எனது படைப் புகளைப் படிக்க மறுத்தால், எனது நிபந்தனையை ரத்து செய்துவிட்டு, சொத்தை முதல் உயிலில் சொன்னது போல பாகம் பிரித்துக் கொடுத்து விடுங்கள். பாஸ் பண்ணின மாணாக் கன் மட்டுமல்ல, பாஸ் பண்ணாத மாணாக்கனும் ஆசிரியரின் நேசிப்புக்கு உரியவன்தான். நான் என் மனைவி மக்களை எனது எழுத்துக்குச் சமமாக நேசிக்கிறேன்” என்றிருந்தார் நூருல் ஆலம்.

“வக்கீலையும் வாசகனாக்கிவிட் டார் உங்கத்தா!” தி. ஜானகிராமன் நாவலை உயர்த்திக் காட்டினார் அட்வகேட்.

•



## திண்டுக்கல்லில்

# திரிசக்தி மகா சமஸ்தானம்

திண்டுக்கல் மலையடிவாரத்தில் உள்ள எல்லப்பட்டி – அஞ்சுகுழிப்பட்டி என்ற இடத்தில் திரிசக்தி மகா சமஸ்தான ஆசிரமம் உள்ளது. இந்த ஆசிரமத்தை சுவாமி பாலரிஷீஸ்வரானந்தா, யோகினி நாராயணி மாதாஜி ஆகிய இருவரும் நடத்தி வருகிறார்கள்.

இந்த ஆசிரமம் வெட்டி வேர், அறுகம்புல், நொச்சி, குப்பைமேனி, கருங்காலி, கற்பூரவல்லி, மருதாணி இலை முதலிய 108 மூலிகைகளால் மூலிகை விளக்கு, கொசு விரட்டி, சாம்பிராணி, பல்பொடி, குளியல் பொடி ஆகியவற்றைத் தயாரித்து வெளியிடுகின்றது.



சுவாமி
பாலரிஷீஸ்வரானந்தா



யோகினி
நாராயணி மாதாஜி

இவை அனைத்தும் சுற்றுப்புறச் சூழலுக்கு உகந்தவை. ஓம குண்டத்தின் பலன்களை இந்தப் பொருள்கள் அனைத்தும் நமக்குத் தருகின்றன. எந்திரத்தை உபயோகப் படுத்தாமல், கைகளாலேயே தயாரிக்கப்படுகின்றன. இன்னும் பல தயாரிப்புகளை சுவாமி பாலரிஷீஸ்வரானந்தா வெளியிட உள்ளார்.

யோகினி நாராயணி மாதாஜி ஆயுர்வேத மருத்துவர். **வர்ம சிகிச்சை வல்லுநர்.** இவர்கள் இருவரும் இணைந்து தங்கள் ஆன்மிகப் பணிகளை மருத்துவப் பணிகளாகவும் செய்து வருகின்றனர்.

போதிய விளம்பர வெளிச்சம் இந்தச் சுற்றுச் சூழல் சுதேசிவாதிகளுக்கு இன்னும் கிடைக்கவில்லை. வாசகர்கள் அவர்களுடைய தொலைபேசிகளில் தொடர்பு கொண்டு மேலதிகத் தகவல்களைப் பெறலாம்.

தொடர்புக்கு :
**சுவாமி பாலரிஷீஸ்வரானந்தா,**
எல்லப்பட்டி, அஞ்சுவழிப்பட்டி அஞ்சல், திண்டுக்கல் மாவட்டம். செல் : 87547 77011, 94873 01999.




விழாவில் காந்திஜியின் பொன்மொழிகள் அடங்கிய தொகுப்பைக் கல்லூரித் தலைவர் டாக்டர் பி.கே. கிருஷ்ணராஜ் வாணவராயர் வெளியிட, 'அமுதசுரபி' ஆசிரியர் டாக்டர் திருப்பூர் கிருஷ்ணன் பெற்றுக்கொண்டார். உடன் கல்லூரிச் செயலர் திரு. ம. பாலசுப்பிரமணியம், முதல்வர் முனைவர் பொ.மா. பழனிசாமி, பொருளாளர் திரு. சிவக்குமார் ஆகியோர்.

# பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரியில் காந்தியடிகளின் 150-ஆவது பிறந்தநாள் விழா!

பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரியில் காந்தியடிகளின் 150–ஆவது பிறந்தநாள் விழா, 27.2.2019 அன்று கொண்டாடப் பட்டது. சிறப்பு விருந்தினராக 'அமுதசுரபி' இதழின் ஆசிரியர் முனைவர் திருப்பூர் கிருஷ்ணன் அவர்கள் கலந்து கொண்டார்.

கல்லூரித் தலைவர் டாக்டர் பி.கே. கிருஷ்ணராஜ் வாணவராயர் அவர்கள் தலைமை தாங்கினார். கல்லூரிச் செயலர் திரு. ம. பால சுப்பிரமணியம், கல்லூரியின் பொரு ளாளர் திரு. சிவக்குமார் ஆகியோர் முன்னிலை வகித்தனர். கல்லூரி முதல்வர் முனைவர் பொ.மா. பழனி சாமி அவர்கள் வரவேற்புரை வழங் கினார்.

விழாவில் மகாத்மா காந்தியின் பொன்மொழிகள் அடங்கிய தொகுப் பைக் கல்லூரித் தலைவர் அவர்கள் வெளியிட்டார்.

மேலும் சட்டம், மருத்துவம், சமூக சேவை, சிறந்த பெண்மணி உள்ளிட்ட பல்வேறு துறைகளில் சாதனை புரிந்த 13 பேருக்கு **மகாத்மா காந்தி சமூக சேவை விருதுகள்** வழங்கப்பட்டன.

காந்தி விழாவை ஒட்டி நடை பெற்ற கட்டுரை மற்றும் பேச்சுப் போட்டிகளில் பங்கேற்ற மாணவர்கள் 27 பேருக்குப் பரிசுகள் வழங்கிச் சிறப்பிக்கப்பட்டது.

இவ்விழாவிற்கான ஏற்பாடுகளை, கல்லூரியின் வரலாற்றுத்துறைத் தலைவர் முனைவர் இரா. முத்துக் குமரன் அவர்கள் செய்திருந்தார். •




# அதிசய பானம்

# ‘மிராக்கிள்’

‘மிராக்கிள்’ பானம், சக்தி குழுமங்களின் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம் அவர்களால் உருவாக்கப்பட்டது. இந்தப் பானத்தை நாள்தோறும் நூற்றுக்கணக்கானோர் அருந்திப் பலனடைந்து வருகின்றனர். மேலும் பலர் இந்தப் பானத்தைப் பற்றியும், இதனை அருந்துவதால் உடலுக்கு ஏற்படும் நன்மைகள் பற்றியும் தொலைபேசி வாயிலாகக் கேட்டுத் தெளிவு பெறுகின்றனர். எனவே, மிராக்கிள் பானம் பற்றிப் பொதுவாகக் கேட்கப்படும் கேள்விகளுக்கு பதில்கள் வழங்கப்படுகின்றன.

**1. ‘மிராக்கிள்’ பெயர் வரக் காரணம்?**

‘மிராக்கிள்’ என்றாலே எளிதில் நடைபெறாத, ஆனால் எளிதில் நன்மையாக நடக்கக்கூடிய அதிசய நிகழ்வாகும். நோயின் தீவிரத்தால் ஏற்படும் உடல் உபாதைகளிலிருந்து எளிதாக மீண்டு வர இந்தப் பானம் உதவுவதால், இதற்கு ‘மிராக்கிள்’ என்ற பெயர் பொருத்தமானது.

**2. ‘மிராக்கிள்’ பானத்தில் சேர்க்கப்படும் பொருள்கள் யாவை?**

இதில் மிக முக்கியமாக சோயா லெசிதின், வைட்டமின் ‘சி’ (அங்கார்பிக் ஆசிட்) அதிக அளவும், லைசீன், புரோலின் முதலிய அமினோ அமிலங்களும், கால்சியம், பொட்டாசியம் மற்றும் வைட்டமின்கள், புரதம், கொழுப்பு, மாவுச்சத்துக்கள் அடங்கியுள்ளன.

**3. ‘மிராக்கிள்’ பானத்தில் சேரும் சோயா லெசிதின், வைட்டமின் ‘சி’ செயல்பாடுகள் என்னென்ன?**

லெசிதின் என்ற பொருள், உடலுக்கு நன்மை செய்யக்கூடிய பாஸ்போலிப்பிடு என்ற கொழுப்புப் பொருளாகும். இது உடலில் ஏற்படும் எல்.டி.எல். எனப்படும் கெட்ட கொலஸ்ட்ராலைக் குறைத்து உடல் எடை குறைய உதவுகிறது. முதியோர்க்கு ஏற்படும் அல்சீமர் என்ற நினைவு மறதியைப் போக்குகிறது. இருதய நோய், மாரடைப்பு முதலியவை வருவதைத் தடுக்கிறது.

வைட்டமின் ‘சி’ நோய் எதிர்ப்புச் சக்தியை அதிகப்படுத்துகிறது. கொடிய நோய்களான புற்றுநோய், எச்.ஐ.வி. பாதிப்பு மற்றும் தீராத நோய்களான நாட்பட்ட சளி, ஆறாத புண் முதலியவற்றைக் குணப்படுத்துகிறது.

இதில் உள்ள புரோலின், லைசின் முதலியவையும் மற்ற வைட்டமின்களும் உடலுக்குச் சக்தியைக் கொடுத்து உடல் பலவீனத்தைப் போக்குகின்றன.

**4. அப்படி என்றால் ‘மிராக்கிள்’ பானம் மருந்துப் பொருளா?**

மிராக்கிள் பானம் நோய்களுக்குச் சாப்பிடும் மருந்து அல்ல. இது ஓர் ஊட்டச்சத்துப் பானம் (Health drink). அனைவரும் இதனைப் பருகலாம்.

**5. யார் யார் இதனைப் பருகலாம்?**

இதைச் சிறியவர் முதல் பெரியவர் வரை அனைவரும் பருகலாம். நீடித்த நோய்வாய்ப்பட்டவர்கள் இதனை அருந்தும்போது, நோயின் வீரியம் குறைந்து புத்துணர்வு பெறலாம். நோயின்றி ஆரோக்கியமாக இருப்பவர்கள்கூட இதனை நாள்தோறும் பருகிவர உடல், மனம் புத்துணர்ச்சியுடனும், சுறுசுறுப்புடனும் இருக்கும். அதிக உடல் எடை, மூட்டு வலி, இதய நோய் மற்றும் புற்றுநோய் இருப்பவர்கள் அருந்திவர, மேற்கண்ட நோயின் தீவிரத்திலிருந்து விடுபடலாம்.

**6. ஒரு நாளைக்கு எவ்வளவு அருந்தலாம்?**

ஒரு நாளைக்கு 100 மி.லி. முதல் 200 மி.லி. வரை அருந்தலாம்.

**7. சர்க்கரை நோயாளிகள் இதனைப் பருகலாமா?**

தாராளமாகப் பருகலாம். மிராக்கிள் பானம் சர்க்கரை இல்லாமல் Base என்ற வடிவிலும் கிடைக்கின்றது. இதனைச் சர்க்கரை நோயாளிகள் அருந்தலாம். இதனை அருந்தும்போது சர்க்கரை நோயால் ஏற்படும் கால் மதமதப்பு, சோர்வு நீங்குகிறது. குறைந்த செலவில் அதிகப் பலன்கள் தரக்கூடிய மிராக்கிள் பானத்தை நாள்தோறும் பருகிவர, உடலுக்குக் கிடைக்கும் நன்மைகள் அதிகம்.

மருத்துவ ஆலோசனைக்கு 90432 12789, மிராக்கிள் பானம் பெற 82200 41227 என்ற எண்களில் தொடர்பு கொள்ளலாம். ஆலோசனைகள் இலவசமாகப் பெறலாம்.

**– டாக்டர் ப. சரவணன்**

கோவை காமாட்சிபுரி ஆதீனம் ஞானகுரு சாக்தஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகளுக்கு 7.5.2019–இல் 50 தான் வயது என்றால் நம்ப முடியவில்லை. 80 வயது என்றால் நம்பலாம்.

இவருடைய 50 ஆண்டுக் காலத்தில் குறைந்தபட்சம் 20 ஆண்டுகள் சேதாரம் செய்கூலிக்குப் போயிருக்கும். அப்படியானால், மிச்சமுள்ள இந்த 30 ஆண்டுகளில் 300 ஆண்டுச் சாதனையைச் செய்துள்ளார்.

திருப்பூர் மாவட்டம் பல்லடம் சாலையில் 'கோளறு பதி' நவக்கிரகக் கோட்டைக் கோவிலை 9 ஆண்டுகளுக்கு முன்பு பல கோடி செலவில் உருவாக்கியுள்ளார். அதற்கு முன்பு கோவை ஒண்டிப்புதூரில் நொய்யல் நதிக்கரையில் அங்காள பரமேஸ்வரி ஆலயத்தைத் திருப்பணி செய்து, காமாட்சிபுரி ஆதீனமாகப் பல கோடி செலவில் உருவாக்கியுள்ளார்.



# கோவை காமாட்சிபுரி ஆதீனத்தின் 51–ஆவது பிறந்த தினம்

அந்த ஆலயத்திற்குள் சென்றால், 51 தேவதைகளும் அழகு பொலியக் காட்சி தருகிறார்கள். அதுமட்டுமல்ல, அனாதைக் குழந்தைகளையும் எடுத்து வளர்த்து அவர்களுக்குத் "தாயுமாகிக்" கல்வி தந்து வருகிறார்.

2018 டிசம்பரில் சுவாமிகள் நடத்திய உலக சமாதான விழாவிற்கு இந்தோனேசியாவிலிருந்து 74 பக்தர்களைக் காமாட்சிபுரி ஆதீனத்திற்கு அழைத்து வந்தது குறிப்பிடத்தக்கது.

சிங்கப்பூர், மலேசியா இவருக்குக் கோவை சிங்காநல்லூர் – இராமநாதபுரம் போல. கம்போடியா அங்கோர் வாட் கோயிலுக்குப் பாத யாத்திரையாகவே போக ஆசைப்படுபவர். கோவை ஆனைகட்டி அர்ஷ வித்யா குருகுல நிறுவனர் சுவாமி தயானந்தா அவர்களுக்கு, சிவலிங்கேஸ்வர சுவாமிகள்தான் ஆன்மீகத் தளபதி. அருட்செல்வரின் தனிப்பெரும் அன்புக்குப் பாத்திரப்பட்டவர்.

பாரதத்திலுள்ள பேரூர், கௌமாரம், பழனி, மயிலம், தருமபுரம், திருப்பனந்தாள் மடாலயங்களுக்கு மட்டுமல்லாமல், வடநாட்டுத் திருமடங்களுக்கு இவர் யாத்திரை செல்லாத ஆண்டுகளே இல்லை. இத்தனையும் இந்த 30 ஆண்டுகளில்தான். ஆமாம்! இது பொய்யல்ல, புனைவல்ல. உண்மை, சத்தியம்!

– ந.நி.

# ஐம்பெரும் காப்பிய விழா!




## காந்தியடிகள் தமிழ்ப்பண்பாட்டு மையமும், தினமணி நாளிதழும், காந்தியடிகள் மெட்ரிக் பள்ளியும் இணைந்து நடத்திய ஐம்பெரும் காப்பிய விழா!

19.5.2019 அன்று கோவையில் காந்தியடிகள் தமிழ்ப் பண்பாட்டு மையத்தில் நடந்த ஐம்பெரும் காப்பிய விழாவில், கவிஞர் புவியரசு தலைமையில் கவிஞர் சிற்பி, சிலப்பதிகாரப் பேருரை நிகழ்த்துகிறார்.




மாலையில் 'ஓம் சக்தி' இணையாசிரியர் கவிஞர் பெ. சிதம்பரநாதன் தலைமையில் மதுரை சொ.சொ.மீ. சுந்தரம் மணிமேகலைப் பேருரை நிகழ்த்துகிறார். உடன் காந்தியடிகள் கல்வி நிலையத் தலைவர் திரு. கே.ஏ. சுப்பிரமணியன், செயலாளர் ஆர். சண்முகசுந்தரம், நெறியாளர் கவிஞர் புவியரசு மற்றும் திருச்சி பேரா. விஜயசுந்தரி ஆகியோர்.

# சக்தி ஆட்டோ காம்பொனன்ட் நிறுவனத்திற்குச் சிறப்பு விருது!

சக்தி குழும நிறுவனங்களில் தனித்த அடையாளத்தோடு செயல் படும் சக்தி ஆட்டோ காம்பொனன்ட் நிறுவனம், உலகின் முன்னணி கார் நிறுவனங்களுக்குத் தேவையான உதிரி பாகங்களை சர்வதேசத் தரத்தில் தயாரித்து வழங்கி வருகிறது. துல்லிய மான தரத்தாலும், மேம்பட்ட திறனா லும் அனைத்து முன்னணி கார் நிறுவனங்களின் முதல் தேர்வாக சக்தி ஆட்டோ காம்பொனன்ட் விளங்கி வருகிறது.

அதை உறுதிப்படுத்தும் வகையில், கார் தயாரிப்பு நிறுவனங்களின் தரச் சான்றுகளும், புகழ்பெற்ற விருதுகளை யும் சக்தி ஆட்டோ காம்பொனன்ட் நிறுவனம் வென்றிருக்கிறது.

அவ்வகையில், சக்தி ஆட்டோ நிறுவனத்தின் பிரதான வாடிக்கை யாளரான உலகப் புகழ் பெற்ற 'மாருதி – சுசுகி' நிறுவனத்தின் 2019–ஆம் ஆண்டிற்கான வருடாந்திர வாடிக்கை யாளர் சந்திப்புக் கூட்டம், ஹாங்காங் – மக்காவு (MACCAU - HONG KONG) நகரில் கடந்த மாதம் நடைபெற்றது.

1 & 2.5.2019 ஆகிய இரு நாள் களில் நடந்த இந்நிகழ்வில், மாருதி – சுசுகி நிறுவனத்தின் சிறப்பு விருது (Special Award for EXCELLENCE) சக்தி ஆட்டோ காம்பொனன்ட் நிறுவனத் திற்கு வழங்கப்பட்டது. சக்தி ஆட்டோ காம்பொனன்ட் நிறுவனத் திற்கு இது மேலும் ஒரு சிறப்பு.

– ந.நி.




சக்தி ஆட்டோ நிறுவனத்தின் இயக்குநர் மா. ஹரிஹரசுதன், தலைவர் மா. மயில்சாமி ஆகியோர், மாருதி சுசுகி நிறுவனத் தலைவர் திரு. பார்கவா அவர்களிடமிருந்து விருதினைப் பெற்றுக்கொண்ட காட்சி.

# கொய்யாத் தோப்பில் கொய்தவை...

பாஞ்சசன்யா

அன்பின் பரிசாக
யானைக்கு மோதிரம் போட
வெகுநாள் ஆசை
யானைக்கோ கை தெரிகிறது
விரல்கள்தான் தெரியவில்லை!

ஓடுதளம் இல்லை
எரிபொருள் நிரப்ப
தரை இறங்குகிறது
கொசு!

பல்லே தெரியவில்லை
எப்படிக் கடிக்கிறது
எறும்பு!

மரங்கள் பறவைகள்
புழுப் பூச்சிகள் செடி கொடிகள்
காட்டாறுகளின் கூட்டணிதானே வனம்
மணல் மட்டுமே கொதிக்கிற
பாலை வெளி எப்படி
பாலை வனமாகும்?

குழந்தைப் பருவத்தில் ஆடியது
அம்மா அப்பா விளையாட்டு
முதுமைப் பருவத்தில்
அம்மா அப்பாவே குழந்தைகளாகத்
தள்ளாடுகிறார்கள்!



Registered with Registrar of Newspapers for India No. 42582/83
Licensed to post without Pre-payment under Regn. No. TN/WR/CBE/016/WPP/2018-20

Date of Publication
28.5.2019

Regd.No.CB/016/2018-20
OM SAKTHI - JUNE - 2019